# ப்ரீஸ் சோப்புக்கு ஒரு 'புதுமைத் தோற்றம்'!




## புதிய மேலுறை

ரோஜா நிறமுள்ளது, லேஸ் போன்ற
சித்திர வேலைப்பாடு அமைந்தது




## புதிய வடிவம்

மழமழப்பு மிகுந்தது . . .
கண்கவரும் அழகுள்ளது

## அதிக நறுமணம்

உங்கள் மேனிமீது அதிக
நேரம் கமழ்ந்திருக்கும்

சரும ஆரோக்கியத்திற்கான ஆக்டமர் கலந்த சோப் —**ப்ரீஸ்**

BZ. 10-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# ஹெர்குலிஸ் ஒரு ஸைக்கிள் மட்டுமல்ல....
# வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை

காலேஜ் போகும் உங்கள் பையனுக்கு 'ஹெர்குலிஸ்' சைக்கிள் ஒன்று வாங்கிக் கொடுங்கள். அவன் வாழ்க்கையின் போக்கையே அது எப்படி மாற்றுகிறதென்பதைப் பாருங்கள். படிப்பிற்கும் சரி, விளையாட்டிற்கும் சரி, இப்போது அவனுக்கு நிறைய அவகாசம் கிடைக்கிறது. உற்சாகம் நிரம்பியுள்ள அவன் இப்போது வீட்டில் எல்லோருக்கும் உதவியாக இருக்கிறான்; வெளியே நல்ல சிநேகத் தொடர்பு ஏற்படுகிறது. இவ்வளவு மறுமலர்ச்சிக்கும் காரணமாயுள்ள 'ஹெர்குலிஸ்' அவன் காலேஜ் நாட்களுக்குப் பிறகும், அவனுக்கு சேவை புரிகிறது. 'ஹெர்குலிஸ்' ஸைக்கிள் போல் வருஷக்கணக்கில் நீடித்து உழைக்கும் சாதனங்களை வாழ்க்கையில் காண்பது அரிது.

சுமார் 50 வருஷங்களாக உயர்தர ஸைக்கிள் தயாரிப்பில் அனுபவமிருந்தவர்களால், இப்பொழுது இந்த நுட்ப வேலைப்பாடமைந்த 'ஹெர்குலிஸ்' ஸைக்கிள் டி.ஐ. ஸைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. உயர்தர அமைப்பும், பிரயாசையின்றி சுலபமாக ஓடும் தன்மையும் கொண்ட 'ஹெர்குலிஸ்,' சைக்கிள்களில் மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை.



உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலீடு

**ஹெர்குலிஸ்**

உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்

தயாரிப்போர்:
டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப்
இந்தியா லிமிடெட்,
மதராஸ்

TIC-312




மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற | விளம்பி௵
இதழ் 52 | தாயென்று கும்பிடடி பாப்பா—*பாரதியார்* | ஆடி௴ 12௳


# புலி வந்துவிட்டது! ஜாக்கிரதை!

சென்னையிலுள்ள மத்திய சர்க்கார் காரியாலயங்களில் பல உத்தியோகஸ்தர்களுக்கு, "நீங்கள் இந்திப் பரீட்சையில் தேறாததால், உங்கள் உத்தியோக உயர்வு தடுத்து நிறுத்தப்பட்டிருக்கிறது!" என்று பகிரங்கமாக எழுதியே உத்தரவுகளை அனுப்பியிருக்கிறார்கள் மேலிடத்தார் என்று நமக்குப் புகார்கள் வந்திருக்கின்றன

இந்தி ஆட்சிமொழியாக்கப்பட்டால் அதன் மூலம் சில பிரதேச மக்களைக் கொடுமைப்படுத்துவார்கள் என்று எச்சரிக்கை செய்து வந்தோம். நாம் குறிப்பிட்ட பாரபட்சத்தையும் அநீதியையும் காட்ட இப்போதே தலைப்பட்டு விட்டார்கள்.

இந்தி 1965 லிருந்துதான் ஆட்சிமொழியாக அமுலுக்கு வரவேண்டும் என்ற சட்டம் இருந்தபோதிலும், இப்பொழுதிருந்தே இந்நிலையை அமுலுக்குக் கொண்டு வந்து இந்தி பேசாத மக்களுக்குப் பாரபட்சம் காட்டிக் கொடுமைப்படுத்துகிறார்கள்!

இந்த நிலைமை தமிழ் நாட்டில் மட்டுமில்லை. பம்பாயிலிருந்து ஒரு அன்பர் அங்கு இழைக்கப்படும் அநீதியைப் பற்றி எழுதியுள்ள கடிதம் ஜூலை மாதம் 10-ம் தேதி "இந்து" பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது.

"இந்தி ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டிருந்த போதிலும், அது யாருடைய முன்னேற்றத்துக்கும் தடையாக நிற்காது என்று பாரத ஜனாதிபதி அவர்களும் பாரதப் பிரதமர் அவர்களும் எத்தனையோ தடவைகள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஜனாதிபதியும் பிரதமரும் தென்னாட்டுக்கு விஜயம் செய்யும்போதெல்லாம் மேற்கூறிய பல்லவியைத் திரும்பத் திரும்பப் பாடியதில் குறைவில்லை. சமீபத்தில் கூட நமது பிரதமர் பார்லிமெண்டில் 'தென்னாட்டவர்கள் இந்தி படிப்பதில் சிரத்தை கொண்டிருப்பதால் தான் படிக்கிறார்களே தவிர, அவர்கள் மேல் இந்தி திணிக்கப்பட்டதால் அல்ல' என்று கூறினார். ஆனால் இந்த வாக்குறுதிகளெல்லாம் வெறும் கண் துடைப்பாகி விட்டன. அதற்கு முற்றும் முரண்பட்ட முறையில் சர்க்கார் உத்தரவுகள் பிறப்பித்து வருகிறார்கள். இது பெரிதும் பரிதாபப்பட வேண்டிய விஷயம்.

"பம்பாயிலுள்ள மத்திய சர்க்கார் காரியாலயங்களிலுள்ள உத்தியோகஸ்தர்கள் இந்தி படித்தாக வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறார்கள். அதுமட்டுமல்ல; சர்க்கார் விதித்துள்ள இந்திப் பரீட்சையில் தேறவில்லை என்பதற்காக, அந்த உயர்தர உத்தியோகஸ்தர்களை வேலையில் காயப்படுத்தாமல், அவர்களுக்குப் பல நாட்களுக்குப் பிறகு வேலைக்கு வந்த இளம் உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் உத்தியோக உயர்வு அளித்து அவர்களை மட்டும் வேலையில் காயம் செய்திருக்கிறார்கள். இது இந்தி பேசாத மக்கள் மீது இழைக்கப்பட்டு வரும் பெருத்த அநீதியாகும்."

மற்றொரு நண்பர் மைசூர் ராஜ்ய சர்க்கார் இழைத்து வரும் கொடுமையைப் பற்றி மற்றொரு பத்திரிகைக்குப் பின்வருமாறு அடக்க ஒடுக்கமாகப் பணிவாகக் கெஞ்சும் தொனியில் எழுதியிருக்கிறார்.

"நாற்பத்தைந்து வயதான எல்லாச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் (நான்காம் வகுப்புச் சிப்பந்திகள் தவிர) இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குள் ஹிந்தியில் மத்தியமா பரீட்சையோ, அதற்குச் சமமான பரீட்சையோ எழுதித் தேறவில்லை என்றால் அவர்கள் உத்தியோகத்திலிருந்து நீக்கப்படுவார்கள் என்று மைசூர் அரசாங்கம் புதிய திட்டம் போடப் போவதாக அறிவித்திருக்கிறது. ஏற்கனவே உத்தியோகத்திலிருக்கிறவர்களை

இம்மாதிரி அநீதிக்கு உள்ளாக்கலாமா? அதற்குத் தண்டனையும்கூட இவ்வளவு கடுமையாக இருக்க வேண்டுமா?''

இப்படி இந்தி பேசப்படாத பகுதிகளில் அநீதிகள் இழைக்கப்பட்டு வருகின்றன.

இந்திய நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில் இந்தி பேசிய மக்கள் மட்டும் பங்கு கொள்ளவில்லை. எல்லா மொழி பேசுபவர்களும் போட்டி போட்டுப் பங்கெடுத்துக் கொண்டார்கள். ஆகவே, இந்த நாட்டை இந்தி பேசுபவர்கள் மட்டும்தான் ஆள வேண்டும் என்றில்லை. இந்தி ஆட்சி மொழியாக்கப் பட்டால், இந்தியைத் தாய்மொழியாகப் பெற்றவர்களுக்குப் பெருத்த சலுகை அளித்ததாகும். மற்றவர்கள் மாற்றாந்தாய்க் குழந்தைகளாக நடத்தப்படுவார்கள் என்று எச்சரிக்கை செய்து வந்தோம்: இந்த நாட்டில் எல்லா மக்களுக்கும் சம உரிமையுண்டு. அவரவர்கள் உரிமையைச் சண்டை போட்டுப் பெற்றேயாக வேண்டும். இப்பொழுது தமிழ் மக்கள் விழிப்புடன் இல்லாமல் தூங்கி விட்டார்களானால், பின்னர் நிரந்தரமான அநீதிக்கு ஆளாக்கப் பட்டு விடுவார்கள். அந்நிய ஆதிக்கத்தை, பலாத்கார அடக்குமுறையைத் தீரத்தோடு எதிர்த்துப் போராடிய வீரத் தமிழ் மக்கள், இப்போது இழைக்கப்படும் அநீதியை வாய் விட்டுச் சொல்லி நீதி பெறக் கிளர்ச்சி செய்யா விட்டால், எதிர்காலத் தமிழ் மக்களின் கொடிய சாபத்துக்கு ஆளாக நேரிடும்.

பழைய தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நியாயத்துக்குப்போராடவேண்டும்.

## அபாய நிலை

''ருஷியா நீதிக்கும் நேர்மைக்கும் புறம்பான நாடு. அது தன் எல்லைகளை விரிவுபடுத்திக் கொள்ளப் பார்க்கும். அண்டை அயல் நாடுகளுக்குத் தன் ராணுவத்தை அனுப்பி ஆக்கிரமித்துக் கொள்ளப் பார்க்கும். கம்யூனிஸ்டுகள் பொல்லாதவர்கள். தர்மம், நியாயம் முதலிய உணர்ச்சிகளற்றவர்கள். கம்யூனிஸ்டுக் கொள்கையே அதர்மத்தில் முளைத்தது. உலக ஆக்கிரமிப்பை அடிப்படையாகக் கொண்டது. அத்தகைய அக்கிரமக்காரர்களிடமிருந்து, அத்தகைய அக்கிரமக்காரர்களின் ஆக்கிரமிப்பி லிருந்து, இந்த உலகை மீட்பதே நம்முடைய கடமை. அதுவே நம்முடைய கொள்கை'' என்று அமெரிக்க அரசியல் தலைவர்கள் அடிக்கடி தம்பட்டம் அடித்துக் கொண்டு வந்தார்கள். ராட்சத ஆயுத உற்பத்தியைப் பற்றியும், நாட்டோ ஸீட்டோ முதலிய ராணுவ கூட்டுறவுகளில் பொதிந்து கிடக்கும் ஆபத்தைப் பற்றியும் கூறி வந்தபோது, அமெரிக்கா மேற்கண்டவாறு சமாதானம் சொல்லி வந்தது.

இப்படிப் பேசிய அமெரிக்கர்கள் ருஷ்யாவைப் பற்றி ஹங்கேரி விஷயத்தில் என்ன குற்றம் சாட்டினார்களோ, அதே குற்றத்தைப் பட்டப் பகலில் கொஞ்சம்கூட நீதி, நியாயம் பார்க்காமல் இழைத்திருக்கிறார்கள். லெபனான் என்னும் சின்னஞ்சிறு நாட்டில் கப்பற் படைகளுடன் அமெரிக்கா திடீரென்று துராக்கிரமப் பிரவேசம் செய்து விட்டது.

இதனால் அமெரிக்காவின் நல்ல பெயரை அழித்து விட்டார்கள். மேல் நாட்டு நடவடிக்கைகளில் நம்பிக்கையை இழக்கச் செய்து விட்டார்கள். ஆசிய நாடுகளில் குடியரசு வளர்வதைத் தடுத்து எதேச்சாதிகாரம் நீடித்து வர வழி தேடி வருகிறார்கள்.

லெபனானில் உள் நாட்டு ஜனாதிபதி தேர்தல் விஷயமாகக் கலவரம் ஏற்பட்டது. இப்பொழுது தலைமைப் பதவியிலிருக்கும் ஜனாதிபதி சில நாட்களில் பதவியை விட்டு விலக வேண்டும். அதற்கு முன் புது ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இவ்விஷயம் பற்றி லெபனான் மக்களுக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டது. ஆட்சியிலிருக்கும் ஜனாதிபதி பதவியிலிருந்து விலகி, புது ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வழி செய்ய வேண்டும் என்று கிளர்ச்சி செய்தனர். இந்தக் கிளர்ச்சி இரண்டு மாதகாலமாக நடந்து வருகிறது. இதை எதிர்த்து வந்த பதவியிலிருக்கும் ஜனாதிபதியினால் கிளர்ச்சியை ஒடுக்க முடியவில்லை. ஜனாதிபதியின் கை சோர்ந்து வந்தது.

இதைப் பார்த்து அமெரிக்கா, 'லெபனானில் அந்நிய நாடுகளின் குறுக்கீடு இருக்கிறது. அந்நிய தேசத்தினர் கலகக்காரர்களைத் தூண்டி விடுகின்றனர். ஏராளமான அந்நிய மக்கள் லெபனானில் புகுந்து கலகக்காரர்களுக்கு உதவி வருகின்றனர்' என்று கூறியது. அதாவது எகிப்தும் ருஷ்யாவும் கலகக்காரர்களுக்கு உடந்தையாக இருக்கின்றனர் என்று கதை கட்டி விட்டனர்.

லெபனானின் உண்மை நிலை அறிந்து வரச் சென்ற ஐ. நா. சபையின் தலைவர் ஹாமர்ஷீல்டு, நிலைமையை நன்கு பரிசீலனை செய்து விட்டு, ''லெபனானில் எந்தவிதக் குறுக்கீடும் இல்லை. எந்த அந்நிய தேசத்தினரும் தலையிடவில்லை'' என்று தீர்ப்புக் கூறி விட்டார்.

ஐ. நா. சபையின் தலைவரிடம் உலகத்துக்குப் பெரு மதிப்பு உண்டு. சமீபத்திய பல உலக விவகாரங்களில் தலையிட்டு, தர்ம நியாயமான முறையில் நடந்து உலகத்துக்கு நேரவிருந்த பல ஆபத்துக்களைத் தடுத்திருக்கிறார். இவ்வளவு நல்ல பெயரும் மதிப்பும் பெற்ற ஹாமர்ஷீல்டின் அபிப்பிராயத்தைப் புறக்கணித்து விட்டு, ஐ. நா. சபைக்குத் தகவல் கொடுக்காமலும் சம்மதம் பெறாமலும், ''லெபனானில் அந்நியக் குறுக்கீடு இருக்கத்தான் செய்கிறது'' என்று சொல்லிக் கொண்டு, லெபனானில் கப்பற் படைகளை அனுப்பிப் பிரவேசித்தது வெறும் கொள்ளைக்காரர்களின் வேலையே தவிர வேறு இல்லை.

ஐ. நா. சபையை அவமதித்துச் செய்யப் பட்ட இந்த அமெரிக்க — பிரிட்டன் நடவடிக்கை, உலகில் கலகம் ஏற்பட்டால் அதைத் தடுத்து நிறுத்துவதற்கு ஒரு சக்தியும் இல்லாமல் செய்துவிட்டது. அது மட்டும் அல்ல; உலகில் எந்த நிமிஷமும், உலகம் அழிந்து

## குரங்குகளின் அட்டகாசம்!




## "நமக்கு" நல்ல காலம்!



டில்லி சர்க்கார் காரியாலய சேவகர்களில் ஒருவர்:— "இப்பொழுது நாம் வெறும் 'டவாலி சேவகர்கள்தான். இந்தி ஆட்சிமொழி ஆனதும் பார்! தென் இந்தியாவில் நாமெல்லாம் தாசில்தாரராகவோ, டிப்டி கலெக்டராகவோ ஆகிவிடலாம்! ஹிஹ்ஹி!"

போகக் கூடிய பெரும் போர் மூண்டுவிடக் கூடிய நிலையில் கொண்டுவைத்து விட்டது.

"அமெரிக்காவின் நடவடிக்கையைச் சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம்" என்று ருஷ்யா அறிவித்துள்ளது. இதன் பொருள் என்ன? அமெரிக்கா தன் படைகளை வாபஸ் பெற்றுக் கொள்ளா விட்டால் ருஷ்யா யுத்தத்துக்குத் தயார் என்பதே. யுத்தம் என்றால் முடிவில் அணு ஆயுதப் போர் தான்; ஹைட்ரஜன் குண்டு யுத்தம்தான்.

உலகைக் காப்பாற்ற வேண்டுமானால் அமெரிக்காவின் இந்த அசட்டுத்தனத்தை உலக மக்களெல்லாம் நன்கு உணரச் செய்து, லெபனானில் இறங்கியுள்ள துருப்புக்களை உடனே வாபஸ் பெறச் செய்வதுதான்.

பிரிட்டன் சூயஸ் விஷயத்தில் அக்கிரமமாக நடந்துகொண்ட போது, அமெரிக்கா நியாயத்தின் அடிப்படையில் நடந்து கொண்டு பிரிட்டனை அந்தச் சண்டையில் வாபஸ் பெறச் செய்தது. அதனால் பிரிட்டன் அவமானமும் கோபமும் கொண்டது. ஆனால் இப்பொழுது அமெரிக்காவின் அக்கிரமச் செயலுக்குப் பிரிட்டன் உடந்தையாக இருக்கிறது.

அமெரிக்காவின் தவற்றை உணரச் செய்யும் பொறுப்பு உலக அமைதியை விரும்பும் மற்ற மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. சுமை இக்கான யோசனையைக் கேளாமல், அமெரிக்க-பிரிட்டிஷ் துருப்புக்களை உடனே வாபஸ் பெறுவதில் பிடிவாதம் செய்தால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பது கேள்வி. நியாயத்தை எடுத்துச் சொல்லி விட்டோம். அதற்கு மேல் நாம் என்ன செய்ய முடியும்? அமெரிக்கப் பணத்தை வாங்கிக் கொண்டு, ஐந்தாண்டுத் திட்டத்தை நடத்துவோம் என்று சொன்னால் நியாயமாகாது என்று சென்ற வாரம் ராஜாஜி சென்னை பொதுக் கூட்டத்தில் தெரிவித்திருக்கிறார்.

அக்கிரமமான முறையில் நடந்து கொண்டுள்ள அமெரிக்காவின் கடன் உதவியை மறுக்க வேண்டியது நம்முடைய கடமையாகிறது.

நேர்மையற்ற பிடிவாதக்காரர்களிடம் தொடர்பு வைத்துக் கொள்ளாமல் அவர்கள் கொடுக்கும் உதவியை மறுப்பது காந்தி மகான் காட்டிய வழியாகும். அந்தத் தியாகத்திலும் மறுப்பிலும் பெரும் சக்தி உளது என்பது மகாத்மா காந்தியின் அடிப்படை உபதேசம். உதவியை மறுப்பதினால் நமக்குக் கஷ்டமும் நஷ்டமும் உண்டு. மகத்தான நஷ்டம் உண்டு என்பதில் சந்தேகமில்லை. அம்மாதிரி நஷ்டத்தை மேற்கொள்ளுவதே ஆன்ம சக்தியைத் தரும். கஷ்டம் நஷ்டம் இரண்டையும் மேற்கொண்டு ஆசிய நாடுகளுக்கு உதவி, அவர்கள் சங்கடத்தைத் தீர்த்தோமானால் நமக்குச் சாசுவதமான பலம் உண்டாகும். அமெரிக்காவுக்கும்கூட, நம்மிடத்தில் மேலான மதிப்பும் பயமும் கலந்த கௌரவம் ஏற்படும். அதனாலும் லாபமடைவோம். கடமையைத் தைரியமாகச் செய்வதில், நஷ்டத்தைக் கண்டு பயப்படாமல் காந்தியடிகள் காட்டிய வழியில் நடந்தோமானால் நிச்சயமாக உலகத்தில் உயர்ந்த கௌரவ ஸ்தானத்தை அடைவோம்.

# ஆங்கிலமே நீடிக்க வேண்டும்!

ஆந்திரப் பிரதேசத்தின் தலைநகரான ஹைதராபாத்தில் சென்ற 19-ந் தேதி ஆட்சி மொழி மகாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. ராஜாஜி அவர்கள் மகாநாட்டில் கலந்து கொண்டு பாரதத்தின் ஒற்றுமைக்கும் உயர்வுக்கும் ஆங்கிலமே ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறினார்கள். ஆட்சி மொழியாக ஆங்கிலமே நீடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி மகாநாட்டுக்கு எண்ணற்ற பிரமுகர்கள் அனுப்பிய செய்திகளில் சிலவற்றைப் பிரசுரித்திருக்கிறோம்:

"தன்னுடைய கொள்கைகளைப் பிடிவாதமாகவே கடைப்பிடிக்க மத்திய அரசாங்கம் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. இதனால் நாட்டுக்கு நன்மை உண்டாகாது."

— ஸர் மிர்ஸா இஸ்மெயில்

"வருங்கால உலகில் இந்தியாவின் ஸ்தானத்தைப் பற்றியே நான் முக்கியமாகக் கருதுகிறேன். அதனால்தான் நமது தேசம் முழுவதிலும் எல்லாவற்றுக்கும் ஆங்கில மொழியே இருக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறேன்."

— தளபதி கே. எம். கரியப்பா

"அரசியல் சட்டத்திலிருந்து 343 வது ஷரத்தை நீக்கிவிடவும், எட்டாவது ஜாபிதாவில் தேசிய மொழிகளுள் ஆங்கிலத்தையும் ஒன்றாகச் சேர்க்கவும் இந்த மகாநாடு கட்டாயமாக வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஆட்சி மொழிப் பிரச்னை இன்னமும் பரிசீலனை செய்யும் கட்டத்திலேயே இருக்கையில், மைசூர் ராஜ்யம் அவசரப்பட்டு உத்தியோகஸ்தர்களுக்கு ஹிந்திப் பரீக்ஷை ஏற்படுத்தி விருப்பதை வன்மையாகக் கண்டிக்கிறேன். மாறுதல் செய்யவேண்டுமென்பதற்காகவே மாற்றம் செய்வதுதான் சர்க்காரின் தற்காலக் கொள்கை போலும்."

—டி. வி. குண்டப்பா, பெங்களூர்.

"தேசத்தில் ஆங்கிலம் நிலைத்திருக்கும், நிலைத்திருக்கத்தான் வேண்டுமென்பது என் அபிப்பிராயம். திரும்பத் திரும்ப எத்தனை தரம் சிந்தித்துப் பார்த்தாலும் மேலே சொன்ன அபிப்பிராயம்தான் எனக்கு உறுதியாகிறது." வி. குன்ஹன் ராஜா, வால்டேர்.

மற்றும் ஸர் எம். விச்வேச்வரய்யா, ஸர் மாதவ ராவ், திருவாளர்கள் பி. டி. ராஜன், எ. இ. டி. பாரோ எம். பி., டாக்டர் ஸி. பி. ராமசாமி அய்யர், டாக்டர் ராதா விநோத் பால், ப்ராங்க் அந்தோனி எம். பி., டாக்டர் எம். ஆர். ஜெயகர் முதலியவர்களும் மகாநாட்டின் நோக்கங்களை வரவேற்று நாட்டின் ஆட்சி மொழியாக ஆங்கில மொழிதான் இருக்க வேண்டும் என்பதற்கு ஆதரவு கூறி வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருக்கிறார்கள்.

# அருள் வாக்கு

ஒவ்வொரு ஆசிரமத்துக்கும் சிறப்பான தர்மங்கள் இருக்கின்றன. அதேபோல சந்நியாசிகளுக்கும் உண்டு. அவர்கள் ஒரே இடத்தில் நீண்டகாலம் தங்கக் கூடாது. ஊர் ஊராகச் சென்றுகொண்டே ஜனங்களுக்கு ஆன்மீய விஷயங்களைப் போதிக்க வேண்டும். அரசாங்க பரிபாஷையில் பொதுஜனத் தொடர்பு என்று சொல்லுவதுபோல் இதைச் செய்ய வேண்டியது.

சாதுர்மாஸ்யகாலம் ஆனிமாத பூர்ணிமையிலிருந்து இரண்டுமாதம். இந்தக் காலத்தில் மட்டும் சந்நியாசிகள் ஒரே இடத்தில் தங்கலாம் என்று அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதில் ஒரு தத்துவம் அடங்கியிருப்பதாகத் தெரிகிறது. சந்நியாச ஆசிரமத்தின் முக்கிய தர்மம் அஹிம்ஸை. எந்த ஜீவனுக்கும் எவ்வித ஹிம்ஸையும் செய்யக்கூடாது. சந்நியாசி நடந்தே செல்ல வேண்டுமென்ற விதிக்கும் இதுதான் காரணம். நடக்கும்போது கவனிக்காமலே ஒரு பூச்சி, புழுவை மிதித்து விட்டால் கூட அதனால் அவற்றின் உயிருக்கு ஹானி ஏற்படாது. பாதங்களின் அமைப்பே அவ்விதம். பூச்சி மிதிபட்டாலும் பாதங்களின் குழைவு இடுக்குகள் வழியாகத் தப்பிச் சென்று விடும். மேலும், இந்த இரண்டுமாத காலம் சாதாரணமாக மழைக் காலம். மழைக் காலத்தில் பூச்சி, புழுக்கள் அதிகமாக உண்டாகி, ஆங்காங்கு வழிகளில் எல்லாம் செல்லக் கூடியவை. அவை மிதிபடாமல் இருக்கவே, ஓரிடத்தில் சந்நியாசி தங்குகிறான். சாதுர்மாஸ்ய சங்கல்பத்தின் அர்த்தமும் இதுதான்.

அஹிம்ஸையை அனுஷ்டிக்க வேண்டுமென்பதற்காகவே சந்நியாசிகள் சமையல் செய்யக் கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. சமையல் செய்யும்போது ஜலத்திலோ, விறகிலோ, காய்கனிகளிலோ இருக்கும் பூச்சிகள் இறக்க நேரிடலாம். தான்யத்திலுள்ள ஜீவன்களும் கொல்லப்படும். அதனால் கிருஹஸ்தர்கள் கொடுக்கும் பிக்ஷையைக் கொண்டு சந்நியாசிகள் திருப்தியடையவேண்டும். சந்நியாசிகள் பச்சை இலையைப் பறிக்கக் கூடாது. அது செடிகளின் உயிருக்கு ஹிம்ஸை செய்வதாகும். சந்நியாச ஆசிரமத்தில் அக்னிக்குச் சம்பந்தமே கிடையாது. அதனால்தான் அவர்கள் ஹோமம் எதுவும் செய்வதில்லை.

இந்த அஹிம்ஸையும் சாதுர்மாஸ்ய விரதமும் ஹிந்து மதம், புத்த மதம், ஜைனமதம் ஆகிய மூன்று மதங்களுக்கும் பொதுவாக உண்டு. இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த அசோக சக்கரவர்த்தியின் சாஸனங்களிலிருந்து இது தெரிய வருகிறது.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

**இலங்கையில் சமீபத்தில் நடைபெற்ற கலவரங்கள் சம்பந்தமாகக் கண்ணீரும் கம்பலையுமாக நூற்றுக்கணக்கில் கடிதங்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. இங்கே கொடுக்கப்பட்டிருக்கும் கடிதம் அத்தகைய கடிதங்களில் ஒன்று. தமிழ் மக்கள் எத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை இது தெளிவுபடுத்தும். — ஆசிரியர்**

# மாதிரிக்கு மற்றொரு கடிதம்

சென்ற 24, 25-5-58 ஆகிய நாட்களில் தமிழரசுக் கட்சியினர் வவுனியாவில் மகாநாடு நடத்தினார்கள். மகாநாடு ஒழுங்காக நடைபெறக்கூடாதென்ற நோக்கத்தில் மகாநாட்டுக்குத் தமிழர்களைப் போகவிடாது தடுக்க மேற்கண்ட தேதிகளில் இரவு 8-45 மணிக்கு மட்டக்களப்பிலிருந்து புறப்பட்ட ரயில் இரண்டுமைல் தூரம் சென்றதும், ஒரு இடத்தில் தண்டவாளத்தைவிட்டு விலகும்படி செய்யப்பட்டது. பெட்டிகள் நொறுங்கிப் பொருள் சேதமும், உயிர்ச் சேதமும் ஏற்பட்டன.

அவை அப்படியிருக்க யாழ்ப்பாணம், மட்டக்களப்பு ஆகிய பகுதிகளிலிருந்து மகாநாட்டுக்குப் போன தமிழர்களைப் பொலன்னருவா, மதவாச்சி பகுதியில் ஆயிரக்கணக்கான சிங்களவர்கள்கூடி அடித்துத் தொந்தரவு செய்தனர். அவர்களிடமிருந்த பொருள்களைப் பறித்துக்கொண்டு பல குழப்பங்கள் செய்தனர். பொலன்னருவா பகுதியில் இருந்த தமிழ்க் குடும்பங்களைக் கொலை செய்தனர். சொத்துக்களைக் கொள்ளையடித்தனர்.

மறுநாள் சுமார் மூவாயிரம் சிங்களவர்கள் கூட்டமாகக் கூடிக் குழப்பம் செய்து பொலன்னருவா போலீஸ் நிலையத்துக்கு நெருப்பு வைக்கப்போனபோது போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில் மூன்று சிங்களவர்கள் இறந்து விட்டார்கள். போலீசாரால் நிலைமையைச் சமாளிக்க முடியாது போகவும் ராணுவத்தினர் போய்க் குழப்பத்தை அடக்கி விட்டார்கள். அதே நாட்களில், அதாவது 25-5-58, 26-5-58, 27-5-58 ஆகிய தினங்களில் இலங்கையின் பல பகுதிகளிலும், குறிப்பாக, கொழும்பு நகரம், பம்பலப்பிட்டிய, வெள்ளவத்தை, கல்கிசை, கமன்ட் லெவுனியா, ரத்மலானை, பாணந்துறை, காலிப்பகுதிகள், குருநாக்கல், கண்டிப்பகுதி, கம்பளை, நாவல்பட்டி, பதுளைப் பகுதிகள் ஆகிய இடங்களில் பெருங் கூட்டமாகச் சிங்களவர்கள் கூடிக்கொண்டு இந்தியத் தமிழர்கள், யாழ்ப்பாணத் தமிழர்கள் வீடு, கடைகளுக்கு நெருப்பு வைத்துக் கொளுத்தியும் வீடு, கடைகளில் புகுந்து கொள்ளையடித்தும், சில இடங்களில் தமிழர்களைக் கொன்றும், ரயில்களை நிறுத்தி அடித்துத் தொந்தரவு செய்தும் ஆண், பெண், பிள்ளைகளைக் கொலை செய்தும், பெண்களைக் கற்பழித்தும் சொத்துக்களைக் கொள்ளையடித்தும் செய்திருக்கும் அட்டகாசங்கள் சகிக்க முடியாது.

தமிழ் ஜனங்கள் உயிரைமட்டுமாவது காப்பாற்றிக்கொள்ள நினைத்து அக்கம்பக்கங்களிலுள்ள போலீஸ் நிலையங்களுக்கும், மற்றும் பாதுகாப்பான இடங்களுக்கும் ஓடிவிட்டார்கள். யாழ்ப்பாணத்தவர்களில் பெரிய அரசாங்க உத்தியோகஸ்தர்கள், பணக்காரர்கள் கட்டத் துணி இல்லாமலும், உணவு இல்லாமலும் அரசாங்க ஆதரவில் உடனே ஏற்பாடு செய்யப்பட்ட அகதிகளின் இருப்பிடங்களுக்குப் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

பாணந்துறையில் யாழ்ப்பாணத்தவர்கள் முயற்சியில் புதிதாகக் கட்டப்பட்ட சுப்பிரமணியசுவாமி கோவிலையும் விக்கிரகத்தையும் உடைத்து எறிந்து விட்டுச் சுவாமி இருந்த இடத்தில் புத்தர் சிலையை வைத்திருக்கிறார்கள். கோவிலில் இருந்த அர்ச்சகர் இருவரைக் கால் கையைக் கட்டிப் போட்டு அவர்கள் மீது பெட்ரோலை ஊற்றி நெருப்பு வைத்துக் கொன்று விட்டார்கள்.

இனி, என்னைப் பற்றிச் சொல்லுகிறேன். 26-5-58 பிற்பகல் 1-30 மணிக்கு நான் காங்கிரஸ் காரியாலயத்தில் இருக்கும்போது கடைவீதியில் காடையர்கள் கூட்டம் கூடி, எல்லாத் தமிழர்கள் கடைகளையும் வீடுகளையும் மூடும்படி சொல்லிக் குழப்பம் செய்ய ஆரம்பித்தார்கள். கடைகள், வீடுகளெல்லாம் உடனே மூடப்பட்டன. நிலைமை மிகவும் மோசமாகும் முன் சுமார் 3-30 மணிக்கு ஒரு காரில் ஏறி நான் என் வீடுபோய்ச் சேர்ந்தேன். அன்றுமுதல் ஐந்து நாட்கள் வீட்டைவிட்டு வெளியே போகாமல் பயத்தோடும் பீதியோடும் இருந்தேன்!

இலங்கைவாழ் இந்தியர்களுக்கு இனிமேல் என்ன கதி வருமோ, தெரியாது.

— ஒரு இலங்கை இந்தியத் தமிழன்.

---

**பாரத நாட்டின் இன்றையப் பொருள் நிலையும்**

அதன் முக்கிய அம்சமாகிய

**அந்நியக் கடன்களும் அவற்றின் விளைவும்**

என்ற விஷயம் பற்றிய இந்த ஆராய்ச்சி அரங்கத்தில்

அடுத்த வாரம்

**டாக்டர் சி. பி. ராமசாமி ஐயர், டாக்டர் பி. ஜே. தாமஸ், திரு எஸ். ஓய். கிருஷ்ணசாமி I.C.S. Retired, திரு எம். ஆர். ஷராப்**

ஆகிய மேதைகளும் அறிஞர்களும் கலந்து கொள்கிறார்கள்.

# தக்ஷிண ரெயில்வே

## அறிவிப்பு

### சலுகைக் கட்டண ரிட்டர்ன் டிக்கெட்டுகள் வெளியீடு

15-7-1958 முதல் 15-9-1958 வரை சலுகை கட்டண ரிட்டர்ன் டிக்கெட்டுகள், கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு முதல், இரண்டாவது, மூன்றாவது வகுப்புகளுக்கு 1½ மடங்கு ஒரு பிரயாண கட்டணங்களில் கொடுக்கப்படும்.

(i) இரு ஸ்டேஷன்களுக்கிடையே குறைந்த பட்ச வித்தியாச தூரம் 300 மைல்களுக்கு மேல் இருந்தால் இந்த ரயில்வேயிலும் மற்ற இந்திய ரயில்வேக்களோடு சம்பந்தப்பட்டிருந்தாலும் ரிட்டர்ன் டிக்கெட்டுகள் கொடுக்கப்படும். 301 மைல்களுக்கு குறைந்த தூரத்தில் இருக்கும் ஸ்டேஷன்கள் விஷயத்தில் இரண்டு பிரயாண கட்டணங்கள் 301 மைல்களுக்கான ரிட்டர்ன் கட்டணத்தை விட அதிகமாயிருந்தாலும் இந்த வித்தியாச விதி செல்லும்.

ரிட்டர்ன் டிக்கெட்டுகள், 301 மைல்களுக்குண்டான கட்டணங்களுக்குக் கொடுக்கப்படும். இந்த விதியில் தூரத்தைக் குறிப்பது வசூலிடபதற்குக் கட்டணத்தை குறிப்பதாகும்.

(ii) மெயில்/எக்ஸ்பிரஸ் மற்றும் சாதாரண டிக்கெட்டுகள் அவசியமாகும்போது ஒன்று சேர்த்து கொடுக்கப்படும்.

(iii) ரிட்டர்ன் பிரயாணத்தில் நடுவில் இறங்க அனுமதிக்க முடியாது. ஆனால் சாதாரண ஒரு பிரயாண டிக்கெட்டு வைத்திருப்பவர்களுக்குண்டான விதிகளின்படி பிரயாணத்தை ஆரம்பிக்கும்போது அனுமதிக்கப்படும்.

(iv) ரிட்டர்ன் பிரயாணத்தை ஆரம்பிக்குமுன்னர் ரிட்டர்ன் பிரயாண ஆரம்பத் தேதியைக் காட்டும் பொருட்டு பிரயாணிகள் தங்கள் ரிட்டர்ன் டிக்கெட்டுகளின் மற்றப் பாதியைப் பிரயாணத்தை ஆரம்பிக்கும் ஸ்டேஷனில் இருக்கும் டிக்கெட் கொடுக்கும் இடத்திலோ அல்லது வாயிற்படியில் இருக்கும் டிக்கெட் பரிசோதகரிடமோ காட்டி, பிரயாண ஆரம்ப தேதியைக் குறிப்பிட வேண்டும். அல்லது தாங்களாவது இங்கியிலாவது அல்லது அழிக்க முடியாத பென்ஸிலினாலாவது தேதியைக் குறிப்பிட வேண்டும்.

அவ்வாறு தேதி குறிப்பிடாது ரிட்டர்ன் டிக்கெட் பாதியை வைத்திருக்கும் பிரயாணிகள், டிக்கெட் இல்லாது பிரயாணம் செய்வதாகக் கருதப்பட்டு, பின் கண்டபடி அதிகப்படியான கட்டணம் செலுத்த நேரிடும்.

(a) மொத்த தூரத்துக்குள்ள இரண்டு ஒரு பிரயாண கட்டணங்களுக்கும் ஏற்கனவே செலுத்திய சலுகை கட்டணத்திற்குமுள்ள வித்தியாசத் தொகையுடன்,

(b) மேற்கண்டபடி கட்டவேண்டிய தொகைக்குச் சமமாகவும் ஆனால் ஒரு டிக்கெட்டுக்கு ரூ. 5/-க்கு அதிகமாகாமலும் அதிகப்படி கட்டணம் செலுத்த வேண்டும்.

(v) ரிட்டர்ன் டிக்கெட்டுகள் கொடுக்கப்படும் தேதியின் நடு இரவிலிருந்து கணக்கிடப்பட்டு கீழே கண்டபடி ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் கொடுக்கப்படுவதாகவும் :

| | | |
|---|---|---|
| 301 முதல் 500 வரை | — | 20 நாட்கள் |
| 501 முதல் 750 வரை | — | 25 நாட்கள் |
| 751-ம் அதற்கு மேலும் | — | 30 நாட்கள் |

(vi) 30-9-1958 நடு இரவுக்குப் பிறகு ரிட்டர்ன் பிரயாணத்தை முடிப்பதற்கு ரிட்டர்ன் டிக்கெட்டுகள் கிடைக்காது.

(vii) முன்னதாகவே டிக்கெட் கொடுக்கும் வசதியுள்ள இடங்களில், பிரயாண ஆரம்ப தேதியின் நடு இரவிலிருந்து கணக்கிடப்பட்டு இடையே உள்ள தவணை நாட்கள் தீர்மானிக்கப்படும்.

சீப் கமர்ஷியல் சூப்பரின்டெண்டெண்ட்.




## 40

மனம், வாக்கு, காயம் மூன்றும் அடக்கியாளப்பட்டு மாசு தீர்ந்த பான்மை பெற வேண்டும். தருமத்துக்கு முரண்பட்ட எண்ணங்கள் உள்ளத்தில் இல்லாதிருப்பது அவசியம். பேச்சும் தருமத்துக்கு உதவாத வகையில இருக்கலாகாது. எண்ணத்தில் மாசு இல்லையே, பேச்சு எப்படியிருந்தால் என்ன என்று வாதிக்கலாகாது. மனத்தையும் உடலையும் காப்பதோடு வாயையும் காப்பாய் என்கிறார் முனிவர்.

மாசு நிறைந்த உள்ளத்திலிருந்து தோன்றும் பேச்சைப் பற்றிப் பொறாமை, அழுக்காறு, வெஃகாமை முதலிய விஷயங்களைப் பற்றிச் சொல்லும்போதே சொல்லி முடிந்தது என்று வைத்துக் கொள்ளலாம். தீய எண்ணத்தோடு சேராத பேச்சாக இருந்தாலும், பயனற்ற பேச்சாக இருக்கலாகாது என்பதற்காக அதைத் தனியாக எடுத்துக் கொண்டு உபதேசிக்கிறார்.

துறவிகளுக்கு மௌனம் மிக முக்கியமான விரதம். அதைப் போல் இல்லற வாழ்க்கையில் இருப்பவர்களுக்குப் பயனற்ற பேச்சை விலக்குவது முக்கியமான விரதமாகும். பூரண மௌனம் இல்லறத்தாருக்கு வேண்டியதில்லை. பயனற்ற பேச்சில் மகிழாமலிருந்தாலே போதும்.

பயன் என்றால் அறம் வழுவாத பொருளும் இன்பமும். இவற்றில் ஏதாவது ஒன்றுக்கு உதவுவது பயனுள்ள சொல். இவற்றில் எதையும் பயவாதது "பயனில சொல்." கேட்டார்க்கும் தமக்கும் பயன்படாத பேச்சை விலக்குங்கள் என்கிறார் முனிவர் கிரகஸ்தர்களை நோக்கி.

• • •

பயனற்ற பேச்சைப் பேசுவது கூடாது. அதிலும் நண்பர்கள் பந்துக்கள் அல்லாத மற்றவர்கள் கூடியிருக்கும் இடத்தில் பேசவே கூடாது. எல்லாரும் உன்னை இகழ வேண்டும் என்று விரும்பினாயானால் அத்தகைய பேச்சு பேசு, இல்லையானால் அதை விலக்கு என்கிறார்.

நண்பர்களுக்குத் துன்பம் உண்டாக்கினாலும் பொறுத்துக் கொள்வார்கள். பல்லார்முன் பயனில சொற்கள் பேசுவதினால் அதிகம் தீமை விளையும்.

பேச்சில் பயனும் பண்பாடும் இருக்க வேண்டும்.

> பயன்இல பல்லார்முன்
> சொல்லல் நயன்இல
> நட்டார்கண் செய்தலின் தீது.

ஒருவகைப் பேச்சினால் உண்டாகும் தீமை, தீய செயலினால் உண்டாவதை விட அதிகமாகும் என்கிறது இக்குறள். காரணம், நண்பர்களுக்குச் செய்யப்படும் நயனில்லாத செயல்களை நட்பின் காரணம் பொறுத்துக் கொள்வார்கள். நட்பு இல்லாத பலவகை மக்கள் தம் முன் சொல்லப்பட்ட சொல்லைப் பொறுக்க மாட்டார்கள். அத்தகைய பேச்சு பேசுபவனை வெறுப்பார்கள்.

வெறும் பேச்சைப் பற்றிய குற்றத்தை விளக்குவதற்காக ஏன் வள்ளுவர் பத்துக் குறள்கள் அமைத்தார்? மற்ற நற்குணங்கள் எல்லாம் இருந்த போதிலும் பண்பாடு இல்லாவிடில் மற்ற நற்குணங்களுக்கு இருட்டடைப்பு ஏற்படும். வாழ்க்கைக்குப் பண்பாடு இன்றியமையாதது. பண்பாட்டில் முக்கியமான அம்சம் அநாகரிகப் பேச்சை விலக்குதல்.

வள்ளுவர் காலத்துத் தமிழர் பேச்சில் பரிசுத்தம் இருக்க வேண்டும் என்று போற்றி வந்தார்கள். தற்காலத்திலும் அந்த விஷயத்தைக் கவனிப்பது மிக அவசியம். பண்பட்ட மனிதனுக்கும் பண்படாதவனுக்கும் உள்ள வேறுபாடுகளில் முக்கியமானது பேசும் பேச்சு. கல்வி பெறாத காரணத்தினால் அல்லது மதிநுட்பம் இல்லாதபடியால் எவ்வளவு குறைவுகள் இருந்த போதிலும், பயனற்ற அநாகரிகப் பேச்சை விலக்கி விட்டாலே போதும்.

திரு சிந்தாமண் டி. தேஷ்முக் பாரத மக்களுக்கு நன்கு அறிமுகமானவர். அவரைப் போன்று பல துறைகளில் பரந்த அனுபவமும் ஆழ்ந்த அறிவும் பெற்றவர்கள் நம் நாட்டில் மிகச் சிலரே உளர். இந்திய சிவில் சர்வீஸில் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன் புகுந்ததிலிருந்து மத்தியப் பிரதேச சர்க்காரிலும், மத்திய அரசாங்கத்திலும், நிதி, கல்வி, சுகாதாரம் முதலிய இலாகாக்களைத் திறம்பட நிர்வகித்திருக்கிறார். ரிஸர்வ் பாங்கியின் காரியதரிசி, உப கவர்னர், கவர்னர் என்று படிப்படியாகப் பணியாற்றி, உலக பாங்கியின் தலைவராகவும் செயல்புரிந்திருக்கிறார். திட்டக் கமிஷனில் ஆறு வருஷ காலம் அங்கத்தினராகவும், மத்திய சர்க்கார் நிதி அமைச்சராகவும் சேவை செய்தபின்னர், தற்போது உயர்கல்வித் துறையில் "பல்கலைக் கழகங்கள் மானியக் கமிஷன்" தலைவராகப் பணியாற்றி வருகிறார். அன்னியச் செலாவணிப் பிரச்னையைப் பற்றி ஒரு கட்டுரை எழுதி உதவும்படி அவரை வேண்டிக் கொண்டோம். அவருக்குக் கட்டுரை எழுத நேரமோ ஓய்வோ இல்லாததால், தமது கருத்துக்களை நமக்கு எழுதியுள்ள கடிதத்தில் தெரிவித்திருக்கிறார். அக் கருத்துக்களைக் கீழே வெளியாகியுள்ள ஸ்ரீ தேஷ்முக்கின் கடிதத்தில் பார்க்கலாம். —ஆசிரியர்

# அன்னியக் கடனும் பாரதத்தின் பொருளாதாரமும்

**சிந்தாமண் டி. தேஷ்முக்**

அன்புள்ள சதாசிவம்,

பெருகிக் கொண்டே போகின்ற இந்தியாவின் அன்னியக் கடன்களும் அவற்றால் பாரதப் பொருளாதாரத்துக்கு ஏற்படக்கூடிய விளைவுகளும், மற்றும் இவற்றையொட்டிய இதர பிரச்னைகளும் மிக முக்கியமானவை என்பதில் அபிப்பிராய பேதம் இருக்காது. பொறுப்பு வாய்ந்த ஒவ்வொரு பிரஜையும் இந்தப் பிரச்னைகளில் அக்கறை கொள்ளுவது நியாயமே. நானும் அந்த முறையில் இவ்விஷயங்களைப் பற்றிக் கவனம் செலுத்தியிருக்கிறேன். எனினும், இது சம்பந்தப்பட்ட பிரச்னைகளிலும், இவற்றுடன் தொடர்பு கொண்ட மற்ற விவகாரங்களிலும் முன்னாட்களில் எனக்கு ஈடுபாடு இருந்தது என்றதனாலும், தற்போதும் உயர் கல்வித் துறையில் முக்கியமாகச் சில பொறுப்புக்களை ஏற்று அவற்றை நிறைவேற்றிக் கொண்டிருப்பதனாலும், இந்தியாவின் அன்னியக் கடன்களைப் பற்றி நீங்கள் கோரியபடி ஒரு கட்டுரை எழுதி அனுப்ப முடியாத நிலையில் இருக்கிறேன். ஆயினும் என் கருத்துக்கள் சிலவற்றை இந்தக் கடிதத்தில் கூறுகிறேன்.

அரசியல் விவாதத்துக்கு இதில் எவ்வித இடமும் இல்லை என்பது வெளிப்படை. ஆனாலும் முன்னாள் பதவி காரணமாக, ஒரு பொறுப்பு வாய்ந்த இந்தியப் பிரஜையின் தனி அபிப்பிராயங்கள் சில சமயங்களில் அரசியல் விவாதத்தைக் கிளப்பி விடுவதாகக் கருதப்படலாம். இது தவறான எண்ணம் தான். விவாதம் என்று சொல்லப் புகுந்தால் இந்த அம்சத்தை ஒருவரும் அதிகமாகக் கவனிப்பதில்லை. எனவே, நான் இங்கே கூறும் அபிப்பிராயங்களிலிருந்து எவ்வித சர்ச்சையிலும் ஈடுபட விரும்பவில்லை. அவ்வாறு ஈடுபடுவதும் முறையாகாது. ஒரு பொறுப்பு வாய்ந்த பிரஜை என்ற முறையில் தேசத்தில் பல அறிஞர்கள் முக்கியமான இவ்விஷயங்களைப் பற்றிச் சிந்தித்திருப்பது போல் நானும் சிறிதளவுக்குக் கவனம் செலுத்தியுள்ளேன். அதனால் என் நிலையைப் பற்றி இந்த அடிப்படையான உண்மையை விளக்கமாகக் கூற வேண்டி வருகிறது. இந்த நோக்கிலேயே கீழே இக்கடிதத்தில் நான் சொல்லும் என் கருத்துக்களைக் கவனிக்க வேண்டுமென்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டபோது, அதற்கு எவ்வளவு அன்னியச் செலாவணி தேவைப்படும் என்பதை நுட்பமாக நிர்ணயிக்கவில்லை என்று பொதுவாகக் கூறலாம். இவ்வாறு நிச்சயமாக நிர்ணயம் செய்வது திட்டக் கமிஷனுக்கும் மிகவும் கடினம்தான். திட்டத்தின் பல அம்சங்களின் தன்மைகளும் இதைச் சாத்தியமில்லாமல் செய்தன. மேலும் இது சம்பந்தமான அடிப்படைக் கணக்குகள் எல்லாம் அந்தந்த இலாகாக்களின் நிர்வாக அதிகாரிகளாலும் இதர ஸ்தாபனங்களாலும்தான் கொடுக்கப்பட்டன.

இவ்வாறு கொடுக்கப்பட்ட உத்தேசக் கணக்குகளில், அதிகமாக மாறுபாடுள்ளது உருக்கு எஃகுத் தொழிற்சாலை சம்பந்தமாக மத்திய அரசாங்க அமைச்சராலயம் கொடுத்த விவரங்கள்தான் என்றால் அது மிகையாகாது. இவற்றின் தற்போதைய இறக்குமதி மதிப்பு உத்தேசக் கணக்குகளைவிட 25 சதவீதம் உயர்ந்துவிட்டது. அந்த அளவுக்கு அன்னியச் செலாவணியும் அதிகமாயிற்று.

இதே போல் ரயில் போக்குவரத்து இலாகாவிலிருந்தும் அவர்களுடைய தேவைகளுக்கான உத்தேசக் கணக்குகளில் குறைத்தே மதிப்பீடு செய்யப்பட்டிருக்கக் கூடும்.

அரசாங்கப் பகுதியில் உள்ளதைப்பற்றியே நான் இங்கே குறிப்பிட்டுச் சொன்னேன். ஏனெனில் திட்டத்தின் அன்னியச் செலாவணித் தேவையில் பெரும் பாகம் அரசாங்கப் பகுதிக்குச் சம்பந்தப்பட்டவையே. தனியார் பகுதிக்குச் சம்பந்தப்பட்ட அன்னியச் செலாவணித் தேவைகளை நாட்டின் ஏற்றுமதி

வியாபாரத்தில் உபரியாகக் கிடைக்கக்கூடிய அயல் செலாவணியைக் கொண்டும், சுமார் நூறுகோடி ரூபாய் புதிதாக அன்னிய மூல தனம் முதலீடு செய்வதைக் கொண்டும் பூர்த்தி செய்து விடுவார்கள் என்று திட்டக் கமிஷன் எண்ணியிருந்ததாகவும் சொல்லலாம்.

இம்மாதிரி குறைத்து மதிப்பீடு செய்யப் பட்டதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கையில், இன வாரியாகவும் தனித்தனி அம்சமாகவும் எங்கெங்கே, எந்தெந்த அளவுக்குக் குறைத்து மதிப்பீடு செய்திருந்தது என்பதைத் திட்ட வட்டமாக அறிந்து சொல்லுவது சாத்திய மில்லை என்று திட்டக்கமிஷன் அதிகாரிகளே ஓரிடத்தில் சொல்லியிருக்கிறார்கள். தீவிர முயற்சி எடுத்துக் கொண்டால் இவ்விவரங்கள் சேகரிக்கமுடியாதவை அல்ல. இதில் அவர்கள் அதிகமான முயற்சியை மேற்கொள்ளவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது.

## புராதன யுத்த தளவாடங்கள்

இம்மாதிரி அன்னியச் செலாவணித் தேவைகளைக் குறைத்து மதிப்பீடு செய்தது ஒரு புறமிருக்க, திட்டத்தின் பல அம்சங்களில் அவற்றின் தற்போதைய இறக்குமதி விலை வெகுவாக உயர்ந்துவிட்டது என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்ததே. மேலும் திட்ட அம்சங்களில் பலவற்றுக்கு முதன் முதலில் தயார்த்த மதிப்பீடுகளை பின்னால் உயர்த்தித் திருத்த வேண்டியுமிருந்தன என்பதும் யாவரும் அறிந்ததே. அன்னியச் செலாவணி அதிகமாகத் தேவைப்பட்டதற்கு இவை மற்றக் காரணங்கள். பொதுவாக, திட்டத்தின் முதலிரண்டு வருஷ காலத்தில் தோன்றிய விலை உயர்வு காரணமாக, சில திட்ட அம்சங்களின் முதலீட்டுத் தொகையே, அன்னியச் செலாவணி சம்பந்தப்பட்டவரையில், திட்டக் கமிஷன் முதன் முதலில் தங்களுடைய கணக்குகளில் எடுத்துக் கொண்டதைவிட, பத்திலிருந்து பதினைந்து சதவிதம் உயர்ந்து விட்டிருக்கிறது.



திரு. சிந்தாமன் டி. தேஷ்முக்

முதல் மதிப்பீடுகளைப் பின்னால் உயர்த்தித் திருத்த வேண்டிய அம்சங்களும் பல இருந்தன என்று மேலே சொன்னேன். இது சம்பந்தமாக முதலிடம் பெறுவது ராணுவச் செலவு. நம் நாட்டுப் பாதுகாப்புப் படையின் அதிகப்படியான முதலீட்டுத் தேவைகளுக்கு நம்முடைய ஸ்டர்லிங் நிதியிலிருந்து கணிசமான ஒரு பகுதியைச் செலவிட வேண்டிவந்ததைப்பற்றி இங்கே குறிப்பிட வேண்டும். திட்டத்தின் முதல் இரண்டு வருஷங்களில் இது சம்பந்தமான அதிகப்படித் தேவை சுமார் நூறு கோடி ரூபாயாக இருந்தது. பாக்கியுள்ள மூன்று ஆண்டுகளிலும் இத் தேவைகள் இதே விகிதத்தில் அல்லது இதற்கும் அதிகமான விகிதத்தில் ஏறிக்கொண்டே போகும் என்பதில் சந்தேகமில்லை. அதாவது இந்த ஒரு அம்சத்தில் மட்டும் முதல் மதிப்பீடுகளுக்கு உபரியாகச் சுமார் ரூ. 250 கோடிக்குச் செலவு அதிகமாகலாம்.

இதில் வருந்தவேண்டிய விஷயம் என்னவென்றால், பாகிஸ்தானுடன் போட்டி போட்டுக்கொண்டு, இங்கிலாந்திலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் இனிமேல் தங்களுக்குத் தேவையில்லை என்று ஒதுக்கிவிட்ட பழைய சம்பிரதாயத் தளவாடங்களை நாம் வாங்கிக் குவிப்பதுதான். இந்த விஷயத்தில் பாகிஸ்தான் அதிர்ஷ்டம் வாய்ந்தது என்றே சொல்ல வேண்டும். அவ்விதத் தளவாடங்களை அமெரிக்காவிலிருந்து இனமாகப் பாகிஸ்தான் பெற்றுக் கொண்டிருக்கும் சமயத்தில், பாரதம் புராதன தளவாடங்களைப் பணம் கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது.

## லைசென்ஸ் மயம்!

இதற்கு அடுத்தபடியாக, இரண்டு இதர வகைகளில் அன்னியச் செலாவணி மிதமிஞ்சிச் செலவாகி விட்டது. இதற்குக் காரணம் இவ்விரண்டு துறைகளிலும் நிர்வாகத்தின் கவனக்குறைவும் திறமைக் குறைவும்தான் என்பது வெளிப்படை. முதலாவது, உணவுப் பண்டங்களின் இறக்குமதி சம்பந்தமாக ஏற்பட்ட அதிகப்படிச் செலவு. நம் நாட்டில் நம்முடைய உணவு உற்பத்தியைப் போதிய அளவுக்குப் பெருக்கத் தவறியதனால் ஏற்பட்ட விளைவு இது. இரண்டாவது, இறக்குமதி விஷயத்தில் தனியார்ப் பகுதிக்கு நேரடித் தேவைப் பண்டங்களைத் தவிர, உற்பத்தித் தளவாடங்களுக்கும் யந்திரச் சாமான்களுக்கும் வெகு தாராளமாக, கணக்கு வழக்கின்றி லைசென்ஸுகள் வழங்கப்பட்ட தவறு - இவையனைத்தும் இப்போது எல்லோராலுமே ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயங்கள். இந்த இரண்டு அம்சங்களைப் பற்றியும் அவற்றின் முக்கியத்துவம் காரணமாக மேலும் விரிவாகச் சொல்ல வேண்டியது அவசியம்.

முதலாவதான உணவு உற்பத்தியைக் கவனிப்போம். இவ் விஷயத்தில் விளைபொருள்களின் உற்பத்தி விகிதத்தைப் பற்றிப் புள்ளி விவரங்கள் சேகரிக்கும் முறை இன்னமும் திருப்தி யில்லாமலே இருக்கிறது என்பது என் நம்பிக்கை. உற்

பத்தியைச் சரிவர மதிப்பிட அகில பாரதத்துக்குப் பொருத்தமான ஏற்பாடு எதுவுமில்லை. அவ்வப்போது ஒவ்வோர் ராஜ்யத்துக்கும் பிரத்தியேகமாக மதிப்பிட வேண்டியிருக்கிறது. நவீன முறைகளின் நுட்ப அறிவைக் கொண்டு திறன் வாய்ந்த நிபுணர்களால்தான் புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படுகின்றனவென்றாலும், கிடைக்கக்கூடிய இறுதி மதிப்பீடுகள் அந்தந்த ராஜ்யங்களின் லாபங்களுக்கும் செல்வாக்குகளுக்கும் முரண்பாடாக இருக்கலாகாதென்று திருத்தப்படுகின்றன என்று எண்ண இடமிருக்கிறது.

உதாரணமாக, உபரி விளைவு இருப்பதாக அறிவிக்கப்பட்டால் பற்றாக்குறை ராஜ்யங்களுக்குத் தேவையைப் பூர்த்தி செய்ய மத்திய அரசாங்கம் உபரி தானியத்தை வாங்க முன்வரலாம். அப்போது உபரி ராஜ்யங்களில் விலைவாசிகள் உயரக்கூடும். இதை அவர்கள் விரும்பாமல் இருக்கலாம்.

தேசியப் பொருக்குப் பரிசோதனைகள் (National Sample Survey) மூலம் மத்திய சர்க்கார் நேரடியாக இல்லாவிட்டாலும் சில அளவைகளால் ஏதோ ஒருவிதமாக உற்பத்தியைக் கணக்கிடுகிறார்கள் என்பது உண்மையே. இருந்தாலும் பொருக்கப்பட்ட மாதிரிகள் மிகவும் குறைவு. அவற்றிலிருந்து கிடைக்கும் புள்ளி விவரங்கள் இலாகாவுக்கு மேற்கொண்டு கணக்குகள் போடவோ, கொள்கைகளை வகுக்கவோ போதுமானதல்ல. எனவே நம்முடைய உற்பத்திமதிப்பு முறைகளிலும் அகில இந்திய உற்பத்தி நிர்ணயிப்பு முறையிலும் நிச்சயம் ஏற்படும் அளவுக்கு அவை மாற்றப்படும் வரையில் உணவு உற்பத்திக்காகத் திட்டங்களை வகுக்கவும் முடியாது. வகுக்கப்பட்ட திட்டங்கள் அவ்வப்போது சரிவர நிறைவேற்றப்படுகின்றனவா என்பதைக் கண்காணிக்கவும் முடியாது. தற்போதைய நிலைமையில் இதுதான் மிக மிக அவசியமான தேவை என்று எனக்குத்தோன்றுகிறது.

## திறமையற்ற மந்திரி காரியாலயங்கள்

இதைத் தவிர, உணவு உற்பத்திக்காக வேலை செய்யும் எல்லா ஸ்தாபனங்களுமே திருத்தி அமைக்கப்பட வேண்டும். இதற்கும் அவசரமாக, உடனடியாகத் தேவை ஏற்பட்டுள்ளது. தேசிய உணவு உற்பத்தி கௌன்ஸில் என்று உயர் நிலைக்குழு ஒன்று ஏற்படுத்த வேண்டிய காலம் வந்து விட்டதென்றே எனக்குத் தோன்றுகிறது. தற்போது உணவு உற்பத்தியைக் கையாளும் திறமையற்ற அல்லது அரை மனக கொண்ட மந்திரி காரியாலயங்களின் கைகளிலிருந்து இதை எடுத்துத் தினசரி அரசியல் நடவடிக்கைகளினால் பாதிக்கப்படாத நுட்ப அறிவும் நிர்வாகத் திறனும் வாய்ந்த வலிமை பொருந்திய ஒரு குழுவினரிடம் ஒப்படைத்து விடுவது நலம். இந்த வேலையையும் தேசிய உணவு உற்பத்திப் பெருக்குக்கான திட்டங்களையும் நிறைவேற்றி வைக்கும் பொறுப்பை இக் கௌன்ஸில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ராஜ்யங்களிலும்கூட விவசாய இலாகாவை நிர்வகிக்கும் மந்திரிகளின் தரமும் அப்படி ஒன்றும் உயர்ந்தது, வன்மையுடையது என்று சொல்ல முடியாது. அப்படி இருந்தும் நுணுக்க அறிவும் நிர்வாகத்திறனும் படைத்த அதிகாரிகள் செய்யும் வேலையில் இந்த மந்திரிகளின் அனாவசியமான தலையீடு கணிசமான அளவுக்கு இருப்பதாகவே தோன்றுகிறது. இம்மாதிரி தலையிடுதல் குறைந்தால் நிலைமை அபிவிருத்தியடையலாம். மேலும், உற்பத்தி அடித்தளத்தில் கிராம வாரியாகவோ, குடும்ப வாரியாகவோ உற்பத்தி லட்சியங்கள் ஏற்படுத்தவும், அவற்றை நிறைவேற்றும் பொறுப்புக்களை நிர்ணயிக்கவும், அதற்குத் தேவைப்படும் சாதனங்களான, உரம், பண வசதி, விதை, விவசாயக் கருவிகள் முதலியவற்றை முன்கூட்டியே ஏற்பாடு செய்வதற்குச் சரிவர இணைக்கப்பட்ட அமைப்பு முறை ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. பெரிய நீர்ப்பாசன வேலைகளையும், சிறிய பாசன வேலைகளையும் தொடர்ந்து கவனிக்கத் தவறியதைப் பற்றி இப்போது வெளிப்படையாகவே எல்லோரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். அணைகளின் ஏரிகள் நிரம்பி இருந்தாலும், பிரதான கால்வாய்களும் சிறிய கால்வாய்களும் கட்டப்பட்டுத்தயாராக இருந்தாலும் லக்ஷக்கணக்கான ஏக்கர் விஸ்தீரணம் நீர்ப்பாசனம்பெறாமலும் பயிரிடப்படாமலுமே இருக்கின்றன என்று பல பகுதிகளில் அனுபவ மூலம் காண்கிறோம். இதற்குக் காரணம் இக்கால்வாய்களிலிருந்து வயல்களுக்குச் செல்லும் கால்வாய்கள் வெட்டப்படவில்லை என்பது. இதை ஏன் செய்யவில்லை என்றால் குடிகளின் அசிரத்தையாலோ அல்லது அதிகாரிகளின் திறன் குறைவாலோ என்றுதான் பதில் சொல்ல வேண்டி வரும்.

உணவு உற்பத்தி விஷயத்தைப் பற்றி ஆராயும்போது சாதாரணமாகவே ஒருவித தவறான நம்பிக்கையின் பேரில் செயல்கள் நிகழுகின்றன. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சுயநலத்தில் அக்கறையுள்ளவன் என்றும், அவனுக்குத் தேவையான உதவி மட்டும் அளித்தால் தன்னால் முடிந்த வரையில் முயற்சி செய்து உயர்ந்த பக்ஷ பலனை அடைந்தே தீருவான் என்றும்நம்பப்படுகிறது. ஆனால் நடைமுறையில் இந்த நம்பிக்கை உண்மையல்ல என்பது இப்போது தெரிகிறது. பலருக்கு இது வியப்பையே ஊட்டும். ஆனால் அனுபவம் அப்படித்தான் இருக்கிறது. பல குடிகளுக்குத் தங்கள் சுயநலத்தை விருத்தி செய்து கொள்ளுவதற்காகவோ, தங்கள் குடும்பங்களைப் பாதுகாக்க வேண்டிய வசதிகளைப் பெருக்கிக் கொள்ளவோ ஊக்கமும் இல்லை, உற்சாகமும் இல்லை. அதற்காக அவர்கள் முயற்சி செய்து கஷ்டப்படுவதற்குத் தயாராகவும் இல்லை.

## உரத் தொழிற்சாலைகள் தேவை

நீர்ப்பாசன வசதிகளைவிட அதிக முக்கியத்வம் வாய்ந்தது உர விநியோகம் செய்வது. பயிரிடப்பட்ட ஒரு ஏக்கர் நிலத்திலிருந்து கிடைக்கும் மகசூலையும் அந் நிலத்துக்குப் போடப்பட்ட உரத்தையும் கணக்கிட்டு இரண்டையும் இணைத்துப் பரிசோதித்தால், அதிக உரம் அல்லது எரு போடப்படுவதைச் சார்ந்தே அதிக உறபத்தி இருக்கிறதென்பது தெரிய

வரும். உலகத்தின் மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், பாரதத்தில் நாம், எருவாகட்டும், உரமாகட்டும் உபயோகிப்பதே இல்லை என்றே சொல்லலாம். நாம் உபயோகிப்பது அவ்வளவு குறைவு. ரசாயன உரம்வாங்கத் தயாராக இருக்கும் குடிகளுக்கு உரம் வழங்கப்படுவதில்லை. மாற்றாக எருவை உபயோகிக்க ஆலோசனை கூறப்படுகிறது.

இதிலிருந்து நமது திட்டங்களில் ஒரு முக்கியமான குறைபாடு மற்றெந்த அம்சத்தைவிட இந்த ரசாயன உரம் அம்சத்தில்தான் இருக்கிறது என்று தெளிவாகும். ஸிந்திரி ரசாயன உரத் தொழிற்சாலையைப் போல் பத்துத் தொழிற்சாலைகளை ஸ்தாபிக்கத் திட்டத்தில் வகை செய்திருக்க வேண்டும். நான்காவது உருக்கு எஃகுத் தொழிற்சாலை நிறுவுவதற்குத் தீர்மானம் செய்ததற்குப் பதில் பத்து ரசாயனத் தொழிற்சாலை ஸ்தாபிக்க முடிவு செய்திருந்தால் விவசாய உற்பத்திப் பெருக்கை நாம் சமாளித்துக் கணிசமான முன்னேற்றத்தை அடைந்திருப்போம் என்றுதான் நினைக்கிறேன்.

விவசாய உற்பத்திப் பெருக்கு நமது அன்னியச் செலாவணி சம்பந்தமாக எவ்வளவு முக்கிய இடம் வகிக்கிறது என்பதை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். பத்து லக்ஷம் டன் தான்யங்கள் உபரியாக நாம் உற்பத்தியைப் பெருக்கினால் ரூ. 50 கோடி அன்னியச் செலாவணியில் நாம் மிச்சம் பிடிக்கலாம். இப்போது நம்முடைய வருஷாந்திர உணவு உற்பத்தி சற்றேறக்குறைய 6·6 கோடி டன்கள். வருஷத்துக்கு மூன்று சதவீதம் உற்பத்தியைப் பெருக்குவது என்று வைத்துக் கொண்டாலும் வருஷத்துக்கு 20 லக்ஷம் டன் தானியங்கள் உபரியாகக் கிடைக்கும். இவற்றின் மதிப்பு ரூபாய் நூறு கோடி.

இதையே வேறு விதமாகச் சொல்லுவதானால், கடந்த பதினெட்டு மாதங்களில் நாம் சற்றுக் கண்மூடித்தனமாகவே அவசரப்பட்டு ஏற்றுக் கொண்ட குறுகிய கால அன்னியக் கடன் சுமையை, நாம் திருப்பிக் கொடுத்துச் சமாளிக்க வேண்டுமானால், நாம் செய்ய வேண்டியதெல்லாம் நம்முடைய விவசாயப் பொருள்கள் உற்பத்தியை, அதிகரித்துக் கொண்டு வரும் நம்முடைய தேவைகளுக்குப் பூர்த்தி செய்துவிட்டு, உபரியாக வருஷத்துக்கு மூன்று சதவீதம் பெருக்க வேண்டும். அதாவது, விரிவடைந்து வரும் நம் நாட்டுப் பொருளாதாரத்தில் நேரடித் தேவைப் பண்டங்கள் இறக்குமதிக்கும், திட்டத்தை நிறைவேற்றுவதில் ஏற்படும் அதிகமான முதலீட்டுப் பணத்துக்கும், ஈடு செய்ய மூன்று சதவீதம் விவசாயப் பண்டங்களின் உற்பத்தி பெருக வேண்டும்.

## தொழில் அதிபர்களின் சாமர்த்தியம்

**த**னியார் வர்த்தகத் தொழில் சம்பந்தமாகக்கூட அன்னியச் செலாவணி அஜாக்கிரதையாகவே செலவழிக்கப்பட்டது. இந்த விஷயத்தில் சமீபத்தில் திட்டக் கமிஷன் வெளியிட்ட அறிக்கையில் மேற்பரப்பில் தெரியும் விஷயங்களைக் காட்டிலும் மறைந்து கிடக்கும் விஷயங்கள்தான் அதிகமாக இருக்கின்றன என்பது

என்னுடைய நிச்சயமான அபிப்பிராயம். இதை முற்றிலும் துருவி அவர்கள் ஆராய்ந்து பார்த்திருந்தால், நமக்கு அவசியமில்லாத பண்டங்களையும், தலை போகும் அவசரத்தில் தேவைப்படாத பண்டங்களையும் இறக்குமதி செய்த வகையில் ரூபாய் நூறுகோடி செலவழிந்து விட்டது என்று வெளிப்பட்டிருக்கும்.

ஏனென்றால் நம்முடைய ஸ்டர்லிங் நிதி வேகமாகக் குறைந்து கொண்டே வருகிறது என்று அறிந்த ஆறு மாதங்களுக்குள்ளாகவே கடுமையான கட்டுப்பாடுகள் மூலம் இறக்குமதியைக் கட்டுப்படுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இதை இன்னும் சற்று முன்னதாகவே கவனித்திருந்தால், கட்டுப்பாடு நடவடிக்கைகளை முன்னாலேயே எடுத்துக்கொண்டிருக்கலாமே. நிலைமை சரியாக இல்லை, இதைத் திருத்த வேண்டும் என்று உணர்ந்ததுடன் இதை அவ்வளவு குறுகிய காலத்தில் திருத்தவும் முடிந்தது என்பதைக் கவனித்தால், 1955-ம் ஆண்டிலும் 1956-ம் ஆண்டு மத்தியிலும் வழங்கப்பட்ட இறக்குமதி லைசென்சுகள் ஒரு வரம்புக்குட்படாமலும் கவனக் குறைவாகவும்தான் வழங்கப்பட்டன என்பது வெட்டவெளிச்சமாகவே தெரிகிறது. இதற்கு வேறு ருஜு வேண்டியதில்லை. இது எப்படி நிகழ்ந்தது என்பதைப் பற்றி இங்கே ஆராய வேண்டிய அவசியமில்லை, ஏனெனில் இது மத்திய அரசாங்கத்தின் நிர்வாக நடைமுறை விஷயம். எனினும், 1955-ம் ஆண்டு இறுதியில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சுமார் ரூ. 800 கோடிக்கு அன்னியச் செலாவணிப் பற்றாக்குறை ஏற்படப்போகிறது என்பதை உணர்ந்த தனியார்த் தொகுதி தொழிலதிபர்கள் வேகமாக இறக்குமதி செய்யத் தலைப்பட்டனர். இவ்வாறு அவர்கள் செய்தது முன்னெச்சரிக்கையுடன் சேமித்து வைத்துக் கொள்ளவே எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்றுதான் நான் சொல்ல விரும்புகிறேன். அரசாங்க அதிகாரிகளை விட முன்னதாகவே இந்தச் செலாவணி நெருக்கடியை எதிர்பார்த்து, தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளாவிடில் நமது தொழிலதிபர்களும் வர்த்தகர்களும் தங்கள் தொழிலுக்குத் தகுதியுள்ளவர்களாக இருக்கவே மாட்டார்கள்!

இதை அவர்களால் எப்படிச் செய்ய முடிந்தது? அனுதாபத்துடன் கோரிக்கைகளைப் பரிசீலனை செய்த மந்திரி காரியாலயத்தின் உதவியால், திட்டக்கமிஷன் யாதாஸ்து அரசாங்கத்தாராலும் திட்டக் கமிஷனாலும் இறுதியாக அங்கீகரிக்கப்படுவதற்கு முன்னமே, இறக்குமதி லைசென்சுகள் ஏராளமான சாமான்களுக்கு வழங்கப்பட்டு, முதல் ஐந்தாண்டு காலத்தின் இறுதி இரண்டு வருஷத்தில் மாமூலாக எதிர்பார்த்ததை விட ரூ. 500 அல்லது 600 கோடிக்கு உபரியாக அன்னியச் செலாவணி செலவிடப்பட்டு விட்டது. தனியார்த் தொகுதி செய்த காரியங்களில் இது ஒரு சாமர்த்தியமான வேலைதான்.

## வெற்றி பெற வழி

அன்னியச் செலாவணி சம்பந்தமாக மற்றொரு விஷயமும் இங்கே குறிப்பிடுவது அவசியம் என்று நினைக்கிறேன். அதுதான் அயல்நாட்டு உதவியைக் கோரி எடுத்துக் கொண்ட முயற்சிகளில் கண்ட தாமதம். 1956-ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் திட்டத்தின் முடிவான அமைப்பு தெரிந்து விட்டது. அதன்படி ரூ. 800 கோடி அயல் செலாவணியில் நிச்சயமாகப் பற்றாக்குறை ஏற்படுமென்றும், மேற்கொண்டு ரூ 400 கோடிக்கு இது அதிகரிக்கலாம் என்றும் தெரிந்தன. முதல் வருஷப் 'பட்ஜெட்'டில் திட்டத்தை நிறைவேற்றி வைக்கத் திட்ட அம்சங்களின் முதலீட்டுக்காக மாமூலான ஐந்தில் ஒரு பாகத்துக்கு வகை செய்தாலே போதும் என்றிருந்தும் நான் தயாரித்த பட்ஜெட்டில் ஆறில் ஒரு பங்குக்குத்தான் வகை செய்யப்பட்டிருந்தது. அதாவது மாமூலைவிடச் சிறிது குறைவாகவே செய்யப்பட்டது. எதிர்பாராத அயல்நாட்டு உதவி கிடைத்தாலும் கூட நம்முடைய ஸ்டர்லிங் நிதியிலிருந்து கணிசமான அளவுக்கு நாம் பணத்தை எடுக்க வேண்டிவரும் என்று அப்போதே எதிர்பார்த்ததுதான்.

ஆகையால் அயல்நாட்டு உதவியை நாடி அதற்கான முயற்சிகளை 1956-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலேயே இந்திய அரசாங்கம் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அதாவது பட்ஜெட் சமர்ப்பிக்கும் வேலை முடிந்ததுமே, திட்டக் கமிஷனின் யாதாஸ்தும் முடிந்து விட்டதனால், வெளிநாடுகளுக்குச் செல்லச் சூழ்நிலை ஏற்றதாக இருந்த காலத்திலேயே இதைச் செய்திருக்க வேண்டும். ஏனெனில் நமது ஸ்டர்லிங் நிதியிலிருந்து பணம் குறைந்ததற்கு 1955 இறுதியிலும் 1956 மத்தியிலும் கட்டுப்பாடின்றி இறக்குமதி அனுமதிகள் வழங்கப்பட்டதுதான் காரணம் என்பதைப் பொதுத் தொகுதி, தனியார்த் தொகுதி இரு சாராருமே நன்றாக உணர்ந்து கொண்டனர். இதை அரசாங்கத்தைவிடத் தனியார்த் தொகுதிதான் நன்றாக உணர்ந்தது.

இரண்டாவது திட்டம் சம்பந்தப்பட்ட வரையில், இந்த ஐந்தாண்டு இறுதிக்குள் 4200 கோடிக்குமேல் திட்டங்களை நிறைவேற்றி வைக்க முடியாதென்றே நான் நினைக்கிறேன். இதை நிறைவேற்றுவதற்கே சுமார் ரூ. 1000 கோடி வரையில் நமக்கு அயல்நாட்டு உதவி கிடைக்கக்கூடும் என்பதும் என்னுடைய நம்பிக்கை. இதை வருத்தமளிக்கக் கூடிய விஷயம் என்று கருத வேண்டியதில்லை. ஆனால் இந்நாட்டுப் பொருளாதார விஸ்தரிப்பு ஒழுங்காக நடக்கவேண்டும்; விலைவாசிகளின் சமநிலை நீடித்து நிற்க வேண்டும்; விவசாயப் பொருள் உற்பத்தியை வருஷா வருஷம் பெருக்க வகை செய்து அதற்கான செயல்முறை ஸ்தாபனத்தை உருவாக்க வேண்டும். இவை இல்லாவிட்டால், நிலைமை கவலைக்கிடமானதே. இவை பந்தயத்தில் ஓடுவது போல் நிகழ்ந்து கொண்டே போகும். ஆக்க வேலைகள், விலைகள் சமநிலை, உற்பத்திப் பெருக்கு இவைகள் சரிவரச் சமாளிக்கப்பட்டால் முடிவில் வெற்றி பெறலாம்.

புது தில்லி
26—4—58

சி. டி. தேஷ்முக்

இந்தியக் கப்பல் தொழில் என்றதும் திரு எஸ். என். ஹாஜியின் பெயர்தான் எவருக்கும் சொல்லத் தோன்றும். முன்னாட்களில் கடலோரம் கப்பல் வாணிபம் இந்தியக் கப்பல்களுக்கு ஒதுக்கப்பட வேண்டும் என்று அவர் கொண்டு வந்த மசோதா நாட்டையே ஒரு கலக்கு கலக்கியது. இதனால் "இந்தியக் கடலோர வாணிபத்தின் தந்தை" என்ற அன்புப் பெயருக்குக் காரணமானார். கப்பல் தொழிலைப் பற்றி அவர் எழுதிய நூல் சிறந்தது. இந்திய சட்டசபையிலும், பர்மா சட்டசபையிலும் அங்கம் வகித்தவர். வர்த்தகச் சங்கங்களிலும் கப்பல் கம்பெனிகளிலும் நிர்வாகம் செய்து அனுபவமுள்ளவர். பர்மாவிலும் நம் நாட்டிலும் கப்பல் தொழில் சம்பந்தமாக ஆழ்ந்த தொடர்பு கொண்டவர். இந்தத் தொழில் நிலைமையையும் அது எவ்வாறு அயல் செலாவணியைச் சம்பாதித்துக் கொடுக்கும் என்பதையும் அனுபவ அறிவைக் கொண்டு விளக்குகிறார்.

— ஆசிரியர்

# இந்தியாவின் கப்பல் வர்த்தகம்

**எஸ். என். ஹாஜி**

நமது ஐந்தாண்டுத் திட்டங்களின் லட்சியங்களை நிறைவேற்றுவதில் உள்ள பலவித இன்னல்களில் மிகவும் முக்கியமானது நமது அன்னியக் கடன்கள். நமது இறக்குமதியைக் காட்டிலும் ஏற்றுமதி குறைவாக இருப்பதனால் அன்னியச் செலாவணியில் பற்றாக் குறை ஏற்படுகிறது. இது நீண்டகாலமாக நம்மிடையே இருந்துதான வந்தது. ஆனால் நமது கை இருப்பு ஸ்டர்லிங் நிதி குறைந்தும், அன்னியச் செலாவணித் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல் போனதும்தான் நாம் இதை முற்றிலும் உணர்ந்தோம். நமது ஏற்றுமதியைப் பெருக்க மும்முரமாக நடவடிக்கைகளும் சமீப காலத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஏற்றுமதிப் பெருக்கு என்பது நம் நாட்டு மூலப்பொருள்களையும், பக்குவப்படுத்தி ஆலைகளில் தயார் செய்யப் பட்ட பொருள்களையும், தொழில் உற்பத்திச் சாமான்களையும் வெளிநாடுகளுக்குக் கப்பல் மூலம் அனுப்புவதைக் குறிக்கிறது. இந்தச் சாமான்கள் எல்லாம் பல துறைமுகங்களிலிருந்து பெட்டிகளிலும், சாக்குப் பைகளிலும் அல்லது அப்படியே மூலப்பொருள்களாகவும் கப்பல்களில் ஏற்றப்படுவதால் அவற்றை நம்மால் பிரத்யக்ஷமாகக் காண முடிகின்றது. இவை "நேரடியான" ஏற்றுமதிகள்.

ஆனால் பொருளாதார நூல்களில் "மறைமுகமான ஏற்றுமதி" என்று சொல்லுவதைப் பற்றிப் பொதுமக்களுக்கு அதிகம் தெரியாது. இந்த மறைமுகமான ஏற்றுமதி மூன்று விதத்தில் நடைபெறுகிறது. 'இன்ஷ்யூரன்ஸ்' என்று சொல்லும் நஷ்டப் பாதுகாப்பு; வெளி நாட்டு வியாபாரத்துக்கு வசதியளிக்கும் பாங்கிகள்; கடல் மார்க்கமாயும் விமான மூலமும் செல்லும் போக்குவரத்து — இவை மூன்றையும் அயல்நாட்டு வியாபாரத்தில் அரிச்சுவடி எனலாம். செயல்முறையில் இம்மூன்று அம்சங்களும் சேர்ந்துதான் ஏற்றுமதித் துறைமுக விலைக்கும் இறக்குமதித் துறைமுக விலைக்குமுள்ள வித்தியாசத்தை உண்டாக்குகின்றன. இதை வர்த்தக பரிபாஷையில் F.C.B. (ஏற்றுமதித் துறைமுக விலை) என்றும் O. I. F. (கப்பல் செலவு, வண்டிச் சத்தம், நஷ்டப் பாதுகாப்பு இன்ஷியூரென்ஸ் இம்மூன்றும் உள்பட இறக்குமதித் துறைமுக விலை) என்றும் சொல்லுவார்கள்.

மேலே சொன்ன மூன்று அம்சங்களில் மிகவும் முக்கியமானது கப்பல் கட்டணங்கள். மறைமுகமான ஏற்றுமதி சம்பாத்தியத்தில் இவைதான் முன்னணியில் நிற்கின்றன. ஏற்றுமதிப் பண்டங்களின் விலையில் 15 அல்லது 20 சதவிகிதத்துக்குக் கப்பல் கட்டணம் ஒன்றே காரணம். இதர அம்சங்கள் விலையில் நாலில் ஒரு பாகமும் ஐந்தில் ஒரு பாகமும்தான்.

கப்பல் வர்த்தகத்தில் முன்னணியிலுள்ள இங்கிலாந்து, ஜப்பான் போன்ற நாடுகள் கப்பல் கட்டணங்கள் மூலம் வருஷத்துக்குப் பத்து அல்லது இருபது கோடி ஸ்டர்லிங் கூடச் சம்பாதிக்கின்றன. இந்த இனத்திலிருந்து கிடைக்கும் வருமானம் எவ்வளவு கணிசமானதென்பது இதிலிருந்து தெரியவரும். இதை உலகத்தின் இதர நாடுகள் நன்றாகவே அறிந்து கொண்டிருக்கின்றன. முக்கியமாக இங்கிலாந்து இதை உணர்ந்திருக்கிறது என்பது அபிவிருத்திச் சலுகை விகிதத்தை மற்றத் தொழில்களுக்கு எடுத்துவிட்டிருந்த போதிலும், கப்பல் தொழிலுக்கு மட்டும் நாற்பது சதவிகிதம் அனுமதித்திருப்பதிலிருந்து தெரிய வரும். இதைப்பற்றி இங்கிலாந்து பிரதம மந்திரி குறிப்பிடும்போது, 'இது நாட்டின் தனித் தன்மை வாய்ந்த தொழில்' என்று பெருமையுடன் கூறினார். இந்தியாவில்கூடக் கப்பல் தொழிலின் முக்கியத்தை இப்போது உணர்ந்து கொண்



திரு எஸ். என். ஹாஜி

டிருக்கிறார்கள். செல்வ வரியிலிருந்து இந்தத் தொழிலுக்கு விலக்களிக்கப்பட்டிருப்பதுடன் இங்கிலாந்தின் உதாரணத்தைப் பின்பற்றி அபிவிருத்திச் சலுகை விகிதம்கூட 40 சதவிகிதத்துக்கு உயர்த்தப் பட்டிருக்கிறது.

இவ்வித சலுகைகள் அளிக்கப்பட்டபோதிலும் இந்தியா சுதந்திரமடைந்ததற்குப் பின் அன்னியச் செலாவணியைச் சம்பாதித்துக் கொடுக்கும் இந்த முக்கியமான தொழில் அபிவிருத்தியில் பூரண ஊக்கம் நமது அரசாங்கம் காட்டவில்லை என்றே சொல்ல வேண்டும்.

கடல் சூழ்ந்த மற்ற நாடுகளில் கப்பல் தொழிலை அபிவிருத்தி செய்ய அரசாங்கங்கள் என்னென்ன நடவடிக்கைகள் தனித் தனியாகவோ, கூட்டாகவோ எடுத்துக் கொண்டார்கள் என்பதை விவரிக்காமல் ஜாபிதா போல் கொடுத்தாலே, இத்தொழிலின் முக்கியத்துவம் விளங்கும். இந்த நடவடிக்கைகள் பின்வருமாறு :

1. அந்தந்த நாட்டுக் கரையோர வர்த்தகம் அந்தந்த நாட்டுக் கப்பல்களுக்கே என ஒதுக்கி வைத்தல்.

2. கடல் மூலம் நடக்கும் அன்னிய நாட்டு வர்த்தகத்தில் ஐம்பது சதவிகிதம் அந்த நாட்டுக் கப்பல்களுக்கு ஒதுக்கி வைத்தல்.

3. வருமானக் குறைவால் ஏற்படும் நஷ்டத்தை உதவிப் பணம் மூலம் ஈடு செய்தல்.

4. அரசாங்கக் கணக்கில் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் வியாபாரப் பண்டங்களை அந்த நாட்டுக் கப்பல்களே எடுத்துச் செல்ல வேண்டுமென்று மாற்றி விடுதல்.

5. தேசீயக் கப்பல்கள் மூலம் ஏற்றிச் செல்லப்படும் பொருள்களுக்கும் பிரயாணிகளுக்கும் ரயில் கட்டணத்தில் சலுகையளித்தல் : மற்றும் இவை போன்றவை.

ஆனால் நம் நாட்டில் குறைந்த வட்டி விகிதத்தில் கடன் வசதி அளிப்பது ஒன்றைத் தவிர இந்திய அரசாங்கம் அன்னியக் கடன் பிரச்னையைத் தீர்த்து வைக்கக் கூடிய கப்பல் தொழிலை வளர்க்கப் பிரத்தியேகமாக எவ்வித முயற்சியும் செய்யவில்லை என்றே சொல்லலாம். இந்தச் சிறு சலுகை கூட இப்போது சொல்ப முறையில் பயனளிக்கவில்லை. ஏனெனில் 20/25 லக்ஷம் டன் மொத்த எடையுள்ள வியாபாரக் கப்பல் நாட்டில் இருக்க வேண்டும் என்று லட்சியம் ஏற்படுத்தப்பட்டு, அதற்குத் தேவையான கப்பல்களை வாங்கிக் கொள்ளவே இந்தக் கடன் வசதி செய்து தரப்பட்டது. இரண்டாவது திட்டத்தில் இதற்காக ஒதுக்கப்பட்ட பணம் இதற்குள்ளாகவே செலவழிந்து விட்டது. குறைந்த வட்டிக் கடன் விவகாரமே சுமுகமாக நடைபெறவில்லை. முதல் திட்ட காலத்தில் முதல் இரண்டு வருஷங்களில் இந்தக் கடன் ஷரத்துக்களே கப்பல் தொழில் அதிபர்களுக்குப் பயன்படும் வகையில் அமைக்கப்படவில்லை. ஷரத்துக்களைச் சரிவர மாற்றியமைத்தபோது முதல் திட்டத்தில் செலவிடப்படாத 8 கோடி ரூபாயும், இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கப்பட்ட 37 கோடி ரூபாயும், கப்பல் தொழில் தேவைக்குப் போதாது என்று ஆகிவிட்டது. எனவே, இரண்டாவது திட்டத்தில் லட்சியமாக ஏற்படுத்தப்பட்ட 9 லக்ஷம் டன் மொத்த எடையுள்ள கப்பல் எண்ணிக்கையை 1961-ம் ஆண்டுக்குள் எட்ட முடியாமல் சுமார் 2 லக்ஷம் டன் எடையாவது குறைந்து விடுமோ என்று தோன்றுகிறது. இதற்குக் காரணம் தனியார்த் தொழிலதிபர்களிடத்திலும் அரசாங்கத்தினிடமும் போதிய பண வசதி இல்லாமையே. மேலும் கப்பல்களை வெளி நாடுகளிலிருந்து வாங்குவதற்குத் தேவையான அன்னியச் செலாவணியும் இல்லாதது மற்றொரு காரணம். இதன் விளைவாக, கடந்த பத்து ஆண்டுகளாக இந்தியக் கப்பல் தொழிலில் அன்னிய மூலதனம் முதலீடு செய்வதில் கடைப்பிடித்து வந்த கொள்கையைக் கூட நமது அரசாங்கம் மாற்றிக் கொள்ள உத்தேசித்திருக்கின்றது. இந்த மாற்றுக் கொள்கைப்படி ரூபாய் நாணய முதலுடன் இந்தியாவில் இணைக்கப்பட்ட ஒரு கப்பல் கம்பெனிக்குச் சொந்தமான கப்பல்கள் எல்லாம் இந்தியக் கப்பல்கள் என்று கருதப்படும். அதாவது, கம்பெனியின் பங்குதாரர்கள் அயல் நாட்டவராக இருந்தாலும் கூட இந்தியக் கம்பெனியென்றே அத் தொழில் ஸ்தாபனம் கருதப்படுவதுடன், அதனுடைய கப்பலும் இந்தியக் கப்பல் என்று கொள்ளப்படும். இதன் மூலம் அன்னிய முதல் இந்தியக் கப்பல் தொழிலில் நூற்றுக்கு நூறு அளவில் பிரவேசிக்க அனுமதி கிடைக்கிறது.

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட கம்பெனிகளுக்கும் சிறிய கப்பல் கம்பெனிகளுக்கும் இந்த மாற்றுக் கொள்கையால் கொஞ்சம் நன்மை விளையக் கூடும். அயல் நாட்டினரின் உதவியின் மூலம் தங்கள் கப்பல் எண்ணிக்கையை உயர்த்திக் கொண்டு லட்சியத்தை ஒருவாறு பூர்த்தி செய்து கொள்ளலாம். அதனால் அரசாங்கத்தின் மாற்றுக் கொள்கைகளைக் கொண்ட இந்தியக் கடல் வர்த்தக மசோதாவை அவர்கள் ஆதரிக்கலாம். இந்தியக் கப்பல்களெல்லாம் இது வரையில் இங்கிலாந்தின் கப்பல் பட்டியல் புத்தகத்தில் தான் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. புது மசோதா சட்டமானால் இந்தியாவிலேயே கப்பல் பட்டியல் புத்தகம் ஆரம்பிக்கப்பட்டு நம் நாட்டுக் கப்பல்களெல்லாம் அந்தந்தக் கம்பெனிகளின் மூலதனத்தின் தன்மை எப்படியிருந்தாலும் நமது புத்தகத்திலேயே பதிவு செய்யப்படும். இம்மாதிரி அனுகூலங்கள் சில இருந்தாலும், இந்த மசோதாவில் ஒரு முக்கியமான திருத்தத்தை அரசாங்கம் அங்கீகரிக்க வேண்டும். உள் நாட்டுப் பங்குதாரர்களும் வெளி நாட்டுப் பங்குதாரர்களும் கூட்டாகத் தொழில் ஆரம்பிக்கும் போது, மூலதனத்தில் நம் நாட்டினரின் விகிதம் 51 சதமாகவும் அயல் நாட்டினரின் விகிதம் 49 சதமாகவும் இருக்க வேண்டும் என்னும் பொதுக் கொள்கையைக் கப்பல் தொழிலிலும் கூடப் புகுத்த வேண்டும்.

இம்மாதிரி இந்தியக் கப்பல் தொழில் விஸ்தரிக்கப்பட்டு, அயல்நாட்டுக் கடல் வாணிபத்தில் 50 சதவிகிதம் நமது கப்பல் தொழிலுக்குக் கிடைத்து, கரையோர வியாபாரம் முழுவதும் இந்தியக் கப்பல்களுக்கே ஒதுக்கப்பட்டால் இந்தியக் கப்பல் தொழில் வருஷந்தோறும் சுமார் 100 கோடி ரூபாய் அன்னியச் செலாவணி சம்பாதித்துக் கொடுக்கவல்லது




★ வயிறு உப்புசம்

★ எரிச்சல் உணர்ச்சி

★ புளித்த ஏப்பம்

★ பசியின்மை

★ மலச்சிக்கல்

★ வாயுப்பொருமல்

★ இராணி

★ குமட்டல்

## இவைகளால் அவஸ்தைப் படுகிறீர்களா?

இவைகளுக்கு ஏதாவது
பரிகாரம் செய்தீர்களா ?
இல்லாவிடில்

# நவரத்னகல்பம்

உபயோகியுங்கள்

வைரம், நீலம், கெம்பு, முத்து, மரகதம், 'புஷ்பராகம், வைடூரியம் கோமேதகம், பவழம் ஆகிய ஒன்பது உயர்ந்த கற்களின் கலவை.



கவிராஜ்
பண்டிட்
துர்க்காதத்த சர்மா
வைத்திய வாசஸ்பதி
அவர்களால்
கண்டுபிடிக்கப்பட்டது

இதர விவரங்களுக்கு :

**NAVRATNA KALPA PHARMACY**

**JULLUNDUR CITY (India)**

Grams : NAVRATNA Phone : 401

இந்தக் கட்டுரையை எழுதியிருக்கும் திரு ஆர். வி. மூர்த்தி அவர்கள் பம்பாயிலிருந்து வெளியாகும் "காமர்ஸ்" என்னும் வாரப் பத்திரிகையின் ஆசிரியராகப் பல ஆண்டுகள் பணி ஆற்றியிருக்கிறார். நாட்டின் பொருளாதாரம், வர்த்தகம், நிதி முதலிய விஷயங்களில் ஆராய்ச்சி செய்தவர். தற்போது "ஈஸ்டர்ன் எகானமிஸ்டு" என்னும் டில்லி வாரப் பத்திரிகையின் பம்பாய்ப் பிரதிநிதியாக இருக்கிறார். அந்தப் பத்திரிகையுடன் சம்பந்தப்பட்ட "ரிகார்ட்ஸ் அண்டு ஸ்டாடிஸ்டிக்ஸ்" என்ற வெளியீட்டுக்கு ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். —ஆசிரியர்

# வேறு வழியில்லை!

## ஆர். வி. மூர்த்தி

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் சில இனங்களில் முதலீடு உத்தேசித்திருந்ததைவிட அதிகமாகி விட்டதாலும், அயல் நாடுகளுடன் பல ஒப்பந்தங்கள் செய்து கொண்டு அவை மூலம் குறிப்பிட்ட அளவுக்கு அன்னியச் செலாவணி நமக்குக் கிடைக்க வகை செய்து கொண்டதாலும், நமது நாட்டு அயல் செலாவணி நிலைமை பெரிதும் மாறி விட்டது. இந்த மாறுபட்ட நிலைமையில் நமது அன்னியக் கடன் பிரச்னையையும் அன்னியச் செலாவணிப் பிரச்னையையும் மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகி விட்டது. அவ்வாறு பரிசீலனை செய்வதால் நமது திட்டங்களை வகுக்கும் அதிகாரிகளுக்குச் சரியான வழி காட்டுவதற்கும், வருங்காலத்திலாவது இப்போது நமக்கு ஏற்பட்டுள்ள இன்னல்கள் மறுபடியும் நேராமல் பார்த்துக் கொள்ளுவதற்கும் உதவியாக இருக்கும்.

நமக்கு இப்போது ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் பெரும்பாலும் இரண்டு காரணங்களால் உண்டாயின. ஒன்று, திட்டம் நம்முடைய சாதனங்களுக்கேற்றவாறு வகுக்கப்படவில்லை. இரண்டாவது, அதைவிட மோசமானது. நம்முடைய அன்னியச் செலாவணி வரவு செலவுகளைச் சீரான முறையில் கையாளவில்லை. நமது தற்போதைய நிலையில் ஏற்பட்டுள்ள மாறுபாடுகளை விவரித்து, இன்னல்களுக்குச் சில பரிகாரங்களையும் கூறவே இக்கட்டுரையில் முயற்சி செய்கிறேன்.

இப்பரிகாரங்கள் மேற்கொள்ளப்பட்டால் நமது பிரச்னை சுலபமாகத் தீராவிட்டாலும் கஷ்டங்களாவது சிறிதளவு குறையலாம்.

இரண்டாவது திட்டம் ஆரம்பித்ததிலிருந்தே நமது உள்நாட்டு மூலதன வசதி வெளிநாட்டு நிதி வாய்ப்பு இவை பற்றிய பிரச்னை நாட்டின் பல அறிஞர்களின் கவனத்தை இடைவிடாது கவர்ந்திருக்கிறது. வெளி நாட்டு நிதி வசதிகள் சம்பந்தமாகத் தான் நமது பிரச்னைகள் கவலை தரும்படியாக ஆகிவிட்டன. இதில் நெருக்கடி நிலைமை ஏற்பட்டதற்கு முக்கிய காரணம் நமது தேவைகளைக் குறைத்து மதிப்பீடு செய்ததும், அதிகமான உணவுப் பொருள் இறக்குமதியும், நாட்டின் பாதுகாப்புக்காக இறக்குமதி செய்யப்பட்ட ராணுவ தளவாடங்களும்தான்.

'அன்னியச் செலாவணி நிதிக் குறைவு' என்பதைப் பற்றித் திட்டக் கமிஷன் சமீபத்தில் சமர்ப்பித்த ஒரு அறிக்கையில் இந்த நெருக்கடிக்குக் காரணங்கள் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

"இறக்குமதி அதிகமாகச் செய்யப்பட்டதற்கும், அதனால் அன்னியச் செலாவணி அதிகமாகச் செலவானதற்கும் முக்கிய காரணம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற எடுத்துக்கொண்ட முயற்சியே. ஆனால் அன்னியச் செலாவணி வேகமாகக் குறைந்து வந்ததற்கு, இதர காரணங்கள் இருந்தாலும், முக்கியமாகக் கீழ்க்கண்ட இனங்களைத்தான் குறிப்பிட வேண்டும் :

"1. நாட்டின் பாதுகாப்புக்காகத் தேவை அதிகரித்தது; 2. முதலில் எதிர்பார்த்ததை விட அதிகமான அளவில் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டி வந்தது. 3. 1955-1956 ஆண்டுகளில் நாட்டின் உற்பத்திப் பெருக்கின் காரணமாக மூலப்பொருள்களும், யந்திரச் சாமான்களும், தொழிற்சாலைச் சாமான்களும், யந்திர தளவாடங்களும், அதிகமாகத் தேவைப்படும் என்றும் அவற்றுக்காக அன்னியச் செலாவணி மதிப்பீடும் செய்யப்பட்டிருந்தது. ஆனால் அம்மதிப்பீடுகளை விட விலைகள் உயர்ந்து விட்டன; 4. 1955-56, 1956-57 ஆகிய இரண்டு ஆண்டுகளில், தினசரி உபயோகத்துக்காகப் பொருள்கள் முந்திய வருஷங்களைக் காட்டிலும் அதிகமாகவே இறக்குமதி செய்யப்பட்டன. 5. கப்பல் கட்டணங்களும் விலைவாசிகளும் அதிகரித்து விட்டன."

இவ்வாறாக அந்த அறிக்கை கூறுகிறது. சுருக்கச் சொன்னால், அதிகமான உணவுப் பொருள் இறக்குமதியாலும், ராணுவ தளவாடங்களாலும், திட்ட இனங்களின் மதிப்பீடுகள் உயர்ந்து விட்டதாலும், அன்னியச் செலாவணி நிலைமையைப் புத்திசாலித்தனமாகக் கையாளாததாலும், நம்முடைய தற்போதைய இன்னல்கள் தோன்றின.

நமது கையிருப்பு நிதியிலிருந்து இதுவரையில் வழங்கிய அன்னியச் செலாவணி மிகவும் அதிகமே. இவ்வளவு அதிகமாக இதுவரையில் வழங்கியதே யில்லை எனலாம். சமீபத்தில் வெளிவந்த ஒரு அரசாங்க அறிக்கையின்படி 1956-ம் ஆண்டு ஏப்ரலிலிருந்து 1957-ம் ஆண்டு செப்டம்பர் வரையில் நமது அயல்நாட்டு வியாபார வரவு செலவுக் கணக்கில் துண்டு விழுந்த தொகை 591 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்பட்டது. 1957

அக்டோபரிலிருந்து 1958 மார்ச்சுடன் முடிவுற்ற ஆறுமாத காலத்துக்கு இந்தக் கணக்கில் மேலும் 230 கோடி ரூபாய் குறைவு ஏற்பட்டது. 1956ம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து 1958 மார்ச்சு இறுதி வரையில் ரிஸர்வ் பாங்கி தனது அன்னியச் செலாவணி கையிருப்பிலிருந்து மட்டும் 479 கோடி ரூபாய் வரையில் வழங்கியிருக்கிறது. இவ்விரண்டையும் தவிர, சர்வதேச நாணய நிதியிலிருந்து கிடைத்த ரூ. 95 கோடியையும், இரண்டாவது திட்டம் ஆரம்பித்த காலத்திலிருந்து இதுவரையில் கிடைத்த 679 கோடி ரூபாய் அன்னிய உதவியையும் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டு விட்டோம்.

இதெல்லாம் இதுவரையில் நடந்தவை. சென்று போன விஷயங்கள். ஆனால் இனி வருங்காலத்தைப் பற்றித்தானே கவனிக்க வேண்டும். இரண்டாவது திட்டத்தில் மீதி இரண்டரை வருஷத்துக்கும் அதற்குப் பின்னரும் நாம் என்ன செய்யப் போகிறோம்? வெகு சமீபத்தில் செய்த மதிப்பீடுகளின்படி இரண்டாவது திட்டம் முடியும் தறுவாயில், நமது அன்னியச் செலாவணியில் பற்றாக் குறையின் மொத்தம் 1100 கோடி என்று எதிர்பார்க்கப்பட்டது. இது 1700 கோடி ரூபாய்க்கு உயரலாம் என்றும் தெரிகிறது. இவ்வளவு தானே என்று எண்ணிவிட வேண்டாம்.

இதுவரை நிறைவேற்ற எடுத்துக் கொண்ட திட்டங்களுக்காக மேலும் 500 கோடி ரூபாய் அன்னியச் செலாவணி தேவைப்படும் என்றும் அதற்கு இன்னும் வகை செய்ய வேண்டும் என்றும் திட்டக் கமிஷன் இரண்டாவது திட்டத்தைப் பற்றிய புனராலோசனை அறிக்கையில் தெரிவித்திருக்கிறது.

எனவே இந்தப் பிரச்னையின் கடுமை எவ்வளவு என்பது இதிலிருந்து விளங்கும். இந்தியாவுடன் நட்பு கொண்ட நாடுகளிலிருந்து கிடைக்கக் கூடிய கடன் உதவியைக் கொண்டும் நம்மிடத்தில் உள்ள அல்லது நமக்கு இதர வகைகளில் கிடைக்கும் அன்னியச் செலாவணியை ஜாக்கிரதையாகக் கையாளுவதாலும், நெருக்கடியை ஒருவாறு சமாளிக்கலாம். திட்டத்தின் மிகவும் அத்தியாவசியமான இனங்கள் என்று நாம் அங்கீகரித்துள்ள பகுதிகளையும் கூட எப்படியோ பூர்த்தி செய்து விடக் கூடும்.

அன்னிய உதவியும் கடனும் வாங்குவதற்கே இவ்வளவு சிரமமாக இருக்கிறதென்றால், இவற்றைத் திருப்பிக் கொடுப்பதற்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கும் என்பதைப் பற்றிக் கவனிப்பது தான் வேண்டும். இதுவரையில் வாங்கிய கடன்களைக் கௌரவமாகத் திருப்பிக்கொடுத்து அயல் நாடுகளில் இந்தியா தன் நாணயத்தைக் காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கிறது. இதேபோல் இனியும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இது மிகவும் அவசியம். எனவே, நமது தேசத்தை மேலும் அன்னியக் கடனுக்கு உட்படுத்துவதற்கு முன், ஏற்கனவே வாங்கியுள்ள கடன்களுக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றி இப்போதிருந்தே அரசாங்கம் யோசனை செய்து, வகை செய்து கொள்ளுவது நல்லது. மூன்றாவது திட்ட காலத்தில்தான் இந்தக் கடன்கள் பெரும்பாலும் திருப்பிக் கொடுக்க வேண்டியிருக்கின்றன. அப்போது நிலைமை இப்போதை விடக் கடினமாகவே மாறிவிடும். இந்த விஷயத்தைப் பற்றிச் சமீபத்தில் ஆராய்ச்சி நடத்தியபோது, வட்டிக்காகவும் அசலுக்காகவும் இந்தக் கடன்களில் திருப்பித் தரவேண்டியது மூன்றாவது திட்ட காலத்தில் சமார் 430 கோடி என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது வருஷத்துக்குச் சுமார் 86 கோடி ரூபாய் திருப்பித் தர வேண்டியிருக்கிறது. இத்துடன் இரண்டாவது திட்ட இறுதி மூன்று ஆண்டுகளில் (1958-61) நாம் மேலும் ஏற்பாடு செய்யப்போகும் அன்னியக் கடன்களையும் சேர்த்துக் கொண்டால் மூன்றாவது திட்ட ஐந்து வருஷ காலத்தில் நாம் சுமார் 500 கோடி ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும். அதாவது வருஷத்துக்கு ரூ. 100 கோடி விதம் கொடுக்க வேண்டும்.



திரு ஆர். வி. மூர்த்தி

இந்த வருஷாந்திரப் பட்டுவாடாவைத் தவறாமல் செய்வது நமது நாட்டின் கௌரவத்துக்கும் நாணயத்துக்கும் இன்றியமையாதது. எனவே இதற்கு வகை செய்வதில் தாமதிக்கக் கூடாது. நமது ஏற்றுமதியைப் பெருக்கி, அதனால் கிடைக்கும் அதிகப்படி அன்னியச் செலாவணியைக் கொண்டு இந்தக் கடன் தவணைகளைச் சமாளிக்கலாம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஏற்றுமதியைப் பெருக்குவது அவ்வளவு சுலபமாகத் தோன்றவில்லை. நம்முடைய பொருள்களுக்கு வெளிநாடுகளில் இருக்கும் கிராக்கியையும் அந்த நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றத்தினால் செயற்கைப் பொருள்கள் அதிகமாக உபயோகப்படுத்துவதையும் கவனித்தால் ஏற்றுமதியைப் பெருக்குவது எவ்வளவு கடினம் என்பது விளங்கும். என்ன செய்தாலும் குறுகிய காலத்தில் ஏற்றுமதி விஸ்தரிப்பு ஓரளவுக்குத் தான் ஏற்படக் கூடும். எனவே இதன் மூலம் கிடைக்கக் கூடிய அயல் செலாவணியும் குறைவாகவேதான் இருக்கும்.

இந்த முறை பலனளிக்காதென்றால் இறக்குமதியைக் குறைத்துக் கொள்ளலாம் என்று ஆலோசனை கூறப்படுகிறது. இதிலும்கூடப் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இறக்குமதிக்

கட்டுப்பாடுகள் ஓரளவுக்கு அதிகமாகப் போனால் உற்பத்திப் பெருக்கைக் குறைத்து வேலையில்லாத் திண்டாட்டத்தையும் அதிகரிக்கச் செய்துவிடும். திட்டத்தின் நோக்கம் உற்பத்தியையும் வேலை வாய்ப்புகளையும் பெருக்குவது. எனவே இதற்கு மாறான விளைவுகளை உண்டாக்கும். இதன் விளைவு ஏற்றுமதி வர்த்தகத்தையும்கூடப் பாதிக்கும்.

நமது அன்னியச் செலாவணி கையிருப்பிலிருந்து இந்தத் தவணைகளைச் செலுத்தலாம் என்று மேலும் ஒரு ஆலோசனை சொல்லப்படுகிறது. இதிலிருந்து நாம் ஏற்கனவே உயர்ந்த அளவு வழங்கி விட்டோம். இனி இதிலிருந்து மேலும் எடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறோம்.

எனவே, எல்லா முறைகளிலும் கஷ்டங்கள் மிகுதியாக இருப்பதால், நமக்கு இருக்கும் வழி ஒன்றே ஒன்றுதான். நமக்கு வர்த்தகம் மூலம் கிடைக்கக் கூடிய செலாவணிக்கும் அயல்நாட்டு உதவியின் மூலம் நிச்சயமாகக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கக் கூடிய உதவிக்கும் ஏற்றவாறு நமது அன்னியச் செலாவணிச் செலவைக் குறைத்துக் கொண்டு, இரண்டையும் ஒன்றுக்கொன்று சரிக்கட்டுவதுதான் அந்த வழி. அதாவது நமது வருவாய்க்குத் தகுந்த செலவு. இதுதான் நாம் செய்யக் கூடிய புத்திசாலித்தனமான நடவடிக்கை என்று விளங்கினாலும், இந்த வழியை எளிதில் ஏற்கமாட்டார்கள். ஏனென்றால், இதை அங்கீகரித்தால் இப்போது செலவிடப்படும் தொகையை அதிலும் முக்கியமாகத் திட்டத்தில் சேராத இனங்களைக் குறைக்க நேரிடும். ஏன், நிலைமை மோசமானால் திட்டத்தையே நம்மால் கஷ்டமின்றி நிறைவேற்றி வைக்கக் கூடிய அளவுக்குக் குறைக்கவேண்டியிருக்கும். இது சற்றுக் கசப்பாகத்தான் இருக்கும். ஆனால் நாம் தற்போது இருக்கும் நிலையில் நமது அரசியலும் பொருளாதாரமும் ஸ்திரமாக இருக்க வேண்டுமானால் இதைத் தவிர வேறு வழியில்லை.

# கேள்வியிலே பதில்!

ஒரு தடவை போஜமகாராஜாவும், மகாகவியான பண்டித மாகரும் உலாவப் புறப்பட்டார்கள். உலாவியவாறே உஜ்ஜயினி நகரத்தை விட்டு வெகு தூரம் சென்று விட்டார்கள். திரும்பும்பொழுது அவர்களுக்கு வழி தெரியவில்லை. அலைந்து திரிந்தவாறே ஒரு குடிசையினருகே வந்தார்கள். அந்தக் குடிசையின் எசமானி ஒரு கிழவி. அவளைப் பார்த்து, "அம்மா! இந்தப் பாதை எங்கே போகிறது?" என்று கேட்டார்கள் இருவரும்.

கிழவி இருவரையும் வெகு கவனமாகக் கூர்ந்து கவனித்தாள். பிறகு, "இந்தப் பாதை எங்கும் போகவில்லை; இங்கேயேதான் இருக்கிறது. ஆனால் இதில் ஜனங்கள்தான் போய் வந்து கொண்டிருக்கிறார்கள். ஆமாம், நீங்கள் யார்?" என்று கேட்டாள்.

"நாங்கள் யாத்ரீகர்கள்" என்றார் மாககவி.

"யாத்ரீகர்களா?" கிழவி மிகுந்த வியப்புடன் கேட்டாள்: "யாத்ரீகர்கள் இருவர்தானே உண்டு. ஒருவர் சூரியன்; இன்னொருவர் சந்திரன். நீங்கள் எப்படி யாத்ரீகர்களாக முடியும்? உண்மையைச் சொல்லுங்கள், நீங்கள் யார்?" என்று கேட்டாள்.

"நாங்கள் கணத்தில் நசிக்கும் மானிடர்கள்." மாககவி மிகவும் ஜாக்கிரதையாகப் பதில் சொன்னார்.

"கணத்தில் நசிக்கும் மானிடரா? உலகத்தில் நசிக்கும் பொருள்கள் இரண்டே இரண்டுதான் உண்டு. ஒன்று யௌவனம்; இன்னொன்று தனம்."

மாக கவிக்குத் தாம் தோல்வியுற்றதாகத் தோன்றியது. இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், "நாங்கள் அரசர்கள்!" என்று கூறினார்.

"அரசர்களும் இருவர்தான். இந்திரனும் யமனுமே அரசர்கள் ஆவார்கள். நீங்கள் எப்படி அரசர்களாக முடியும்?" என்று மீண்டும் மடக்கினாள் கிழவி.

கிழவியின் கல்வியறிவு சாதாரணமானதல்ல என்பதை மகாகவி புரிந்து கொண்டார். அதனால் தம்மைச் சமாளித்துக் கொண்டு, "நாங்கள் பொறுமைசாலிகள்!" என்றார்.

"சகோதரர்களே! பொறுமைசாலிகளும் உலகத்தில் இருவர்தாம் உண்டு. ஒருவர் பொறுமையில் பூமாதேவி என்று அழைக்கப்படும் புனித்தாய்; இன்னொருவர் பொறுமையையே பூஷணமாகக் கொண்ட பெண். இந்த இருவரில் நீங்களும் ஒருவராக இருக்க முடியும் என்று என்னால் எண்ண முடியவில்லையே!" என்றாள் கிழவி.

மாக கவி மிகுந்த பதற்றமுற்றார். இருந்தாலும் மிகவும் அடக்கமாக, "நாங்கள் பரதேசிகள்" என்றார்.

"அதுவும் இருக்க முடியாது. பரதேசியும் இருவரே. ஒன்று வாழ்க்கை; இரண்டாவது மாத்தின் இலைகள்" என்று மறுத்து விட்டாள் அந்தக் கிழவி.

போஜ மகாராஜாவும், மகாகவி மாகரும் பூரண தோல்வியை ஒப்புக் கொண்டு சிரம் தாழ்த்திவிட்டனர். தங்கள் அறியாமையைத் தெரிவித்து, "அம்மா! நாங்கள் தோற்று விட்டோம் என்பதை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கிறோம்!" என்றனர்.

கிழவி அதையும் ஒப்புக்கொள்ளவில்லை. "உலகில் தோற்கும் மனிதர்கள் இருவரே. பணக் கடன் பட்டவர். இன்னொருவர் கன்னிக் கடன் பட்டவர் அதாவது தந்தை. எதற்காக வீணில் வளர்த்துகிறீர்கள்? உண்மையைக் கூறுங்கள். நீங்கள் யார்?" என்று கேட்டாள்.

போஜ மகாராஜாவும் மகாகவி மாகரும் வெட்கத்தினால் குனிந்த தலை நிமிராமல் மௌனமே வடிவமாக நின்றனர்.

கிழவி பொக்கை வாய்ச் சிரிப்பு சிரித்துக் கொண்டே கூறினாள்: "நீங்கள் போஜ மன்னர். இவர் பண்டித மாகர். இந்த வழி நேரே உஜ்ஜயினிக்குப் போகிறது!" -ரா. வீ.

# வாழ்க



புருக்பாண்ட் இந்தியா கம்பெனியைச் சேர்ந்த திரு ஏ. எம். சுப்பிரமணியம் சௌ. ருக்மிணியைப் பாலக்காட்டில் மணம் புரிந்துகொண்டார்.



திரு கோபாலதாத்தாச்சாரியாரின் புதல்வன் திரு தேசிகதாத்தந்துக்கும் சௌ. ராஜத்துக்கும் விவாகம் வெகு விமரிசையாக நடைபெற்றது.



சென்னை நகரசபை ரிடையர்டு சூப்ரவைசர் திரு கே. தியாகராஜ முதலியாரின் புதல்வி சௌ. ராஜலக்ஷ்மிக்கும் திரு பாஸ்கரனுக்கும் திருமணம் நடந்தது.



திருவனந்தபுரம் சிட்டி தியேட்டர்ஸின் மானேஜிங் டைரக்டர் திரு பி. சுப்பிரமணியத்தின் குமாரர் திரு எஸ். குமார் சௌ. பத்மாவை மணந்துகொண்டார்.



திரு ராமையா அவர்களின் புதல்வி சௌ. வெங்கட்ரமணிக்கும் திரு நடராஜனுக்கும் சென்னையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



ஹைதராபாத் போலீஸ் இன்ஸ்பெக்டர் திரு எம். ராஜகோபாலனுக்கும் சௌ. சரோஜாவுக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

# மணமக்கள்



தபால் உதவி டைரக்டர் திரு ஜி. சின்ன ஸ்வாமி அய்யர் அவர்களின் குமாரி மீனாக்ஷிக்கும் திரு சுப்பிரமணியனுக்கும் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் திரு ஏ. பி. அய்யரின் புதல்வி செள. வெங்கடாம்பாளுக்கும் திரு நாராயணஸ்வாமிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



பம்பாயில் ஸ்ரீ டி. ஏ. ராமகிருஷ்ணன் அவர்களுக்கும் செள. சரோஜினிக்கும் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.



ஸ்ரீவாஞ்சியம் திரு என். ராமஸ்வாமி சாஸ்திரிகள் குமாரி செள. செல்லத்துக்கும் திரு வி. நடராஜனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



திரு கெ. வைத்தியநாதனுக்கும் தஞ்சாவூர் என். எஸ். அய்யரின் புதல்வி செள. மீனாக்ஷிக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



திரு சின்ன அண்ணாமலை அவர்களின் புதல்வி மணிமேகலைக்கும் திரு சபாரத்தினத்துக்கும் தேவகோட்டையில், திருமணம் சிறப்பாக நடைபெற்றது.


நாம்
ஒன்று கூடி இன்றிரவு
சிறிது சங்கீதம்
கேட்போம்
...தேநீர்
பரிமாற மறந்து
விடாதீர்கள்
நான்தான் டீ

# பாண்டிமாதேவி

ஏழாம் அத்தியாயம்

## நந்தவனத்தில் நடந்த ஒரு குழப்பம்

நிலா முற்றத்துப் படிகளில் வேகமாக இறங்கி எல்லோரும் கீழே சென்றனர். அத்தனை பேருடைய மனத்திலும் திகில் சூழ்ந்திருந்தது. வேற்றவர் நுழைய முடியாத புறத்தாய நாட்டுக் கோட்டைக்குள் அமைதியான நள்ளிரவில் நந்தவனத்தில் அப்படி ஒரு பயங்கரக் குழப்பம் ஏற்பட்டால் யாருக்குத்தான் திகில் உண்டாகாது?

மகாராணி வானவன்மாதேவியாரின் மனம் காரணமின்றி நடுங்கியது. 'இன்று மாலை கன்னியாகுமரிக்குப் புறப்பட்டதிலிருந்து என்னுடைய போகாத காலமும் என்னோடு புறப்பட்டு விட்டது போலிருக்கிறது. இன்றைக்குக் குறை இரவு கழிவதற்குள் இன்னும் என்னென்ன நடக்கப் போகின்றனவோ? ஐயோ! இடையாற்று மங்கலம் நம்பியின் வார்த்தைகளைக் கேட்டு இந்தப் புறத்தாய நாட்டுக் கோட்டைக்கு எதற்காக வந்து தங்கினேன்?'—என்று எண்ணி மனம் வாடினாள். பகவதியும், விலாசினியும், மிரண்டு போய் உடன் நடந்தனர். ஆடவர்களாகிய பவழக்கனிவாயரும், அதங்கோட்டாசிரியரும் வேகமாக நந்தவனத்தை நோக்கி ஓடினர். 'நடக்கிற கலவரம் என்ன? என்று நந்தவனத்துக்கு நேரில் போய் விசாரித்து அறிய வேண்டும்'—என்ற ஆவல் அவள் உள்ளத்தில் அணுவளவும் இல்லை. 'என்ன வேண்டுமானால் நடக்கட்டும்! எது நடந்தால் எனக்கென்ன? நாளைக்கு மகாசபைக் கூட்டம் நடந்து முடிகிற வரை பல்லைக் கடித்துக் கொண்டு முள்ளின் மேலிருப்பது போல் இந்த மாளிகையில் இருந்து தீர வேண்டியதுதான். அப்புறம் எந்தத் தவப் பள்ளியில் போய் எப்படி வாழ்வின் எஞ்சியிருக்கும் பாவ நாட்கள் கழியப் போகின்றனவோ?'—என்று பழைய விரக்திதான் மகாராணியின் உள்ளத்தில் உறுதிப்பட்டது.

அந்த இரண்டு பெண்களையும் தன் இரு கைகளாலும் பற்றிக் கொண்டு, தான் பெற்ற மக்களை அழைத்துச் செல்வதைப்போல் பரிவோடும் பாசத்தோடும் அழைத்துக் கொண்டு அந்தப்புரத்துக்குள் சென்றாள் மகாராணி.

இனி நிலாமுற்றத்தில் நடனமும், பாடலும் நிகழ்ந்து முடியுந் தறுவாயில் ஏற்பட்ட அந்தக் குழப்பம் என்னவென்பதைத் தெரிந்து கொள்ளலாம். அதைத் தெரிந்து கொள்வதற்கு முன் ஏற்கெனவே நமக்குத் தெரியாமல் இந்தக் கதையில் நடந்து முடிந்துவிட்ட சில முன் நிகழ்ச்சிகளையும் இங்கே தெரிந்து கொண்டுதான் ஆக வேண்டியிருக்கிறது. அவற்றைத் தெரிந்து கொண்டால் கதைத் தொடர்பு விட்டுப் போகாமல் விளக்கமாகப் புரிவதற்கு இயலும்.

* * *

மகாராணி வானவன்மாதேவி கன்னியாகுமரி ஆலயத்துக்கு வந்திருந்த அன்றைய தினம் மாலை; நாஞ்சில் நாட்டின் தளபதி வல்லாள தேவன், பெரும் புலவராகிய அதங்கோட்டாசிரியர், காந்தளூர்ச் சாலை மணியம்பலன் காக்கும் பவழக் கனிவாயர் ஆகிய எல்லோரும் வந்திருந்தார்களே! 'மகாமண்டலேசுவராகிய இடையாற்று மங்க

நா. பார்த்தசாரதி



லம் நம்பியும் அவருடைய புதல்வியும் மட்டும் ஏன் வரவில்லை?' என்ற சந்தேகம் நேயர்களுக்கு உண்டாகவில்லையா? சந்தேகத்தோடு கூடிய இந்தச் சந்தேகம் இதுவரை நேயர்களுக்கு ஏற்படவில்லையானால் 'உடனே ஏற்படுத்திக் கொள்ளுங்கள்' — என்று வற்புறுத்தி விட்டு மேலே தொடருகிறேன்.

அதே தினம் மாலையில் மகாமண்டலேசுவரரும், அவருடைய புதல்வி குழல்வாய் மொழியும், இன்னும் இந்தக் கதையில் இதுவரை நமக்கு அறிமுகமாகாத ஒரு புதிய பாத்திரமும் தென்பாண்டி நாட்டின் மேல்புறம் மேலை மண்டலக் கடற்கரையின் முக்கிய துறைமுகப் பட்டினமாகிய விழிஞத்தில் நின்று கொண்டிருப்பதைக் காண்கிறோம்.

சாரி சாரியாக ஏற்றுமதிக்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த மிளகுப் பொதிகள், கொற்கை முத்துச் சலாபத்திலிருந்து முத்திரையிட்டுக் கொண்டு வரப்பட்டிருந்த முத்து மூட்டைகள், ஏலக்காய், இலவங்கம், சாதிக்காய், கிராம்பு ஆகிய வாசனைத் திரவியங்கள் அடங்கிய பொதிகள்,— எல்லாம் நிறைந்து கிடந்தன அந்தத் துறைமுகத்தில். நாஞ்சில் நாட்டு அரசாங்க இலச்சினையாகிய மேழியோடு கூடிய கலப்பையும், அதன் ஒரு மூலையில் பாண்டியர் மீன் இலச்சினையும் பதித்த பெரிய பெரிய கொடிகள் மரக்கலங்களின் கூம்பில் அசைந்தாடிக் கொண்டிருந்தன. பல தேசத்து வியாபாரிகளின் கூட்டமும், பிரயாணம் செய்து வந்து இறங்கியவர்கள், பிரயாணம் செய்வதற்காகக் கப்பலேற வந்திருப்பவர்களின் கூட்டங்களுமாகத் துறைமுகம் கலகலப்பாக இருந்தது. இடையாற்றுமங்கலம் நம்பியும், அவர் மகளும், அவர்களோடு இருந்த குட்டையான ஒரு இளைஞனும், துறைமுகத்துக்கு வந்து சேர வேண்டிய கப்பலொன்றை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்களைப் போல் நின்று கொண்டிருந்தனர். அவர்களோடு இருந்த அந்த இளைஞன் பார்ப்பதற்கு விசித்திரமான தோற்றத்தை உடையவனாக இருந்தான். 'தமிழ் முனிவர் அகத்தியரைப் பார்த்திருந்தால் இவனைப் பார்க்க வேண்டாம்' — என்று சொல்லத் தக்க தோற்றம். பீமசேனனைப் போலக் கட்டமைந்த உடல். உருண்டை முகம். மூக்கும் விழியுமாக எடுப்பான தோற்றம்! நெற்றியில் தீபச் சுடர் போல் சிவப்பு நிறத்தில் ஒரு சிந்தூரக் கீறல். அது அவன் இட்டுக் கொண்டிருந்த திலகம். செவிகளில் சங்கு சக்கர வடிவமாக முத்துக்கள் பதிக்கப் பெற்ற இரண்டு முத்துக் கடுக்கன்கள் மின்னின. மூலத்தாராகக் கச்சம் வைத்துக் கட்டிக்கொண்டிருந்த ஆடை முழங்காலுக்கு மேல் தொங்கியது. அடிக்கடி எதையாவது சொல்லிக் கொண்டே இடி இடியென்று சிரித்துக் கொண்டிருந்தான். அப்படிச் சிரிக்கும்போது முன்புறமாக முடிந்திருந்த அவன் தலையின் சிறிய குடுமி ஆடுவது காண்பதற்கு வேடிக்கையாக இருந்தது. அவன் கூறுவனவற்றைக் கேட்டு மகாமண்டலேசுவரர் அவ்வளவாக ரசித்துச் சிரிக்கவில்லையானாலும் அவருடைய குமாரி குழல்மொழி தன் முல்லைப் பற்கள் தெரியச் சிரித்து அனுபவித்துக் கொண்டிருந்தாள். அதிகமாகச் சொன்னாலும் இருபத்தெட்டு வயதுக்கு மேல் மதிப்பிட்டுச் சொல்ல முடியாது அந்த இளைஞனுக்கு. அவனுடைய வைதிகமான இந்த எளிய கோலத்துக்கு ஒரு சிறிய விதிவிலக்குப் போல் இடையில் ஒரு வாள் உறையோடு தொங்கியது.

அவர்கள் நின்று கொண்டிருந்த வழியாக வந்து போய்க் கொண்டிருந்த கூட்டத்தினரில் அந்த இளைஞனின் விசித்திரத் தோற்றத்தையும், அவன் சிரித்துச் சிரித்துப் பேசும் வேடிக்கையான காட்சியையும் ஒரு கணம் நின்று வியப்புடன் பார்த்து விட்டுப் போகாதவர்களே இல்லை. மகாமண்டலேசுவரர் தென் மேற்குத் திசையில் கடலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று அந்த இளைஞனின் பக்கமாகத் திரும்பி, "சேந்தா! நீ கிளம்பு. இன்று மாலை மகாராணியார் கன்னியாகுமரிக்கு வரப் போவதை மறந்து விட்டாயா? இங்கே நின்று கொண்டு உன் சிரிப்பொலியால் கடற்கரையையே அதிர அடித்துக் கொண்டிருக்கிறாயே! கப்பல் வந்ததும் நானும், குழல்மொழியும்! 'அவரை' மாளிகைக்கு அழைத்துக் கொண்டு போகிறோம். எவ்வளவு நாழிகையானாலும் நாங்கள் இங்கே இன்றிரவு தங்க மாட்டோம். மாளிகைக்குப் போய்ச் சேர்ந்து விடுவோம். அதே போல் நீயும் மாளிகைக்கு வந்து விடு. உனக்காகத் தென்கரையில் அம்பலவன் வேளானைத் தோணியோடு காத்திருக்கச் செய்வேன். மகாராணி கன்னியாகுமரியிலிருந்து கோட்டைக்குத் திரும்பிப் போய்ச் சேர்கிறவரை என்னென்ன நடக்கிறது என்பதை ஒன்று விடாமல் கவனித்துக் கொண்டு வந்து சொல்ல வேண்டும். நீ அங்கே சென்று கவனிப்பதை வேறு யாரும் தெரிந்து கொள்ளாதபடி மறைந்து கவனிக்க வேண்டியது மிக முக்கியம். நீ வந்து தகவல்களைக் கூறுகிறவரையில்

நான் உறங்காமல் உனக்காக விழித்துக் கொண்டு காத்திருப்பேன்.''

மகாமண்டலேசுவரரின் இந்தக் கம்பீர மான கட்டளையைக் கேட்டதும் சிரித் துப் பேசிக் கொண்டிருந்த அந்த இளைஞ னின் முகத்தில் பொறுப்பும் கடமை யுணர்ச்சியும் குடிகொண்டன.

''அப்படியே செய்கிறேன் பிரபு!'' என்று சொல்லிக் கைகூப்பி வணங்கி விட்டுக் கிளம்பினான் அவன்.

''சேந்தா! கொஞ்சம் இப்படி அருகே வா. இதையும் கேட்டுக் கொண்டு போ.'' சிறிது தூரம் நடந்து சென்று விட்ட அவனை மீண்டும் கைநீட்டிக் கூப் பிட்டார் இடையாற்று மங்கலம் நம்பி. அவன் திரும்பி நடந்து வந்தான்.

நாஞ்சில் நாட்டு வேளாளப் பெரு மக்கள் நெல் போட்டு வைத்திருக்கப் பயன்படும் குறுகிய தாழி ஒன்று உருண்டு உருண்டு வருவது போல் அந்தக் குட்டை இளைஞன் நடப்பது பார்ப் பவர்களுக்குச் சிரிப்பு மூட்டியது.

''சேந்தா! நானும், குழல்மொழியும் இங்கே விழிஞத்துக்கு வந்திருக்கும் செய்தியை வேறு யாரிடமும் சொல்லி விடாதே. எச்சரிக்கையாக நடந்து கொள். நானும் குழல்மொழியும், கப்பலில் வருகின்றவரும்'— திரும்பிச் செல்கிற வழியில் சுசீந்திரம் தாணு மாலய விண்ணகரத்தில் சிறிது நேரம் தங்கி அர்த்தசாம பூசையைத் தரிசித்து விட்டுப் போகலாம் என்று நினைத்திருக் கிறேன். இரவு மாளிகைக்கு வருவதற்கு முன்பே அவசரமான செய்தி ஏதாவது என்னிடம் சொல்ல வேண்டியிருந்தால் சுசீந்திரத்துக்கு ஒரு நடை வந்து சொல்லி விட்டுப் போ'' என்று அவன் காதருகே குனிந்து தணிந்த குரலில் கூறினார் அவர். அவனுடைய உருண் டைத் தலையும் அதில் முடியப்பட்டிருந்த குடுமியும் சம்மதத்துக்கு அறிகுறியாக அசைந்தன. ''சரி! அவ்வளவுதான். போய் வா'' என்றார் அவர்.

துறைமுகத்தின் சுங்கச் சாவடிக்கு அருகில் கட்டியிருந்த தன் குதிரையை அவிழ்த்து அதன் மேல் தாவி ஏறிக் கொண்டான் அந்தக்குட்டை இளைஞன். குதிரை சாலையில் திரும்பி வேகமாகச் சென்றது. வாமனாவதாரம் போன்ற அந்தக் குறள் வடிவ இளைஞன் குதிரைக் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு சவாரி செய்யும் காட்சியைத் துறை முகத்தில் நின்று கொண்டிருந்தவர்க ளில் சிலர் வியப்புடன் திரும்பிப் பார்த் துக் கொண்டிருந்தார்கள். அவனது குதிரை கிழக்கே காந்தளூர் ராஜபாட் டையில் திரும்பிக் கன்னியாகுமரியை நோக்கி விரைந்து சென்றது.

வியப்புக்கும், விந்தைக்கும் காரண மான இந்த இளைஞன் யார், தெரியுமா? மகாமண்டலேசுவரரான இடையாற்று மங்கலம் நம்பியைத் தெரிந்தவர்களுக்கு இவனையும் தெரிந்திருக்க வேண்டும். 'நாராயணன் சேந்தன்' என்னும் பெய ரையுடைய இந்தக் குட்டை இளைஞன் மகா மண்டலேசுவரருக்கு வலது கையைப் போல உதவி வருபவன்.

**உருவுகண்டு எள்ளாமை வேண்டும்**
**உருள் பெருந் தேர்க்(கு)**
**அச்சாணி அன்னா ருடைத்து.**

என்று திருவள்ளுவ நாயனார் கூறி யருளிய திருக்குறளுக்குப் பொருத்த மானவன் நாராயணன் சேந்தன். நாடக அரங்கில் வந்து போகின்ற விதூடகனைப் போலத் தோன்றும் இந்தக் குட்டை மனிதனால் 'ஒரு பெரிய சாம்ராஜ்யத் தையே நிர்வகிக்கும் மகாமண்டலேசுவர ருக்கு என்ன ஆகப் போகிறது?' என்று யாராவது நினைத்தால் அது முதல்தர மான தவறு. நாஞ்சில் நாட்டுக்கும் அதன் அரசாட்சி அமைப்புக்கும் இடை யாற்று மங்கலம் நம்பி எவ்வளவு முக் கியமானவரோ அவ்வளவுக்கு அவ ருக்கு முக்கியமானவன் இந்த நாராய ணன் சேந்தன். இவனை அவருடைய உதவி ஆள் என்பதா, அந்தரங்க ஒற்றன் என்பதா, நண்பன் என்பதா, மாணவன் என்பதா—என்றெல்லாம் தனித்தனியே ஆராய்ந்து கொண்டிருப் பதை விடச் சுருக்கமாக ஒன்று சொல்லி விடலாம். எந்தெந்தச் சமயங்களில் எப்படி எப்படி யெல்லாம் பயன்பட முடியுமோ, அப்படிச் சமய சஞ்சீவி யாகப் பயன்படுபவன் இவன்.

இவன் உடலின் உயரத்தைவிட அறி வின் உயரம் அதிகம். பார்ப்பதற்குப் பாமரனைப் போல்தான் இடிஇடியென்று சிரித்துப் பேசிக் கொண்டிருப்பான். ஆனால் ஏதாவது ஒரு காரியத்தில் இறங்கி விட்டாலோ அவன் சூரப் புலிதான்.

'நாராயணன் சேந்தனால் செய்ய முடிந்த காரியத்துக்கு நாராயணன் சேந்தனைத் தவிர வேறு யாரையும் அனுப்ப முடியாது' என்று இடையாற்று மங்கலம் நம்பி அடிக்கடி அவனைப் புகழுவதுண்டு. அதற்கு முற்றிலும் தகுதியானவன்தான் அவன்.

* * *

அன்று மாலை 'விழிஞம்' துறை முகத்திலிருந்து புறப்பட்ட நாராய ணன் சேந்தன் மகாராணியாரும் அவ ருடைய பரிவாரமும் கன்னியாகுமரியை



அடைவதற்கு முன்பே தான் அங்கு போய்ச் சேர்ந்து விட்டான். குதிரையோடு ஆலயத்தருகே போய் இறங்கினால் தன் வரவை வெளிப்படையாகப் பலருக்கு அறிவித்தது போல் ஆகிவிடு மென்று அவன் அறிவான். கூடியவரை தன்னை அங்கே யாரும் எதற்காகவும், தெரிந்து கொள்ளக்கூடாது. ஆனால், தான் எல்லா வற்றையும் தெரிந்து கொள்ள வேண்டு மென்பது அவனுடையநோக்கம். கோவி லின் மேற்குப் புறமாகக் கடற்கரை யோரத்தில் இருந்த புன்னைமரச் சோலை ஒன்றுக்குள் நுழைந்து ஒரு மறைவான இடத்தில் குதிரையைக் கட்டினான்.

பின்பு சிறிது நேரம் அந்தச் சோலையி லேயே இங்கும் அங்குமாகச் சுற்றின போது, ஒரு பெரிய மரத்தின் அடியில் சில ஆடைகளும், அங்கிகளும், மூன்று சிவப்புத் தலைப்பாகைகளும் களைந்து வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்தான்.

'அவைகளை யார் அங்கே வைத்திருக் கக் கூடும்?' என்ற சந்தேகத்தோடு நாராயணன் சேந்தன் சுற்றும் முற்றும் திரும்பிப் பார்த்தான். புன்னை மரத் தோட்டத்தின் வேலிக்கு அப்பால் கட லில் கரையோரமாக மூன்று மனிதர்கள் நீராடிக் கொண்டிருக்கும் காட்சியைக் கண்டான். மரத்தடியில் அவிழ்த்து வைக்கப்பட்டிருந்த அந்த உடைகளும் தலைப்பாகைகளும், அவர்களுடையன வாகத்தான் இருக்க வேண்டுமென்று நாராயணன் சேந்தன் புரிந்து கொண் டான். சாதாரண மனிதர்கள் அணியக் கூடிய உடைகளாகத் தெரியவில்லை அவை. அரசாங்கப் பணி புரியும் வீரர் களோ, சேவகர்களோ, அணியக் கூடிய உடையாகத் தோன்றின அவை. புறத் தாய நாட்டு வீரர்களும், பாண்டிய நாட்டின் பிற பகுதிகளிலுள்ள படை வீரர்களும் வழக்கமாக அணியக் கூடிய உடை அவனுக்கு நன்றாகத் தெரியும். அவன் புன்னை மரத்தடியில் கண்ட உடைகளும் அப்படி இருந்திருந்தால், 'சரிதான்! யாரோ பாண்டி நாட்டு வீரர்கள் உடைகளைக் கழற்றி வைத்து விட்டு நீராடிக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டு போயிருப்பான். ஆனால் அந்த மாதிரி உடையணிந்த வீரர்களை அவன் பாண்டிநாட்டுப் படையில் எங்கும் எப்போதும், கண்டதே இல்லை. ஆகவே அருகில் நெருங்கி உற்றுப் பார்த்தான்.

தலைப்பாகைகள் மூன்றில் ஒன்றுக்குள் செருகி வைக்கப்பட்டிருந்த ஓலை நாரா யணன் சேந்தனின் கூரிய விழிகளில் தென்பட்டது. 'சட்' டென்று அதைக் குனிந்து கையில் எடுத்தான்.

அந்த ஓலையைப் படிப்பதற்குள் வேலிக்கு அப்பால் மணலில் ஆட்கள் நடந்து வரும் ஒலி கேட்டது. அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். கடலில் குளித்துக் கொண்டிருந்த மூன்று வீரர்களும் தங்கள் உடைகளை அணிந்து கொள்வதற்காக மரத்தடிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

கையில் எடுத்த ஓலையை அது முன் பிருந்தபடியே தலைப்பாகைக்குள்ளே வைத்து விட்டு வேலி ஓரமாகப் பதுங்கி னான் நாராயணன் சேந்தன்.

அதன்பின் அன்று கன்னியாகுமரியில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மறைந்





...யிருந்து கவனித்தான். மகாராணியார் கடற்கரைக் காட்சியைக் கண்டது, தளபதி ஒற்றர்களோடு பேசியது, ஓலையைக் கைப்பற்றியது, கன்னியாகுமரி அம்மன் ஆலயத்தில் வானவன்மாதேவிக்கு ஏற்பட்ட துன்பம் ஆகியவை யெல்லாம் ஒன்று விடாமல் தெரிந்து கொண்டான்.

மகாராணியாரும், பரிவாரமும் ஆலயத்திலிருந்து கோட்டைக்குத் திரும்பிய போது அவனும் பின்னாலேயே புறப்பட்டு விட்டான். சுசீந்திரத்தைஅடைந்தவுடன் மகாமண்டலேசுவரர், தம்மைச் சுசீந்திரத்தில் சந்திக்கச் சொல்லியிருந்தது அவனுக்கு ஞாபகம் வந்தது. உடனே மகாராணியாரைக் கோட்டைக்குப் போகும் சாலையில் பின்பற்றுவதை நிறுத்திக் கொண்டு சுசீந்திரம் கோவிலுக்குத் திரும்பிப் பிரிந்து சென்றான் அவன். சுசீந்திரம் கோவிலில் இடையாற்றுமங்கலம் நம்பியும் அவர் புதல்வி குழல்மொழியும் அவர்களோடு

மூன்றும் மனிதரான ஒரு இளந் துறவியும் நாராயணன்சேந்தனை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். கன்னியா குமரியில் நடந்த நிகழ்ச்சிகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, "சேந்தா! இப்போது நீ மகாராணியாரைப் பாதியில் விட்டு விட்டு இங்கே வந்திருக்கிறாய். நீ கூறியதிலிருந்து வானவன்மாதேவியாரை ஏதோ தீய சக்திகள் சூழ்வதாகத் தெரிகிறது. இப்போது நீ மீண்டும் பின் தொடர்ந்து செல். முடியுமானால் இன்றிரவு கோட்டையிலேயே யாரும் அறியாமல் தங்கியிருந்து கவனி! உடனே போ" என்று அவனை அங்கிருந்து அனுப்பிவிட்டார் மகாமண்டலேசுவரர்.

நாராயணன் சேந்தன் மகாராணியாரும் பரிவாரங்களும் சென்ற நாஞ்சில் நாட்டு இராஜபாட்டையில் போகாமல் வேறோர் கிளைச் சாலை வழியாகப் புறப்பட்டுச் சென்றான். அந்தக் கிளை வழி ஓரிடத்தில் நெடுந்தூரத்துக்கு ஒரு பாதிரித் தோட்டத்துக்கு நடுவிலே புகுந்து சென்றது. குறுகலான அவ்வழியில் நாராயணன் சேந்தனின் புரவி மெல்லச் சென்றது. நெடிதுயர்ந்த பாதிரி மரக் கிளைகளுக்கு இடையே வழியின் மேல் அங்கங்கே நிலவின் ஒளி பரவியது. சில இடங்களில் மரக்கிளைகளின் அடர்ந்த நிழல் பட்டு இடைவழி தெரியாமல் இருண்டாற் போலவும் இருந்தது.

ஓர் இடத்தில் பாதையோரமாக யாரோ இரண்டு மூன்று ஆட்கள் உட்கார்ந்து மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருப்பதைத் தூரத்தில் வரும் போதே அவனுடைய கூரிய கண்கள் பார்த்து விட்டன. அதைப் பொருட்படுத்தாமல் "யாரோ வழிப் போக்கர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்" என்று நினைத்துக் குதிரையை விட்டுக் கொண்டு போக முயன்றான்.

ஆனால் அவனுடைய குதிரை அந்த இடத்தை அடைந்ததும் சாலையோரத்து இருளில் உட்கார்ந்திருந்த அந்த மூன்று ஆட்களும் குபீரென்று எழுந்து பாய்ந்து மறித்தபோதுதான் நாராயணன் சேந்தன் அவர்களை இன்னாரென்று புரிந்து கொள்ள முடிந்தது. நிலவொளியில் தெரிந்த சிவப்புத் தலைப்பாகைகளைக் கண்டதும் குதிரையை நிறுத்தாமல் கடிவாளத்தைச் சுண்டி நாலு கால் பாய்ச்சலில் ஓடச் செய்தான்.

## எட்டாம் அத்தியாயம்

# நாராயணன் சேந்தன்

குதிரை பாய்ந்தோடுவதற்காக முன் கால்களைத் தூக்கிய வேகத்தில் வழியை மறிக்க வந்த மூவரில் ஒருவன் அடிபட்டுத் தடுமாறிக் கீழே உருண்டான். நல்ல வேளையாக மற்ற இரண்டு பேர்களும் ஒதுங்கி நின்றுகொண்டு வழியை விட்டு விட்டார்கள். இல்லையானால் அவர்களுக்கும் மற்றவனுக்கும் நேர்ந்த கதிதான் நேர்ந்திருக்கும். சேந்தன் குதிரையைச் செலுத்துவதில் சில சூட்சுமங்கள் வைத்திருப்பான். இம்மாதிரி அபாயகரமான சந்தர்ப்பங்களில் குதிரையை வாயுவேகமாகப் பறக்கச் செய்யும் தந்திரம் அவனுக்காதெரியாது?

தான் அவ்வாறு விரைவாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டு ஓடிவந்த போது அந்த மூன்று சிவப்புத் தலைப்பாகை யணிந்த வீரர்களும் பின்னால் துரத்திக் கொண்டு ஓடி வருகிறார்களா? இல்லையா? என்பதைக்கூட நாராயணன் சேந்தன் திரும்பிக் கவனிக்கவில்லை. அங்கே குதிரையை முடுக்கின முடுக்கில் புறத்தாய நாட்டுக் கோட்டையின் தென்மேற்கு மூலையிலுள்ள ஏரியின் கரையில் போய்த்தான் நிறுத்தினான்.

பிரதான வாசலில் வழியாகக் கோட்டைக்குள் நுழைந்து சென்றால் தன் வரவைப் பலரும் தெரிந்து கொள்ளும்படி ஆகிவிடும் என்று பயந்தான். ஏரிக் கரையில் குதிரையை நிறுத்தி விட்டுக் கோட்டைக்குள் எப்படி நுழைவதென்று அங்கே நின்று சிந்தித்தான். அவன் மனத்தில் குழப்பமும், அதிர்ச்சியும் மாறி மாறித் தோன்றின. கன்னியா குமரியிலிருந்து தப்பிய அந்த வீரர்கள் சுசீந்திரம் பாதிரித்தோட்டத்துக் கிளை வழியில் எப்படி வந்து சேர்ந்தார்கள்? எப்போது வந்து சேர்ந்தார்கள்? அவர்கள் தன் குதிரையை ஏன் மறிக்க வேண்டும்? சிந்திக்க மனம்தான் குழம்பிற்றே தவிர வேறொன்றும் விளங்கவில்லை.

அங்கே அந்த இரவின் தனிமையில் நின்று மனம் குழம்பிக் கொண்டிருப்பதைவிட உடனே கோட்டைக்குள்ளே செல்ல முயன்றால் பயனளிக்கும் என்று அவன் நினைத்தான். சுற்று முற்றும் கோட்டை மதிலைப் பார்த்தபோது அவனுக்கு ஒரு வழி புலப்பட்டது. தென் மேற்குப் புறத்திலிருந்த ஏரியிலிருந்து கோட்டைக்குள்ளே இருக்கும் நந்த

வனத்துக்கு உபயோகப்படுவதற்காக ஒரு சிறிய தண்ணீர்க் கால்வாய் பிரிந்து போயிற்று. கனத்த மதிற் சுவரில் அரைவட்ட அளவில் அந்தக் கால்வாய்த் தண்ணீர் உள்ளே நுழைந்து போவதற்காக ஒரு சிறிய வாய்க்கால் வழி உண்டாக்கியிருந்தார்கள்.

தன்னைப் போன்ற குட்டை மனிதன் நுழைவதற்கே உயரமும், அகலமும் போதாது போல் தோன்றிய அந்தக் கால்வாய் வழியில் நீரோட்டத்தின் வேகத்தையும் சமாளித்துக் கொண்டு எப்படி உள்ளே நுழைவதென்று மலைத்தான் அவன். அப்போது மிக அருகில் ஆட்கள் ஓடி வரும் காலடியோசை கேட்டது. அவன் மனத்தில் பலவிதமான சந்தேகங்கள் எழுந்தன. ஒருவேளை பாதிரித் தோட்டத்துக், கிளை வழியில் தன்னிடம் வம்பு செய்த அந்த முரடர்களாக இருக்குமோ என்று நினைத்துக் கொண்டே திரும்பிப் பார்த்தான்.



கூனூர் அட்வகேட் ஸ்ரீ எல். ஆர். மகாலிங்கம் அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி விழா சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது. இந்த வைபவத்துக்கு உறவினர்களும் நண்பர்களும் வந்திருந்து சிறப்பித்தனர். அறுபதாண்டு நிறைவு விழாக் கொண்டாடிய ஸ்ரீ மகாலிங்கம் தம்பதிகளை வாழ்த்துகிறோம்.

அவனுடைய சந்தேகம் சரியாகவே இருந்தது. கிளைவழிச்சாலை ஏரிக்கரையை அடையும் திருப்பத்தில் நிலா ஒளியில் அவர்கள் வெகு வேகமாக ஓடி வந்து கொண்டிருப்பதை அவன் கண்டான். அவர்களுடைய சிவப்புத் தலைப்பாகைகள் நன்றாக அடையாளம் தெரிந்தன.

நாராயணன் சேந்தனுக்கு யோசிக்க நேரமில்லை. குபீரென்று கால்வாயில் குதித்தான். மார்பளவுத் தண்ணீர் திமுதிமுவென்று உட்புறம் பாய்ந்து கொண்டிருந்தது. உள்ளே நந்தவனம் இருந்த பகுதி வெளிப்புறத்தை விடச் சிறிது பள்ளமாக இருக்க வேண்டும். இல்லையானால் வெள்ளம் இழுத்துக் கொண்டு போவதுபோல் அப்படி ஆளை இழுத்துப் பறிக்குமா? நிமிர்ந்தால் தலைமேலே மதிற்சுவரின் அடிப்பாகத்தில் இடித்தது. இரண்டு விலாப்புறமும் பக்கச் சுவர்களில் உரசின. பருத்த தேகத்தை உடைய அவனுக்கு மூச்சுத் திணறியது. விழிகள் பிதுங்கின. "ஐயோ! மறுபுறம் போய்க் கரையேறுவதற்குள் மூச்சுத் திணறிச் செத்துப் போய் விடுவேன் போலிருக்கிறதே! இந்தப் பாழாய்ப் போன கால்வாய் வழியாக உள்ளே போக வேண்டுமென்ற ஆசை எனக்கு ஏன் தான் உண்டாயிற்றோ? இடைவழியிலேயே இந்த இருண்ட கால்வாய்க்குள் நம்முடைய உடல் செருகிச் சிக்கிக் கொண்டாலும் ஏனென்று கேட்பார் இல்லையே?" என்று தனக்குள் எண்ணித் துணுக்குற்றான் அவன். வேகமாக உள்நோக்கிப் பாயும் நீரோட்டம் ஒரு இடத்திலும் பாதங்களை ஊன்றி நிற்க விடாமல் அவனை இழுத்துத் தள்ளிக்கொண்டு போயிற்று.

நாராயணன் சேந்தன் மதிலின் உட்புறம் நந்தவனத்தில் வந்து கரையேறிய அதே சமயத்தில் வெளிப்புறம் கால்வாய் தொடங்குமிடத்தில் 'திடும்திடு' மென்று தண்ணீரில் ஆட்கள் குதிக்கின்ற ஓசை உட்புறமிருந்த அவனுக்குத் தெளிவாகக் கேட்டது. அவன் உடனே நந்தவனத்திலிருந்த ஒரு பெரிய மரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டான். அது ஒரு மகிழ மரம். அதில் அவன் உட்கார்ந்து கொண்டிருந்த கிளை அரண்மனை நிலாமுற்றத்தைத் தொடுவது போல் நெருக்கமாகப் படர்ந்திருந்தது. அந்தக் கிளையில் அமர்ந்து கால்வாயை இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அதன் வழியே தன்னைப் பின்தொடர்ந்து குதித்து வந்த மனிதர்களின் வரவை எதிர்பார்த்து அந்தத் திசை நோக்கி இமையாமல் காத்திருந்தன அவன் விழிகள். அந்த நடு இரவில் நிலாமுற்றத்தில் பாட்டொலியும், நடன ஒலியும் கேட்பதை அவன் செவிகள் கூர்ந்து கவனித்தன. மேலே நிலாமுற்றத்தில் மகாராணியாரும், வேறு சிலரும் அமர்ந்து கொண்டு ஆடல் பாடலை அனுபவிக்கிறார்கள் என்பதை அங்கிருந்து வந்த குரல்களால் அவன் தெரிந்து கொண்டான்.

மதிலோரமாகக் கால்வாயிலிருந்து உட்புறம் பிரவேசிக்கும் வழியில் நிழல்கள் ஆடின. நீர்ப்பரப்பில் காலடி பெயர்த்து வைக்கும் ஓசை கேட்டது.

தான் மகிழ மரக் கிளையில் உட்கார்ந்திருப்பது உள்ளே வரும் அவர்களுக்குத் தெரிந்துவிடாத வண்ணம் கிளைகளின் அடர்த்தியில் தன்னை மறைத்துக்கொண்டான் நாராயணன் சேந்தன். சிவப்புத் தலைப்பாகைகள் கால்வாய்த் துவாரத்தின் அடியே நிலா ஒளியில் நன்றாகத் தெரிந்தன. துணிவு மிகுந்தவனும், ஆபத்துக்களைச் சாதாரண விளையாட்டாக வரவேற்கும் இயல்புடையவனுமாகிய நாராயணன் சேந்தனுடைய மனத்தில் ஒரு விநாடி இனம் புரியாத பயத்தின் சாயை படிந்தது. அவர்கள் எதற்காகத் தன்னைப் பின் தொடர்ந்து வருகிறார்கள் என்று தன்னால் ஆனமட்டிலும் சிந்தித்து முடிவு செய்ய முயன்றான் அவன். ஆனால் அது அவனால் முடியவில்லை.

ஒன்றுமட்டும் அவனுக்கு நன்றாகப் புரிந்து விட்டது. சிவப்புத் தலைப்பாகையோடு கூடிய அந்த மூன்று முரட்டு ஒற்றர்களும் நல்ல எண்ணத்துடனோ, அல்லது நல்ல காரியத்தைச் செய்வதற்காகவோ, தென்பாண்டி நாட்டுக்குள் நுழைந்திருக்க முடியாது என்பதுதான் அது. கன்னியாகுமரிக் கடற்கரையில் புன்னைமரச் சோலைக்கருகில் அவர்கள் நீராடிக் கொண்டிருந்தபோது முதல் முதலாகப் பார்த்தவுடனே அவன் மனத்தில் இந்த எண்ணம் உறுதிப்பட்டு விட்டது. பின்னால் கன்னியாகுமரி ஆலயத்தில் நடந்தவை, பாதிரித் தோட்டத்து வழியில் மறிக்க முயன்றது ஆகிய நிகழ்ச்சிகளால் நாராயணன் சேந்தன் அந்த முரட்டுச் சிவப்புத் தலைப்பாகை ஆட்களைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கத் தொடங்கியிருந்தான்.

இப்போது அவர்கள் தன்னைப் பின்பற்றிக் கோட்டைக்குள்ளேயும் நுழைந்து விட்டதைப் பார்த்த அவனுக்கு உடம்பு புல்லரித்தது.

அவனை மேலும் ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறவர்களைப் போலக் கால்வாய் வழியாக உட்புறம் வந்து கரையேறிய அந்த மூவரும் அவன் ஏறி உட்கார்ந்திருந்த அதே மகிழ மரத்தை நோக்கி நடந்து வந்தனர். நிலாஒளி தன்னை அவர்களுக்குக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாதே என்ற திகில் நாராயணன் சேந்தனுக்கு ஏற்பட்டது. நிலா முற்றத்துச் சுவரின் நிழலும் மகிழ மரத்தின் அடர்த்தியும் அவனுக்கு அபயமளித்தன. மிக அருகில் மரத்தின் கீழே அம்மூவரும் வந்து நின்றபோது அவனால் அவர்களை நன்றாகப் பார்ப்பதற்கு முடிந்தது. பீமசேனர்களைப் போல மூவரும் பருத்த ஆகிருதியுடையவர்கள். ஒருவன் முகத்திலும், கைகால்களிலும் சிராய்த்து இரத்தக் காயங்கள் தென்பட்டன. அந்த ஆள் இன்னாரென்று நாராயணன்சேந்தன் தெரிந்து கொண்டுவிட்டான். கன்னியாகுமரியில் தளபதி வல்லாள தேவனை வழியில் மடக்கி எதிர்த்து அவனிடம், நன்றாக அடிபட்டுப் பாறையிடுக்கில் விழுந்து மூர்ச்சை அடைந்தவனே அவன்.

கீழே அவர்கள் வந்து நின்ற நிலையையும் சுற்றிலும் ஏதோ தேடுகிறவர்களைப் போலப் பார்த்த விதமும் மரக்கிளையில் பதுங்கிக் கொண்டிருந்த நாராயணன் சேந்தன் மனத்தில் சந்தேகத்தை உண்டாக்கின. மகிழ மரத்துப் பொந்தில் நெருப்புக் கங்கு போன்ற விழிகளோடு உட்கார்ந்துகொண்டிருந்த கோட்டான் ஒன்று குரூரமாகக் கத்தியது. மேற்புறம் நிலா முற்றத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த நாட்டிய ஒலியும், இனிய பாடற் குரலும் அந்தக் கோட்டானின் அலறலில் கலந்து விகாரமடைந்தன.

நாராயணன் சேந்தன் பாதங்களை மரக் கொம்பில் அழுத்திக் கிளையைப் பற்றியிருந்த கைகளின் பிடியை இறுக்கினான். அவன் உட்கார்ந்திருந்த கிளை குலுங்கியது. கீழே நின்று கொண்டிருந்தவர்களின் கவனம் ஒரு கணம் அந்தச் சிறிய சலனத்தால் கவரப்பட்டது. அவர்கள் தங்களுக்குள் இரகசியமாக ஏதோ பேசிக்கொள்ளத் தொடங்கவே, நாராயணன் சேந்தன் மறைந்திருந்தபடியே அவற்றை உற்றுக் கேட்டான்.

''ஏண்டா செம்பியன்? இதென்ன வேடிக்கை? இதுவரை ஆடாமல் அசையாமல் இருந்த மரக்கிளை ஏன் இப்படித் திடீரென்று குலுங்குகிறது?'' — மூவரில் ஒருவன் மற்றொருவனைப் பார்த்து இப்படிக் கேட்கவும், மற்ற இருவரும் குறும்புத்தனமாகச் சிரித்தனர்.

''முத்தரையா! மேலே நிலா முற்றத்தில்தான் மகாராணியார் இருக்கிறார் போலிருக்கிறது! இதோ இந்த ஒலிகளைக் கவனித்தாயா?'' என்று முதலில் கேட்டவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லாமலே வேறோர் கேள்வியை எழுப்பினான் இன்னொருவன்.

''இரும்பொறை! அப்படியானால் நம்முடைய முயற்சியை இங்கே தொடர்ந்து செய்தால் என்ன? நமக்கு முன்னால் குதிரையில் வந்த அந்தக் குட்டைத் தடியன்கூட இங்கேதான் எங்கேயாவது இருப்பான். கன்னியாகுமரிச் சோலையில் நிறைவேறாத நமது எண்ணம் இங்கே நிறைவேறினாலும் நிறைவேறலாம். இந்த மகிழ மரத்துக் கிளை வழியாகவே நாம் நிலா முற்றத்தில் ஏறிக் குதிக்க முடியுமென்று தோன்றுகிறது.'' — இப்படி அதுவரை பேசாமல் நின்றிருந்த

மூன்றாமவன் கூறிய போது மரக்கிளையில் பதுங்கியவாறே இவற்றை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த நாராயணன் சேந்தனின் உடல் 'வெட வெட' வென்று ஆடி நடுங்கியது. 'குட்டைத் தடியன்' என்று கீழே நின்று பேசியவன் குறிப்பிட்டது தன்னைத்தான் என்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்து விட்டது.

அந்தச் சிவப்புத் தலைப்பாகை ஒற்றர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்ட பேச்சிலிருந்து அவர்கள் மூவருடைய பெயரையும் கூட அவன் ஒருவாறு தெரிந்து கொண்டான். செம்பியன், முத்தரையன், இரும்பொறை, — கீழே நிற்கும் அவர்களுடைய இந்தப் பெயர்கள் பாண்டி நாட்டுப் பெயர்களாகவே தோன்றவில்லை. அவர்களுடைய பேச்சின் உட்கருத்தை உணர்ந்தபோது, 'இரண்டாவது முறையாக வானவன்மாதேவியின் உயிரைக் குறி வைத்துக் கொண்டு' வந்திருப்பதை அறிந்தான்.

கோட்டான் இன்னொரு முறை அதி பயங்கரமாக அலறியது. கீழே நின்று கொண்டிருந்தவர்களில் 'முத்தரையன்' என்று அழைக்கப்பட்டவன் ஒரு கூரிய குத்துவாளைத் தன் இடுப்பிலிருந்து வெளியே எடுத்து நிலா ஒளியில் தூக்கிப் பிடித்தான். கொழுந்து விட்டெரியும் நெருப்பின் நுனி நாக்குப் போல அது 'பளீர்' என்று மின்னிப் பளபளத்தது.

பருசணம் கையில் அந்த வாளைப் பிடித்துக் கொண்டே அவன் மகிழ மரத்தில் தாவி ஏறத் தொடங்கியபோது, அதைப் பார்த்துக் கொண்டிருந்த நாராயணன் சேந்தனுக்கு இதயத் துடிப்பே நின்றுவிடும் போலிருந்தது. அப்படியே நிலா முற்றத்தில் குதித்துத் தப்பி ஓடிவிடலாமா என்று நினைத்தான் அவன். வரிசையாகக் கீழே நின்றிருந்த மூவருமே, ஒருவர் பின் ஒருவராக மரத்தில் ஏறுவதைக் கண்டு அவன் அதிர்ச்சியடைந்தான். அவர்கள் மேலே ஏறி வந்து விட்டால் கிளையில் பதுங்கிக் கொண்டிருக்கும் தன்னைக் கண்டு கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அந்த மரத்தில் ஒரே ஒரு கிளை மட்டும் தான் நிலாமுற்றத்தின் மேல் தளம் வரை நெருங்கி வளர்ந்திருந்தது. அது தான் நாராயணன் சேந்தன் உட்கார்ந்திருந்த கிளை. ஏறிக்கொண்டிருந்த மூவரும் மேலே ஏறி வந்தவுடன் அதே கிளையில் காலை வைத்தபோது நாராயணன் சேந்தன் திடுக்கிட்டான்; முன்னைவிட அதிக பரபரப்படைந்தான்.

கடைசி நம்பிக்கையாக அவர்கள் தன்னை நெருங்காமல் இருப்பதற்காக ஒரு தந்திரம்செய்து பார்த்தான் அவன். இரண்டு கை விரல்களையும் வாயருகே குவித்து மயிர் சிலிர்க்க வைக்கும் பயங்கரக் கூச்சலை உண்டாக்கினான். 'தன்னு

பாண்டிமாதேவி கதை ஆசிரியரும் திரு எம். எஸ். நாராயணன் அவர்களின் புதல்வருமாகிய திரு நா. பார்த்தசாரதி அவர்களுக்கும் அழகர் கோவில் திரு எஸ். திருமலை அவர்களின் புதல்வி சௌ. சுந்தரவல்லிக்கும் ஜூன் மாதம் 27-ந் தேதி வற்றுயிருப்பில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.

அதே முகூர்த்தத்தில் திரு நா. பார்த்தசாரதி அவர்களின் சகோதரி சௌ. பத்மாசனிக்கும், அச்சந்தவிர்த்தான் திரு எஸ். கிருஷ்ணன் அவர்களுடைய புதல்வர் திரு கே. சீனிவாசனுக்கும் விவாகம் வெகு சிறப்பாக நடைபெற்றது. இரு திருமணங்களுக்கும் நண்பர்களும், உறவினர்களும், எழுத்தாளர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்தன. வாழ்க மணமக்கள்!





## புல்லாங்குழல்வித்வான் விசுவநாதன்

புல்லாங்குழல் வித்வான் திரு விசுவநாதன் சென்ற முதல் தேதி யன்று அமெரிக்காவுக்குப் பயணமானார். இவர் புல்பிரைட் திட்டத்தின் கீழ் கலிபோர்னிய சங்கீத



கலாசாலையில மேற்கத்திய சங்கீதத்தைப் பயின்றுவரப் போகிறார். திரு டி. விசுவநாதன் சங்கீத கலாநிதி திரு டி. என். சுவாமிநாத பிள்ளை அவர்களின் சீடர். வீணை தனம்மாளின் பேரன். மிகப் பெரிய சங்கீத பரம்பரையில் வந்த திரு விசுவநாதன் மேற்கத்திய சங்கீதத்தைப் பயின்று அதன் நுணுக்கங்களை அறிவதுடன் நம் நாட்டுக் கர்நாடக சங்கீதத்தையும் மேற்கத்திய நாட்டில் பரப்பி வருவார் என்று எதிர்பார்க்கிறோம்.

டைய அந்தக் கூச்சலைக் கேட்டுப் பயந்தாவது அவர்கள் மரத்திலிருந்து கீழே இறங்கிப் 'பேயோ பிசாசோ' என்று நினைத்துக் கொண்டு திரும்பிப் போய் விடட்டும்' என்று அவன் நினைத்திருந்தான். ஆனால் நடந்ததோ முற்றிலும் எதிர்பாராத வேறு ஓர் நிகழ்ச்சி.

அந்தக் . கூப்பாட்டினால் அதிர்ச்சியடைந்த மூன்று ஒற்றர்களும் கிளை நுனிக்கு வேகமாக ஓடி வந்து நிற்கவே சுமை அதிகமாகி நாராயணன் சேந்தன் உட்கார்ந்து கொண்டிருந்த அந்தக் கிளை 'மட மட' வென்று முறிந்தது.

தான் நின்று கொண்டிருந்த கிளைக்கு மேலே வேறோர் கிளையில் தாவியதால் நாராயணன் சேந்தன் முறிந்து விழுந்த கிளையோடு கீழே விழாமல் பிழைத்தான். ஆனால் மற்றவர்கள் கிளை முறிந்து கீழே விழுவதற்குள் தாங்களாகவே குதித்து விட்டனர்.

அரண்மனை நந்தவனத்தில் கூப்பாடும், குழப்பமும், மரம் முறிந்து விழும் ஓசையும் கேட்டுக் கோட்டைக்குள்ளேயிருந்த வீரர்கள் தீவட்டியும் கையுமாக ஓடிவரவே புதிதாகப் புகுந்திருந்த ஒற்றர்கள் விழுந்தடித்துக் கொண்டு ஓடினர். மறுபடியும் கால்வாயில் இறங்கி மதிலுக்கு வெளியே போகாவிட்டால் அகப்பட்டுக் கொள்ள நேரிடுமென்று அவர்களுக்குத் தெரியாதா, என்ன? மரத்தில் திரிசங்குவைப் போலத் தொங்கிக் கொண்டிருந்த நாராயணன் சேந்தனுக்குத்தான் தலைவலி போய்த் திருகுவலி வந்த கதையாக ஆகிவிட்டது!

கீழேயும் குதிக்க முடியவில்லை. மேலேயும் பிடித்துக் கொள்வதற்குச் சரியான ஆதாரமில்லை. அவன் அந்தக் கோட்டைக்கோ, அரண்மனைக்கோ, அந்நியனில்லை; மகாமண்டலேசுவரருக்கு அந்தரங்க மனிதன். ஆனால் அப்போதுள்ள சூழ்நிலையில் அவன் அகப்பட்டுக் கொண்டால் பலவிதமான கேள்விகள் எழுவதற்கு இடம் ஏற்பட்டு விடும் அல்லவா?

'எப்படி வந்தான்? எதற்காக வந்தான்? நந்தவனத்துக்குள் யாருமறியாமல் நுழைந்து மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டிய அவசியம் என்ன?' என்பது போன்ற கேள்விகள் பிறந்தால் அந்த நிலையில் அவற்றுக்கு அவன் என்ன பதில் சொல்ல முடியும்? பதில் சொன்னால் இடையாற்று மங்கலம் நம்பியையே காட்டிக் கொடுப்பதுபோல் ஆகும்.

'உண்மையில் அகப்பட்டுக் கொள்ள வேண்டியவர்கள் யாரோ, அவர்களே தப்பி ஓடி விட்டார்கள். நான் எதற்காக அகப்பட்டுக் கொள்ள வேண்டும்? வந்த சுவடு தெரியாமல் இங்கிருந்து போய்விடுவதுதான் நல்லது!' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்ட நாராயணன் சேந்தன் தொங்கிக் கொண்டே நுனிவரை வந்து அப்படியே நிலாமுற்றத்துத் தளத்தில் இறங்கினான்.

அவனுடைய நல்ல காலமாக நிலா முற்றத்தில் அப்போது வேறு யாரும் இல்லை. நந்தவனத்தில் ஏற்பட்ட குழப்பத்தால் மகாராணி வானவன்மாதேவி யாருள்பட யாவரும் பரபரப்படைந்து கீழே சென்றிருந்தனர்.

'இந்த மரம் முறிந்ததும் ஒரு வகையில் நல்லதாகப் போயிற்று. இல்லையானால் அந்தப் பாவிகள் இரண்டாவது முறையாக மகாராணியாரின் மேல் குறி வைத்திருப்பார்கள்.'—என்று எண்ணித் திருப்திப்பட்டான் சேந்தன். வெகு நேரம் கழித்துக் கோட்டையில் சந்தடிகளெல்லாம் அடங்கியபின் வந்த வழியே வெளியேறி இடையாற்றுமங்கலம் புறப்பட்டான் அவன். (தொடரும்)



# நகையின் காதல்



"அப்பா! சற்று நிதானமாக யோசித்துப் பாருங்கள்! இன்றைக்கு வந்து நாளைக்குப் போகும் பணம் அவர்களிடத்தில் இல்லை என்பதைத் தவிர அவளுக்கு என்ன குறை சொல்ல முடியும்?"

மகாதேவனின் சினம் அதிகரித்தது. "ஏய்! எனக்கு வேதாந்த உபதேசம் செய்ய வருகிறாயா இல்லை, நான் சொல்வதைக் கேட்கப் போகிறாயா?" என்று கூச்சலிடத் தொடங்கினார்.

அம்மணி நடுநடுங்கினாள். அவருடைய கோபம் பிரசித்தமானது. எனவே, மகனை நோக்கி, "குழந்தாய்! அப்பா, சொல்கிறதைத்தான் கேட்டுவிடேன். அவர் உனக்குக் கெடுதலா செய்வார்?" என்று கெஞ்சும் குரலில் சமாதானம் செய்ய முயன்றாள்.

"அப்பாவை எதிர்த்துப் பேசணும் என்று எனக்கு மாத்திரம் ஆசையா, அம்மா? இதுவரை அவரை மறுத்துப் பேசினதுண்டா? 'இது என் சொந்த விஷயம். தயவுசெய்து என் விருப்பப்படி நடப்பதற்கு அனுமதி கொடுங்கள்' என்று தான் சொல்லுகிறேன்" என்றான் தினகரன்.

"இது உன் சொந்த விஷயமா? எனக்குச் சம்பந்தமில்லை என்கிறாயா?"

"ஏய்! அந்தத் தரித்திரத்தை மறந்துவிட வேண்டியது தான் நீ! அவள் இந்த வீட்டுக்கு மருமகளாக வருவது என்பது என் உயிருள்ள வரையில் நடக்கவே நடக்காது!"

என்று கத்திக் கொண்டே ஊஞ்சலை விட்டு எழுந்துவிட்டார் மகாதேவன்.

அம்மணிக்குச் சப்தநாடியும் ஒடுங்கி விட்டது. பேச முடியாதபடி வாய் அடைத்து விட்டது.

முகத்தில் அக்னி ஜுவாலை வீசப் பின்னால் கைகளைக் கட்டியபடி கூண்டில் அடைபட்ட புலியைப் போல் தாழ்வாரத்தில் குறுக்கும் நெடுக்கும் நடந்தார் மகாதேவன். திடீரென்று நின்றார். "ஏய்! உனக்கு ஐயாயிரம், ஆறாயிரம் என்று எதிர்ஜாமீன் கொடுக்க எத்தனையோ பேர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். நேற்று வந்த மூலனூர் பண்ணையார் எட்டாயிரம்கூடக் கொடுக்கத் தயாராயிருக்கிறார். இதெல்லாம் உனக்குத் தெரியும் அல்லவா?" என்றார்

"தெரியும்!"

"உன் 'காதலி'யினால் அவ்வளவு கொடுக்க முடியுமா?"

"முடியாது; அதனால் என்ன? பணம் ஒன்றுதான் முக்கியமா?"

"குறுக்கே பேசாதே! அவள் அவ்வளவு கொடுக்க வேண்டாம். ஆயிரம் ரூபாய், ஒரு ஆயிரம் ரூபாய் கொடுக்கச் சொல்லு! நீ அவளுக்குத் தாலி கட்டுவதில் எனக்கு ஆட்சேபனை இல்லை!"

தினகரன் திகைப்புடன் யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

அவர்களால் ஐந்நூறு ரூபாய்கூடக் கொடுக்க முடியாது என்பது மகாதேவனுக்குத் தெரியாதா? புதல்வன் வாய் அடைத்து நின்றதைக் கண்டு அவர் எக்களிப்புடன், "ஏய்! ஆயிரம்கூட வேண்டாம். ஐந்நூறு கொடுக்கச் சொல்லுடா போதும்! நாளைக்கே வேண்டுமானாலும் முகூர்த்தம் வைத்து விடலாம்!" என்றார்.

மகன் அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டான்: "சரி, அப்பா! கொடுக்கச் சொல்கிறேன். அப்புறம் பின்வாங்க மாட்டீர்களே! இது நிச்சயம்தானே?"

தந்தை ஒருகணம் திடுக்கிட்டு விட்டார். என்றாலும் அந்தக் காரியம் சாத்தியமே அல்ல என்பது அவருக்கு நிச்சயமாகத் தெரியும். "இது சத்தியமடா! ஒரு நாளும் வாக்கு மீறமாட்டேன்!" என்றார்.

* * *

மகாதேவன் அவ்வூரில் பிரபல மிராசுதார். நல்ல சொத்து. எல்லாமே அவரது சுயார்ஜிதச் சொத்து.

தினகரன் அவருடைய ஏகபுதல்வன். மகாதேவன் அவனை ஏழெட்டுவகுப்புக்கு மேல் படிக்க வைக்கவில்லை. அவன் படித்து உத்தியோகத்துக்குப் போக வேண்டியதில்லை என்ற கருத்துடன் படிப்பை நிறுத்தி அவனை விவசாயத்தில் ஈடுபடுத்தி விட்டார். அப்பாவுக்கு உதவியாகப் பயிர்த் தொழிலைக் கவனித்து வந்தான் அவன்.

மங்களம் மகாதேவனுக்கு எட்டிய உறவினள். கணவனை இழந்து, மாலதியுடன் அவ்வூரிலேயே வசித்து வந்தாள். அவர்களுக்கு ஜீவனத்துக்கே கஷ்டம். மங்களம் பணக்காரர் வீடுகளில் குற்றேவல் புரிந்து வந்தாள்; அதில் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு அம்மாவும் பெண்ணும் காலம் தள்ளி வந்தார்கள்.

அந்த ஏழைகளைக் கண்டால் மகாதேவனுக்கு வெகு அலட்சியம். அந்த வீட்டோடு அதிகப் போக்குவரவு வைத்துக் கொள்வதுகூட அவருக்குப் பிடிக்காது. ஆனால் தினகரன் அப்பாவுக்கு நேர் எதிர். மங்களத்திடம் சிறு வயது முதலே அவனுக்கு அபிமானம். மலர் முகமும், மின்னல் விழிகளும் கலகலவென்ற முல்லை நகையும் கொண்ட சிறுமி மாலதியிடமோ அபாரப் பற்றுதல். அந்தச் சிறுமி மங்கைப் பருவம் அடைந்தபோதுதான் எத்தனை சௌந்தரியவதியாக ஒளி வீசினாள்! தினகரன் சொக்கிப் போனான். அவளோ அவனைத் தனது இதயபீடத்தில் ஏற்றி வழிபடும் தெய்வமாகப் பூசித்து வந்தாள்.



முன்பெல்லாம் நாளில் இரண்டில் அவர்கள் வீட்டுக்குப் போய் அளவளாவி விட்டு வரும் பழக்கத்தைக் கொண்டிருந்த தினகரன் இப்போது தினம் ஒரு முறையாவது தன் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் தேவமங்கையைத் தரிசிக்கப் போகாமல் இருப்பதில்லை.

இது கைகூடாத காதல் என்பது மங்களத்தின் அபிப்பிராயம். மகாதேவனின் மனப் போக்கு அவள் அறியாததா?



ஆனால் தினகரன், "நீங்கள் பேசாமல் இருங்கள். எல்லாம் எனக்குத் தெரியும். கல்யாணம் செய்து கொள்ளப் போவது நானா? எங்கப்பாவா?" என்று அவளுக்குத் தைரியமூட்டி வந்தான்.

* * *

"அப்பா! எங்களிடம் நூறு ரூபாய் கூடக் கிடையாதுஎன்பதுஉனக்குத் தெரியாதா? உங்கள் அப்பா சொல்கிறபடியே செய்! மாலதியின் தலையெழுத்துப்போல்நடந்து விட்டுப் போகிறது!"

"மாலதியின் தலையெழுத்தோடுதான் என் தலை எழுத்தும் பிணைக்கப்பட்டிருக்கிறது, மாமி. ஆகவே அவளைத் தவிர வேறு எவளையும் நான் மணப்பது சாத்தியமல்ல. நீங்கள் பேசாமல் இருங்கள். நான் வழிபண்ணுகிறேன்."

தினகரன் எளிதாகச் சொல்லி விட்டு வந்துவிட்டானே யொழிய எப்படி வழி பண்ணுவது? மூன்று நாட்கள் இரவு பகலாக மூளையை உடைத்துக் கொண்டு யோசித்தான். எதுவும் புலப்படவில்லை. யாரையாவது கடன் கேட்கலாம் என்றால் யார் கொடுப்பார்கள்? பிரபுவாகிய மகாதேவனின் மகன் கடன் கேட்டால் யாருமே திகைப்பார்கள்; சந்தேகிப்பார்கள்! அப்பாவின் காதுக்கு எட்டி விட்டால் அப்புறம் வேறு வினையே வேண்டியதில்லை.

கடைசியில் அவன் மூளையில் அபூர்வமான யோசனையொன்று பளிச்சிட்டது.

காதல் பித்தமும், வைராக்கியமும் தீவிரமாகக் கொண்டிருந்த அவனுக்கு, தான் செய்யப் போவது தவறாகவே படவில்லை. 'இது திருட்டாகுமா! என் மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்ள எடுக்கிறேன் நகைகளை. அவை பணமாக மறுபடியும் வீட்டுக்கே வந்துவிடப் போகின்றன. இதில் என்ன பிசகு?' என்று மனத்துள் சமாதானம் செய்து கொண்டு சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி ஆவலுடன் காத்திருந்தான்.

* * *

மறுநாள் "ஏண்டா, என்ன ஆச்சு! பணம் சேர்ந்து விட்டதாமா?" என்று மகாதேவன் ஏளனமாகக் கேட்டபோது, "இன்னும் நாலு நாட்களுக்குள் தந்து விடுகிறேன் என்று சொன்னாள். நாளைக்கு அல்லது நாளை மறுநாள் பணம் கைக்கு வந்து விடுமாம்!" என்று தினகரன் கம்பீரமாகக் கூறினான்.

தந்தை பிரமித்தார். ஆயினும் 'அந்தத் தரித்திரத்தை நம்பி எவன் ஐந்நூறைத் தூக்கிக் கொடுத்துவிடப் போகிறான்! இதெல்லாம் நடக்காத வெறும் வார்த்தை' என்று அவர் தம்மைத் தாமே தேற்றிக் கொண்டார்.

அடுத்த நாள் எதிர் வீட்டுக் காவேரி- அம்மணியின்ஏழைத்தோழி— அவளிடம் வந்தாள். "அம்மணி! திருவாரூரில் எங்க மைத்துனர் பெண் கல்யாணம் நாளன்றைக்கு. இன்று ராத்திரி புறப்படவேணும். ஒரு செயினும், இரு ஜோடி வளையல்களும் கொடேன். ஊரிலிருந்து வந்ததும் திருப்பித் தந்து விடுகிறேன்" என்று இரவல் கேட்டாள்.

அம்மணி சம்மதித்துப் பீரோவைத் திறந்து நகைப் பெட்டியை எடுத்தாள். "சங்கிலியையும் இரண்டு ஜோடி வளையல்களையும் காணுமே! ஐயையோ!" என்று அலறினாள்! அவள் கூக்குரலைக் கேட்டு, "காணுமா! எப்படிப்போயிருக்கும்! வேறு யாருக்காவது கொடுத்தாயா? ஞாபகப்படுத்திப் பார்!" என்றவாறு மகாதேவன் அங்கே வந்தார்.

"யாருக்கும் கொடுக்க வில்லையே! நன்றாய் நினைவிருக்கிறதே! யாரோ எடுத்துத்தான் இருக்கணும்" என்று புலம்பினாள் அம்மணி.

இந்தக் கலவரத்தைப் பார்த்து விட்டுத்தான் வந்த வேளை சரியில்லை என்று காவேரி நழுவி விட்டாள்!

"யார் எடுத்திருப்பார்கள்? திருடனாயிருந்தால் பாதி நகைகளை விட்டு விட்டா போயிருப்பான்? திருடன் வீட்டுக்குள்ளேதான் இருக்கணும்!" என்று மகாதேவனுக்குச் சட்டென்று முதல்

# 'அனாஸின்'



உங்களுடைய

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு நிவாரணமளிப்பதில்

## சிறந்தது ஏனெனில் அதில் நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளன




'அனாஸின்' ஒரே ஒரு மருந்துமட்டுமல்ல, அது தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து முற்றிலும் துரித நிவாரணம் அளிக்கும். ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையாகும். ஒரே மருந்து சேர்ந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும் அனாஸினைப் போல், துரிதமாயும் ... அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்க இயலாது. எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

K. 66 (R)

நாள் தம் மகன் மங்களத்துக்குப் பணம் இரண்டொரு நாட்களில் கிடைத்துவிடும் என்று உறுதியாகச் சொன்னது ஞாபகம் வந்தது! 'விஷயம் இப்படித்தான் இருக்கவேணும்!' என்று ஊகித்துவிட்டார்!

அதே சமயம் தினகரன் வீட்டுக்குள் நுழைந்தான்.

தந்தை "நகைகள் எங்கேடா?" என்று கர்ஜித்தார்.

"எனக்குத் தெரியவே தெரியாது!" என்று சாதித்தான் மகன்.

எப்போதுமே கோபம் வந்துவிட்டால் அவருக்குத் தலைகால் புரியாது. அதுவும் இன்று மகன் தமது விருப்பத்துக்கு விரோதமாகத் தன் ஆசையை நிறைவேற்றிக்கொள்ள இப்படி ஒருவேலை செய்திருக்கிறான் என்றவுடன் அவர் பிரளய கால ருத்திரனாகவே மாறி விட்டார்! "ஏய்! வாங்கிக் கொள்கிற வழியில் வாங்கிக் கொள்கிறேன். நகைகளைக் கக்க வைக்கிறேனா இல்லையா, பார்!" என்று கூச்சலிட்டு விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு விரைந்தார்.

அவர் வந்த காரியத்தை அறிந்த போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டரே திடுக்கிட்டார்! "என்ன ஸார் இது! உங்கள் சொந்த மகன் மீதா புகார் கொடுப்பது?" என்றார்.

"அவன் எனக்கு அடங்காத பிள்ளை, ஸார்! அவனுக்கு இரங்குவது மகா பாவம்! நீங்கள் கடமையைச் செய்யுங்கள்!" என்று கூறினார் மகாதேவன் பிடிவாதமாக.

அப்புறம் போலீஸ் அதிகாரி என்ன செய்வது? தினகரன் அடுத்த ஐந்தாவது நிமிஷம் கைதியாகி, ரிமாண்டில் வைக்கப்பட்டான்!

"ஸார்! நகைகள் அநேகமாக அந்த மங்களம் என்பவள் வீட்டில்தான் இருக்கும்! அங்கே போய் விசாரித்தால் கிடைத்துவிடும்" என்று மகாதேவன் கூறியதும் ஸப்-இன்ஸ்பெக்டர் அவருடன் கிளம்பினார்.

மங்களம் வீட்டில் இல்லை. தனியாக இருந்த மாலதி போலீஸ் அதிகாரியையும் மகாதேவனையும் கண்டதும் விஷயம் புரியாமல் திடுக்கிட்டாள்.

"ஏன் அம்மா! இவருடைய மகன் தன் வீட்டிலிருந்து ஒரு சங்கிலியையும், நாலு வளையல்களையும் திருடிவிட்டதற்காகக் கைது செய்யப்பட்டிருக்கிறார்! அவைகளை உங்களிடம் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. எங்கே அவை?" என்றார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

"தினகரன் ஜெயிலில் இருக்கிறாரா!"—துயரம் தாங்கமாட்டாமல் திணறிப் போனாள் அந்த அபலைப் பெண்.

ஜட்ஜ்: அந்தக் கொலைகாரன் குற்றவாளி அல்ல என்பதற்கு என்ன காரணம் கூறுகிறீர்கள்!



ஜூரி: பைத்தியம் பிடித்திருப்பதுதான் அதற்குக் காரணம்.

ஜட்ஜ்: யாருக்கு! உங்கள் எட்டு பேருக்குமா?

"நகைகளைக் கழற்றிக் கொடுக்கப் போகிறாயா, இல்லையா?" என்று கர்ஜித்தார் மகாதேவன்.

தன் கழுத்திலிருந்த செயினையும், கைகளிலிருந்த இரு ஜோடி வளையல்களையும் கழற்றித் தலைகுனிந்தவாறு போலீஸ் அதிகாரியிடம் அளித்தாள் மாலதி.

"யார் வீட்டு நகையை எவ்வளவு சொந்தத்துடன் போட்டுக் கொண்டு விட்டாள், பார்த்தீர்களா! இவளையும் கைது செய்யுங்கள், ஸார்!" என்று கொக்கரித்தார் மகாதேவன்.

"அவசியமில்லை! தேவையாயிருந்தால் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்!" என்று கிளம்பி விட்டார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

மகாதேவன் போலீஸில் புகார் செய்ததும், தினகரன் லாக்-அப்பில் இருப்பதும் நொடியில் ஊர் முழுவதும் பரவிவிட்டது. அம்மணி அழுது புரண்டு துடித்துக் கதறினாள். இப்படியெல்லாம் நடக்குமென்று எதிர்பார்த்திருந்தால் நகைகள் காணாமற் போனது பற்றி வெளியிட்டிருக்கவே மாட்டாள் அவள்.

பிள்ளையைக் காப்பாற்றுவதற்கு இப்போது ஒரே வழிதான் அவள் முன் இருந்தது. தான்தான் அவனிடம் நகைகளைக் கொடுத்ததாகக் கோர்ட்டில் சாட்சியம் கூறினால் ஒருவேளை அவன் விடுதலையாகக் கூடும். ஆனால் அப்படிச் சொன்னால் அப்புறம் கணவருடன் முகம் கொடுத்துப் பேச முடியாமற் போய் விடும். இருதலைக் கொள்ளியாகத் தவித்தாள் அவள். 'கணவரா, பிள்ளையா?'-இப் பிரச்னை விசுவரூபமெடுத்து அவளைக் கலக்கிக் கதற வைத்தது.

* * *

அன்று மாலை இருட்டிய பிறகு, தன் வீட்டில் தயங்கித் தயங்கி நுழைந்த

மாலதியைக் கண்டு அம்மணி திகைத்தாள். 'இந்தப் பாவிப் பெண்ணால் வந்ததுதானே இவ்வளவு வினையும்!' என்று அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "வாடி, அம்மா மகராசி! இன்னும் என்ன பாக்கி வைத்திருக்கிறாய்?" என்றாள் கசப்புடன்.

"அவர் இப்படிச் செய்யப் போகிறார் என்று எங்களுக்குத் தெரியுமா, மாமி? நகைகளை வாங்கிக் கொள்ள எங்கம்மா எவ்வளவோ மறுத்தாள்! நீங்கள் தான் கொடுத்தீர்கள் என்று சொல்லி வற்புறுத்திக் கொடுத்தார் அவர். பரவாயில்லை. அவரைத் தப்புவிக்க மார்க்கம் இருக்கிறது!" என்றாள் மாலதி.

"மார்க்கம் இருக்கிறதா?" என்று பதறினாள் பெற்றவள்.

"இருக்கிறது. இந்தாருங்கள், உங்கள் நகைகள். இந்த நகைகளை விற்று ஐந்நூறு ரூபாய்ப் பணம் எடுத்துக் கொள்ளச் சொன்னார். அதை விற்றுப் பணமாக்க எனக்கும் என் தாயாருக்கும் சம்மதமில்லை. உங்களிடம் திருப்பிக் கொடுக்கவே நினைத்திருந்தோம். அதற்குள் இந்த விபரீதம் நடந்து விட்டது" என்று சங்கிலியையும் வளையல்களையும் அவளிடம் அளித்தாள் மாலதி.

அவற்றைப் பெற்றுக் கொண்ட அம்மணிக்கு ஒரே ஆச்சரியம். "இது ஏது? அப்படியானால்..." என்று ஆரம்பித்தவளை மாலதி இடைமறித்து, "போலீஸ்காரர்கள் வாங்கிக் கொண்டு போயிருப்பது என் நகைகள், மாமி! ரோல்டுகோல்டு நகைகள்! அதிர்ஷ்டவசமாக அந்த நகைகளும் இவைகளைப் போலவே இருந்திருக்கின்றன. போலீஸ் இன்ஸ்பெக்டரும், உங்கள் கணவரும் வந்து மிரட்டி வாங்கிச் சென்று விட்டார்கள். இங்கே உடனே ஓடி வரலாம் என்றால் உங்கள் கணவர் இருக்கப் போகிறாரே என்று பயமாயிருந்தது. நகைகள் கெட்டுப் போகவில்லை என்று சொல்லி உங்கள் பிள்ளையை மீட்க ஏற்பாடு செய்யுங்கள்!" என்றாள்.

"எவ்வளவு நல்ல குணம் உனக்கு! எப்பேர்ப்பட்ட புத்திசாலி நீ! உன்னை மருமகளாக ஆக்கிக் கொள்ள மறுக்கிறாரே என் பிடிவாதக்கணவர்!" என்றாள் அம்மணி உணர்ச்சி வசப்பட்டவளாக.

"மாமி! நான் போய் வருகிறேன். மேலே ஆகவேண்டியதைக் கவனியுங்கள்!" என்று விடைபெற்றாள் மாலதி.

சற்று நேரம் பொறுத்து மகாதேவன் வந்தார். "அவசரப்பட்டு அநியாயம் செய்து விட்டீர்களே! என் குழந்தையை ஜெயிலில் வைத்து விட்டீர்களே! நகைகள் காணாமல் போகவே இல்லை. கூடத்து அலமாரியில் வைத்து விட்டு மறந்துவிட்டேன். பீரோவில் அதுஎன்னமாக இருக்கும்?" என்று அழுது ஆர்ப்பாட்டம் செய்தாள் அம்மணி.

நெஞ்சில் ஆயிரம் தேள்கள் கொட்டுவது போலிருந்தது மகாதேவனுக்கு. நகைகளை எடுத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினார். "ஸார், ஸார்! நான் மகாபாவி! முட்டாள்! ஆத்திரத்தினால் அறிவிழந்து பிள்ளைக்கே மகத்தான அநீதி செய்து விட்டேன்!" என்று கதறியவாறு விஷயங்களை விவரமாக ஸப்-இன்ஸ்பெக்டரிடம் கூறினார்.

"நான் அப்போதே சொன்னேனே, ஸார்! அவசரப்பட்டுக் காரியங்களைச் செய்யாதீர்கள், இனிமேலாவது!" என்று கூறிப் புகாரை வாபஸ் பெறுவதாக அவரிடம் எழுதி வாங்கிக்கொண்டு தினகரனை விடுதலை செய்து அனுப்பினார் ஸப்-இன்ஸ்பெக்டர்.

தாயார் தனயனைக் கண்டதும் கட்டிக் கொண்டு கதறினாள். அப்புறம் தனிமையில், "ஏண்டா, அசட்டுப்பிள்ளை! செய்கிற காரியத்தை என்னிடம் சொல்லி விட்டுச் செய்வதற்கென்ன? அந்தப் புத்திசாலிப் பெண் யுக்தியாக நடந்து கொண்டிரா விட்டால் உன் கதி என்னவாகியிருக்கும்?" என்று கடிந்துகொண்டு நடந்தவைகளை அவனுக்குக் கூறினாள்.

மறுநாள் காலை அவன் அப்பா தயங்கித் தயங்கி அவனைக் கேட்டார்: "ஏண்டா, அந்தப் பெண்ணுக்கு அந்த நகைகளை நீ எப்போது வாங்கிக்கொடுத்தாய்? அதற்குப் பணம் ஏது?"

"அது வெறும் ரோல்ட் கோல்ட் அப்பா! எல்லாமாகச் சேர்ந்து பத்து ரூபாய்கூடப் பெறாது! தங்க நகை வாங்கிக் கொடுக்க என்னிடம் பணம் ஏது?" என்றான் அழாக்குறையாக.

"அவர்கள் வீட்டிலிருந்து நகைகளைக் கைப்பற்றி வந்த விஷயம் உனக்குத் தெரியாதா? அப்போதே விஷயத்தைச் சொல்லியிருந்தால் நல்லதாய்ப் போயிருக்குமே!" என்றார் மகாதேவன்.

"லட்சாதிபதியாகிய உங்கள் பிள்ளை தன் காதலிக்கு 'ரோல்ட் கோல்ட்' நகைகளைப் பரிசளித்திருக்கிறான் என்பது வெளியானால் உங்களுக்கல்லவா அவமானம் ஏற்படும்!"

"நான் தவம்தான். அவளைத் தங்கத்தாலே இழைத்து விடுவோம்!"

"...!...!...!"

"என்னடா அப்படிப் பார்க்கிறாய்! என் மருமகளாக வரப்போகிறாளடா அவள்!" என்றார் அவர்.

"நிஜமாகவா?" என்று தன்னை மறந்து கூவிவிட்டான் தினகரன்!

# அசலும் நகலும்

வேகா




மைசூர்ப்பாகுத் துண்டுகளை யெல்லாம் எவர்சில்வர் சம்புடத்தில் அடுக்கி வைத்துக் கொண்டிருந்தாள் சரகவதி.

''அம்மா எனக்கு அம்மா...''

பின்புறமிருந்து தோளுக்கு மேலாகத் தன் குஞ்சுக் கரத்தை நீட்டிக் கெஞ்சிக் கேட்டான் பாலு. 'மணி பத்தடித்து விட்டதே. எப்போது போய்த் திரும்புவது? மயிலாப்பூர் போய் வர இரண்டு மணி நேரத்துக்கு மேல் பிடிக்குமே!' என்று விசாரப்பட்டுக் கொண்டே அவசரமாக வேலையில் முனைந்திருந்த சரகவதி பின்னால் வந்த பாலகனைக் கவனிக்கவில்லை. முதலிலேயே பார்த்திருந்தால் சட்டென்று மறைத்து விட்டிருக்கலாம். இப்போது கொடுக்காமல் என்ன செய்வது?

'கொடுத்தால் குறைந்து விடுமே. இருப்பதே பன்னிரண்டு துண்டுகள் தான். சற்றுச் சின்ன தாகப் போட்டிரு தால் இருபத்தி ஐந்து க டிருக்கும். கொண்டுபோ நன்றுயிராதே. குழந்தை குக் கொடுக்காமலா இருப்பது தானைக் கொடுத்து விடுவோமே முழுசு கொடு என்று அழுதால்...'

''உஸ்! தொந்தரவு செய்ய தேடா, கண்ணு! இந்தா...''

சம்புடத்தை இடக் கையா ம றைத்துக் கொண்டு தாம்பாள தில் இருந்த தூளிலிருந்து கொ சம் எடுத்துக் கொடுத்தாள்.

''ஊஹூம்! முழுசாகத் தா...'' என்று சிணுங்கினான்.

நேரமாகிறதே என் ஆத்திரம் அவளுக்கு. த டில் இருந்த தூளையும் சி சிறு கட்டிகளையும் எடுத் உயர வைத்தாள். காலை கட்டிக் கொண்டு அழு குழந்தையைப் பலவந் மாக நகர்த்தி விட்டு, ச டத்தை எடுத்துப் பையி போட்டுக் கொண்டாள்.

''கௌசல்யா! இங் வா. இவனைப் பார்த்து கொள். சொன்ன தெ லாம் மறந்துவிடாதே. வி தானே என்று உன் சி கிதிகள் யார் வீட்டு காவதுபோய் விடாதே நான் நா மணிக்குள் வந் விடுவேன்...''

பாலகன் தரை யில் உருண்டு உருண்டு தேம்பித் தேம்பி அழ ஆரம் பித்து விட்டான்.

தாயின் சொற்படி கைவேலையை அப் படியே போட்டு விட்டு ஓடி வந் கௌசல்யா தம்பியைத் தூக்கி இடுப்பி வைத்துக் கொண்டாள். பன்னிரண்டு வயதுதான் இருக்கும் அவளுக்கு. வய துக்கு மீறிய பொறுமை, புத்திசாலித் தனம், அடக்கம், சுறுசுறுப்பு யாவும் நிறைந்து காணப்பட்டன அவளிடத்தில்.

''அப்பிச்சி...'' என்று உயரக் காட் அழுதான் குழந்தை.

''அவனுக்கு ஒன்று கொடுப்பது தானே அம்மா!''

தம்பிக்குப் பரிந்து தாயிடம் சிபாரிசு செய்தது வியர்த்தமே ஆயிற்று.

''ஆமாம்! கொடுத்தால், கொடுத் ததை வாங்கிக் கொண்டால்தானே? செய்ததே கொஞ்சம். என்னமோ

பின்னைத்தாச்சிப் பெண்ணை வெறுமனே போய்ப் பார்ப்பாளா என்று நல்ல நெய் விட்டுச் செய்தேன். எத்தனை யம்மா செய்ய முடியும்? அதிலே கொஞ் சம் வைத்திருக்கிறேன். ஆளுக்குக் கொஞ்சம் எடுத்துக் கொள்ளுங்கள். ஜாக்கிரதையாக இரு. அம்மா! வருகிறேன்.''

''ஆகட்டும். அம்மா! நீ பொழுதோடு வந்து விடு. நடந்து வராதே, பஸ் ஸிலேயே வா. நமக்குக் கஷ்டம் எப் போதும் தானிருக்கு.''

மகளின் வாத்ஸல்யத்தால் பூரித்த நெஞ்சுடன் வெய்யிலைப் பாராமல் 'விடு விடு' என்று நடக்கலானாள் சரஸ்வதி. மகள் சொல்வதைக் கேட்காமல் நடந்து தான் சென்றாள் அவள். மாதக் கடைசி. இருக்கிற சில்லறைக்குப் பூ, பழம், வெற்றிலை எல்லாம் வாங்கியாகி விட் டது. மேலும் பணத்துக்கு அவள் எங்கே போவாள்?

தொட்டுத் தொட்டுப் பார்த் துச் செலவு செய்யும்போதே சமாளிக்க முடியவில்லையே! கண்ணை மூடிக் கொண்டு செல வழிக்க முடியுமா? ஒரு ஆள் தான் என்றாலும் போகவர பஸ் ஸுக்கு ஆறணா ஆகிறதே! சிரமத் தைப் பாராமல் நடந்து விட் டால் அது மிச்சம்தானே? அது வேறு செலவுக்கு ஆகும். மயிலாப் பூர் வரை நடக்க முடியாதபடி இப்போது என்ன வந்து விட்டது உடம்புக்கு? ஒரு கேடுமில்லை. நடந்தால் போகிறது. பன்னி ரண்டு மணிக்குள் போய்விட முடி யாதா? வெய்யில்தான். என்ன செய்ய முடியும்?

சுமதி இப்போது எப்படி இருக் கிறாளோ? மசக்கை அதிகமா யிருக்கிறதோ? மைசூர்ப்பாகு என்றால் உயிர் அவளுக்கு. அத னால்தான் இருக்கிற நெய்யை விட்டுப் பண்ணினேன். பாவம், பாலு! ஒன்று முழுசாக அவ னுக்கு மட்டும் கொடுத்திருக்க லாம். அழுகை நின்றதோ இல் லையோ? கௌசல்யா பார்த்துக் கொள்ள மாட்டாளா?

குறைந்து விடுமே என்றுதான் தர வில்லை. சின்னதானால் என்ன? தூளா னால் என்ன? எல்லாம் ஒரே பண்டம் தானே? ஒரே மாதிரி ருசியாகத்தானே இருக்கும்? எதைத் தின்றாலென்ன? இது தெரியவில்லையே அவனுக்கு? பாவம் குழந்தைதானே! அப்படித்தானே இருக் கும். நாம்தான் அனுசரித்துப் போக வேண்டும். உம்! மனசு இருவிதமாக அலைகிறது. பாழும் அஞ்ஞானம்...

நினைவு வெள்ளம் அவளை அரை மணி யில் மயிலாப்பூருக்கு அடித்துச் சென்று விட்டது. கபாலி கோயிலைப் பார்த் ததும்தான் தன் உணர்வு பெற்றாள். திசை நோக்கிக் கைகுவித்து விட்டு நடந் தாள். சுமதியின் வீட்டில் காலடி வைக் கையில் மணி பதினொன்று. நல்ல வெய் யிலில் வந்ததில் தாகம் நாவை வறட்டி யது. முகத்தில் வழிந்த வியர்வையைப் புடவைத் தலைப்பால் துடைத்த வண் ணம், 'உஸ், அப்பா!' என்றவாறு வாச லிலேயே உட்கார்ந்து விட்டாள். சற்றுப் பொறுத்துத்தான் உள்ளே போனாள்.

சோபாவில் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டிருந்தாள் சுமதி. கூடத்தில் வந்து நின்ற சரஸ்வதி வரவேற்பவர் எவருமின்றித் தயங்கி நின்றாள். பிறகு சுமதியை அணுகி, ''சுமதி! சௌக்கி யமா?'' என விசாரித்தாள் வாஞ்சையுடன். கண்ணைத் திறந்து பார்த்தாள் சுமதி.

''ஓ! நீயா சித்தி! இப்போதுதான் வரு கிறாயா?''

''உம்.''



"அப்பா! இந்த வெய்யிலிலா புறப்பட்டு வந்தாய்?"

உடலைக் குலுக்கிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் சுமதி.

"வெய்யிலைப் பார்த்தால் முடிகிறதா, அம்மா? இப்போதுதான் ஒழிந்திருக்கு. மாமி எங்கே? மாப்பிள்ளை எல்லாரும் சௌக்கியமா?"

"உம்!"

அடுக்கடுக்கான கேள்விகளுக்கு ரத்தினச் சுருக்கமாகவே விடை கிடைத்தது.

"இந்தா! உனக்குப் பிடிக்குமே என்று பண்ணிக் கொண்டு வந்தேன். நன்றாக இருக்கிறதா, சாப்பிட்டுப் பார்! இந்த வெற்றிலை, பாக்கு, பழத்தையும் எடுத்துக் கொள்."

பையில் மேலாக இருந்த மைசூர்ப் பாகு சம்புடத்தை எடுத்து முதலில் கொடுத்தாள். பிறகு மற்றதை யெல்லாம் எடுத்து எதிரேயிருந்த மேஜையின் மேல் வைத்தாள். சம்புடத்தை வாங்கிக் கொண்டு எழுந்த சுமதி, "இதெல்லாம் எதற்கு சித்தி? உனக்கு வீண் சிரமம்?" என்று இழுத்தாள் நாசுக்காக.

"இதிலே என்னடியம்மா சிரமம்? ஏதோ என்னாலானது. வெறுமனே வர மனசு கேட்கவில்லை. அப்பா மூந்தாநாள்தான் சொன்னார் விஷயத்தை. உடனேயே பறந்தோடி வந்து பார்க்க வேண்டும் போலிருந்தது எனக்கு. நேற்று வர முடியவில்லை. இன்று எது எப்படியோ போகட்டும் என்று கிளம்பி விட்டேன். ரொம்பவும் மசக்கை உபத்திரவம் இருக்கிறதா? பத்து நாட்கள் தான் அங்கு வந்து இரேன். மாமியாரைக் கேட்கட்டுமா? அனுப்பினால் கையோடு அழைத்துப் போகிறேன். குழந்தைகளும் உன்னைப் பார்க்கத் துடிக்கிறார்கள். கல்யாணமாகி வந்தவள் நீ அப்புறம் அந்தப் பக்கமே வரவில்லை. நீ இப்போதாவது வந்தால் எங்களுக்கெல்லாம் திருப்தியாக இருக்கும். வருகிறாயா, சுமதி?"

சரசுவதியின் இடைவிடாப் பேச்சு சுமதியின் மாமியாரை உள்ளிருந்து வெளியே இழுத்தது போலும். வயதான சுமங்கலியான அவள் தன் கெட்டிக்கரை சரிகைப் பட்டுப் புடவையை இழுத்து விட்டபடி கம்பீரமாக வந்தாள். சரசுவதியை அலட்சியமாகப் பார்த்து விட்டுத் தன் மருமகளைப் பார்த்தாள். சுமதியின் கையிலிருந்த சம்புடம் அவள் கவனத்தைக் கவர்ந்தது.

"என்னடி அது!"

"சித்தி என்னமோ கொண்டு வந்திருக்கிறாள்."

"ஓ, அப்படியா! சரசுவதியா? எப்போ வந்தே நீ?"

அப்போதுதான் அவளைக் கண்டது போல் குசலம் விசாரித்தாள் கிழவி. சரசுவதியின் உற்சாகம் குப்பென்று குறைந்து விட்டது.

"இப்போதுதான் வந்தேன், மாமி! சுமதியைப் பார்த்துப் போகலாம் என்று வந்தேன். பேரன் பிறக்கப் போகிறானே? சந்தோஷம்!"

கிழவி தன் மகிழ்ச்சியைப் பெருந்தன்மையாக ஒரு அரைப் புன்னகையால் காட்டிக் கொண்டாள்.

"இந்த வெய்யிலில் நீ எப்படி அம்மா வந்தாய்!"

"ஆமாம், மாமி! பஸ் ஸ்டாண்டிலிருந்து இங்கு வருவதற்குள் எனக்குக் கால் பொரிந்து விட்டது. தாகமான தாகம்! தாங்கமுடியவில்லை."

"அப்படி ஏண்டியம்மா கஷ்டப்பட வேண்டும் வீணுக்கு?"

"அவளைப் பத்து நாட்களாவது அங்கு அழைத்துப் போய் வைத்திருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எப்போது வந்து கேட்டாலும் அனுப்பவே மறுக்கிறீர்கள் நீங்கள். இந்தத் தடவை எப்பாடு பட்டாவது அழைத்துப் போயே தீர்வது என்ற தீர்மானத்துடன்தான் வந்திருக்கிறேன். அவளுக்கும் ஒரு மாறுதல் வேண்டாமா? குழந்தைகளும் ஆசைப்படுகிறார்கள். அனுப்புங்கள், மாமி!" என்றாள்.

கிழவியின் முகத்திலே ஓர் அலட்சிய பாவம் பரவியது. சிங்கம் ஆட்டைப் பார்ப்பதுபோல் சரசுவதியைக் கூர்ந்து பார்த்தாள்.

"எப்படி அனுப்புவது? டாக்டர் அவளை எழுந்திருக்கவே கூடாது என்கிறார். மசக்கையான மசக்கை இல்லை. சாதம் தங்குவதேயில்லை. ஹார்லிக்சும், பழ ரசமும்தான். காப்பியோ பிடிக்கவே யில்லை. ஓவலும், பாலுமே கொடுக்கிறேன். அங்கே வந்தால் அதெல்லாம் சரிப்படுமோ? உடம்பு சீரழிந்து விடும். இத்தனை நாள்வரை உனக்குப் பாரமாயிருந்தது போதும். இனிமேல் எதற்கு அம்மா உனக்குச் சிரமம்? நானே எல்லாம் பார்த்துக் கொள்கிறேன். தினமும் சாயங்காலம் காரிலே கடற்கரைக்கு அழைத்துப் போய் வருகிறேன். ராணி மாதிரி இங்கே இருப்பதைவிட்டு அங்கே வந்து ஏன் கஷ்டப்பட்டுக் கொண்டு

இருக்க வேண்டும்? அப்படி என்ன தலை யெழுத்து அவளுக்கு? வேண்டுமானால் எட்டிலே, பத்திலே வந்து பார்த்துப் போங்கள். அது கூட நீ வெய்யிலில் அலைவதைப்பட்டாதே. அவள் அப்பாவை ஆபீசிலிருந்து வரும்போது வந்து பார்த்துவிட்டு வரச் சொல்லு. அவனைத் தான் வாரிக் கொடுத்தாச்சு. இவளாவது எனக்கு இருக்கட்டும்!''

வாயடைத்து நின்றாள் சரசுவதி. பதில் சொல்ல என்ன இருக்கிறது?

எத்தனை ஆவலும் மகிழ்ச்சியுமாக அங்கு வந்தாளோ அத்தனையும் ஆவியாகி விட்டது கணத்தில். அவளும் வந்ததிலிருந்து நின்றுகொண்டுதானிருந்தாள். உதட்டு உபசாரத்துக்காகக் கூட யாரும் அவளை உட்காரச் சொல்லவில்லை. 'வெய்யிலில் வந்திருக்கிறாயே, ஒரு தம்ளர் தண்ணீர் குடிக்கிறாயா?' என்று கேட்பாரில்லை.

பேச்சை முடித்து விட்ட சுமதியின் மாமியார் உட்புறம் சென்று விட்டாள். சரசுவதியால் தாங்க முடியவில்லை. ''ரொம்பத் தாகமாயிருக்கிறது, சுமதி! கொஞ்சம் தண்ணீர் தருகிறாயா?'' என்று கேட்டு விட்டாள் துயரம் நெஞ்சை அடைக்க.

''உம்!''

மெதுவாக எழுந்து சென்ற சுமதியைப் பின்தொடர்ந்த சரசுவதி, சமையல் அறை வாசற்படியருகேயே நின்று விட்டாள். அதற்கு மேல் செல்ல அவளுக்குக் கால் கூசியது.

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது.

''என்னடியம்மா வேண்டும்?''

''எனக்கு ஒன்றும் வேண்டாம், பாட்டி! சித்திக்குத் தண்ணீர் வேண்டுமாம்'' என்றாள் சுமதி.

''அதற்கு உன்னை எழுந்திருக்க வைத்தாளா, அவள்? சரி! சரி! நீ உள்ளே போய்ப் படுத்துக் கொள்.''

''நான் கொண்டு போய்க் கொடுக்கிறேன்'' என்றாள் பாட்டி.

''சரி, பாட்டி!''

''இங்கே பார், சுமதி. அவள் என்னமோ கொண்டு வந்தாளே, அதைத் தின்று வைக்காதேயடியம்மா. மட்ட நெய்யில் தான் செய்திருப்பாள். அதெல்லாம், உன்னுடைய உடம்புக்கு ஆகாது தெரியுமா? நம் வீட்டில் செய்தால் போகிறது.''

''சரி, பாட்டி!''

சவுக்கடி பட்டவளைப் போலத் துடிதுடித்தாள் சரசுவதி. இந்தச் சம்பாஷணையைக் கேட்டதும் வேகமாகத் திரும்பி விட்டாள் கூடத்துக்கு.

வந்தவர்: முன் வக்கீல் சார், ஒரு மாடு என் பயிர் பாதியை மேய்ந்து விட்டது! மாட்டுச் சொந்தக்காரர் பாதிப் பயிரின் கிரயத்தைக் கொடுக்கவேண்டியது தானே?
வக்கீல்: அவசியம் கொடுத்துத்தான் ஆக வேண்டும்?



வந்தவர்: உங்கள் மாடுதான் மேய்ந்தது. பாதிப் பணம் உடனே கொடும்.
வக்கீல்: சரி எடுத்துக் கொண்டு, பாக்கி நூறு ரூபாய் பீஸ் பணத்தை உடனே கீழே வையும்.

''இந்தாடியம்மா, தண்ணீர்!''

பானைத் தண்ணீர்தான். குளிர்ச்சிதான். ஆயினும் அது சரசுவதியின் தொண்டைக்குள் அக்னித் திராவகமாகத்தான் இறங்கியது. அதன் பிறகு அங்கு ஒரு கணம்கூட நிற்கப் பிடிக்கவில்லை சரசுவதிக்கு. பெண் படுக்கச் சென்று விட்டாள். ரொம்பவும் வேலையிருப்பது போல் பங்களாவைச் சுற்றிச் சுற்றித் திரிந்து இவளை மிரட்டி, அவளை அதட்டிக் கொண்டிருந்த கிழவியோடு பேசக்கூடப் பிடிக்கவில்லை.

கண் கலங்கப் பங்களாவை விட்டு வாசலுக்கு வந்தபோது, வேலைக்காரியின் பிள்ளை அவள் மடியைப் பிடித்து இழுத்து எதற்கோ அழுது கொண்டிருந்ததைக் கண்டாள். சரசுவதியின் பார்வை அந்த ஏழைச் சிறுவனின்மீது படிந்தது.

''ஏனம்மா அழுகிறான் அவன்?'' இரக்கத்துடன் வினவினாள்.

''அதுக்கென்னம்மா வேலை? இப்படித் தான் உயிரை வாங்கும்.''

''என்ன வேண்டுமாம் அவனுக்கு?''

''பாருங்கம்மா! அம்மா ஏதோ பலகாரம் குடுத்தாங்க. எல்லாத்தையும் கொடுன்னு அழுவுதுங்க.''

''அப்படியா?''

''ஆமாங்க. யாரோ வந்தவங்க பிள்ளைத்தாச்சிப் பெண்ணுக்காகப் பலகாரம் கொண்டு வந்தாங்களாம். அதை மருமகள் தின்னா உடம்புக்கு ஆகாதாம். என்கிட்டே கொடுத்து விட்டாங்க.'' திக்கென்றது சரசுவதிக்கு.



# செல்லம் அழுதது ஏன்

பிற்பகல் வேளை: பித்தான்கள் உடைந்து காலரிலும் கைகளிலும் இற்றிருந்த என் கணவரின் சட்டைகளை நான் தைத்துக்கொண்டிருந்தேன். அதே சமயம் பக்கத்து வீட்டுப் பப்பியுடன் விளையாடிக் கொண்டிருந்த என் குழந்தை செல்லம் திடீரென வீரிட்டு அழுதாள்; அந்த அதிர்ச்சியில் தையல் ஊசியே என் கையில் ஏறிவிட்டது. கோபத்துடன் திண்ணைக்கு ஓடிவந்தேன். அதே சமயம், பப்பியின் தாயார் கண்ணம்மாவும் அங்கு ஓடிவந்து செல்லத்தை வாரியெடுத்து சமாதானம் செய்ய முயன்றாள்: "ஆரு அடிச்சாம்மா என் செல்லக் குழந்தையை?"

"மாமி, ப...ப...பப்பி என் பொம்மயோட கவுனை அழுக்காக்கிட்டா, மாமி!" என்று விசித்து விசித்துக் கூறினாள் செல்லம்.

"அவ்வளவுதானே. பப்பியை நாம்ப நல்லா அடிச்சுட்டு, உன் பொம்மைக்கு புதுசா ஒரு கவுன் வாங்கிப் போட்டுடலாம். வா!" என்று தேற்றி விட்டு, இரு குழந்தைகளையும் தன்னோடு அழைத்துச் சென்றாள் கண்ணம்மா. கண்ணம்மாவிடம் காணப்படும் தங்கமான குணங்களில் ஒன்று, தன் குழந்தைகளைப் போலவே பிறர் குழந்தைகளையும் அரவணைத்துக்கொள்ளும் தன்மை. தன் தந்தை பணக்காரர் என்ற கர்வம் எள்ளளவும் அவளிடம் கிடையாது.-இவ்வாறு எண்ணமிட்ட வண்ணம் அப்படியே கண்ணயர்ந்து விட்டேன். அப்புறம் செல்லம் வந்து என்னை எழுப்பினாள். கண்விழித்துப் பார்த்ததும், செல்லத்தின் கையிலிருந்த பொம்மைக்குப் புதுக்கவுன் போட்டிருந்தது தென்பட்டது—முன்பிருந்ததைப் போலவே இருந்தது இந்தக் கவுனும். இந்த ஏற்பாடு எனக்குப் பிடிக்கவில்லை. இதை ஆட்சேபிக்க கண்ணம்மாவின் வீட்டுக்கே சென்றேன்.

கண்ணம்மாவோ "புதிதாகக் கவுன் ஏதும் வாங்கவில்லையே. சில துணிகளை நான் துவைக்க வேண்டியிருந்தது. கையோடு கையாக அந்தக் கவுனையும் அலசினேன்" என்றாள். அழகாயிருக்கிறதே பேச்சு! வீட்டில் துணிகளைத் துவைத்துக் கொள்ளும் வழக்கம் எங்களுக்கே கிடையாது; சலவை செய்ய வெளியே அனுப்புகிறோம். அப்படியிருக்க, மோதிரக் கையினால் துணி துவைப்பதாகக் கூறினால், நம்புகிறவள் நானா? "அதெப்படியம்மா துவைத்தீர்கள், அடித்துத் துவைக்கும் சத்தங்கூடக் கேட்காமல்?" என்றேன்.

S. 258A-50 TM

என் பேச்சில் நம்பிக்கை இல்லாவிட்டால் இதோ இந்தத் துணிகளைப் பாருங்கள். இப்போது தான் இஸ்திரிபோட்டு முடித்தேன். ஆனால் அடித்துத் துவைக்கும் சத்தம் கேட்காத காரணம்........."



ஆனால் என் கவனமோ அவன் பேச்சில் லயிக்கவில்லை. வெகு பளிச்சென்று சுத்தமாக விளங்கிய அந்தத் துணிகள் மீது என் பார்வையைப் பறிகொடுத்துவிட்டேன். எனினும், அதே சமயம் என் மனதை உறுத்திய விஷயம் வேறொன்று : தன் செய்கையைப்பற்றி நாலுபேர் என்ன நினைப்பார்கள் என்பதை யோசித்துப் பார்த்தானா இவன்? இதையே நான் இவனிடம் கேட்டதும், அவன் சிரித்துவிட்டு "நல்ல கேள்வி கேட்டாய். என் வேலையை செய்வதற்கு நான் ஏன் கூச்சப் படவேண்டும். தாம் தூம் விவகாரமே எனக்குப் பிடிப்பதில்லை. என் கையாலேயே நான் துணிகளைத் துவைத்துக்கொள்வதில் எவ்வளவோ சிக்கனமிருக்கிறது. அன்றாடம் உடுத்திக்கொள்ள சுத்தமான துணிகள் கிடைப்பதோடு அவை நீடித்து நிற்கவும் செய்கின்றன" என்றான்.

"நீடித்து உழைக்கிறதாவது; அதென்னமாக ? எங்கள் வீட்டுத்துணிகள் விறுவிறுவென்று கிழிந்துவிடுவதும் வாங்கின சுருக்கோடு விட்டுப்போய் விடுவதும் சர்வ சாதாரணமாகிவிட்டன: வருஷத்துக்குப் பலதடவை புதுத்துணிகள் வாங்கி மாளவில்லை!"



"அடித்துத் துவைப்பதால்தான் அவை கிழிந்துவிடுகின்றன. ஆனால் நாங்களோ அடித்துத் துவைக்காமல் ஸன்லைட் சோப்பினால் சலவை செய்கிறோம்"

பரிசுத்தமுள்ள சிறந்த சோப்பான ஸன்லைட் ஏராளமான நுரை கொழிக்கிறது என்றும், கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலுமுள்ள எல்லா அழுக்குகளையும் நொடிப்பொழுதில் அகற்றிவிடும் நுரை அதனுடையதுதான் என்றும் விளக்கிக்கூறினான் கண்ணம்மா.

இப்போதெல்லாம் நாலுபேர் நினைப்பதைப்பற்றி நானும் அக்கரைப்படுவதில்லை. துணிகளை வீட்டிலேயே ஸன்லைட் சோப்பினால் சலவை செய்துவிடுகிறேன். அது சிக்கனமான சோப் என்றும், சிறிதும் பெரிதுமாக சுமார் நாற்பதைம்பது உருப்படிகளை சுத்தமாகவும் பளிச்சென்றும் வெளுப்பதற்கு ஒரே ஒரு வில்லை ஸன்லைட்டே போதுமானது என்றும் கண்டு கொண்டேன். இப்போதெல்லாம் அன்றாடம் உடுத்துவதற்குத் தூய்மையான துணிகள் எங்களெல்லோருக்கும் கிடைத்துவருகின்றன: கிழிசல்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிந்துகொள்ளும் நிலைமையும் காலர்களையும், கைகளையும் கோட்டுக்குள் மறைத்துக்கொள்ளும் அவசியமும் இனி என் கணவருக்குக் கிடையாது. சிக்கனம் என்றால் எல்லா விதத்திலும் சிக்கனம். ஒரு குடும்பப் பெண்மணிக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?




S 2 588-50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

"என்ன சொன்னே? எங்கே காட்டு, பார்க்கலாம் அதை?"

அவள் மடியை அவிழ்த்துக் காட்டினாள். அதைக் கண்டதும் எரிமலை எனக் குமுறியது சரசுவதியின் உள்ளம். சின்னஞ் சிறு பாலகனைக் கதறவைத்து, சாப்பாட்டுக்குக் கூடக் கரண்டி நெய் வைக்காமல் இருப்பதை எல்லாம் கொட்டி, ஆசையாகப் பெண்ணுக்குப் பிடிக்குமே என்று பார்த்துப் பார்த்துச் செய்து கொண்டு, கொளுத்துகிற வெய்யிலைக் கூட லட்சியம் செய்யாமல், நடக்க முடியாமல் நடந்து எடுத்து வந்தாளே, அந்த மைசூர்ப் பாகுத் துண்டங்கள்தாம். அவை அவள் அழுக்குப் புடவைத் தலைப்பில் சிரித்துப் படுத்துக் கிடந்தன. 'குபீர்' என்று பொங்கியது கண்ணீர்.

"நல்லாத்தானே இருக்கு. ஏன் கொடுத்துட்டாங்க?"

அதற்குமேல் சரசுவதி அங்கே நிற்கவில்லை. ஓட்டமும் நடையுமாக விரைந்தாள் வீட்டுக்கு. பதினைந்து ஆண்டுகளாகக் கூடி வளர்ந்தது இந்தச் சரசுவதியின் கைச் சாப்பாட்டில்தானே? அப்போது வராத உடம்பு இப்போது அவளுக்கு வந்து விடுமா? மூத்தாள் பெண் என்று அவளை என்றாவது வேற்றுமை மனப்பான்மையுடன் ஏதாவது செய்தது உண்டா?

"அம்மா வந்துட்டா!"

பாலுவின் கட்டியம் கௌசல்யாவைக் கூடத்துக்குத் தருவித்தது. பசியாலும் மன உளைச்சலாலும் சேர்ந்து முடங்கிக் கிடந்த தாயாரிடம் ஓடி வந்தாள்.

"ஏனம்மா, படுத்து விட்டாய்? தலை வலிக்கிறதா?"

"உம்."

"நடந்து வந்தாயா? எனக்குத் தெரியுமே உன் குணம். இப்படி ஏன் செட்டுப் பிடிக்கிறாயோ? அக்காவைப் பார்த்தாயா? ஏன் இத்தனை சீக்கிரம் வந்து விட்டாய்? வெய்யில் தாழத்தான் வருவாய் என்று நினைத்தேன். இரு, இதோ வந்து விடுகிறேன்."

உள்ளே ஓடியவள் சில நிமிஷங்களில் தம்ளர் நிறையச் சூடான காப்பியுடன் திரும்பி வந்தாள்.

"இதைக் குடியம்மா. சற்றுப் போனால் எல்லாம் சரியாகி விடும்" என்றாள் தாயாரின் அருகே அமர்ந்து பரிவுடன். சரசுவதி மகளை விழித்துப் பார்த்தாள். தன்னைத் தவழ்ந்த அந்தக் கபடமற்ற முகத்தைப் பார்த்துப் பெருமூச்செறிந்தாள் சரசுவதி.

"உம். சாப்பிடுகிறேன். பாலு ரொம்ப அழுதானோ?" என்று கேட்டாள்.

"இல்லை. சற்று அழுதான். அப்புறம் தூங்கி விட்டான். பிறகுதான் துணியெல்லாம் தோய்த்து உலர்த்தினேன். அரிசி உப்புமா பண்ணியிருக்கேன். சற்றுப் பொறுத்துச் சாப்பிடலாம். இதை முன்னால் குடி. அக்கா எப்படி இருக்கிறாள்? வருகிறாளாமா இங்கே?"

"அவளுக்கு என்னடியம்மா? நன்றாகத்தான் இருக்கிறாள். அங்கே இருக்கிற சுகமும், சௌக்கியமும் இங்கே ஏது? அதனால்தான் வரவில்லை. அது சரி, அந்த மைசூர்ப்பாகு பாத்திரத்தைச் சற்று எடுத்து வா."

"எதற்கு, அம்மா?"

"கொண்டு வாயேன், சொல்கிறேன்."

ஏனோ கௌசல்யா தயங்கினாள்.

"ஏன் தயங்குகிறாய்?"

"இல்லையம்மா! பாலு ரொம்ப அழுதான். அதனாலே அதில் பெரிதாக இருக்கிறதாகப் பார்த்து இரண்டு அவனுக்குக் கொடுத்து விட்டேன், மனம் கேட்காமல். கோபித்துக் கொள்ளாதே, அம்மா! எனக்கு வேண்டாம். குழந்தைக்கு இல்லாமல் எனக்கென்ன?"

"இதற்கா இத்தனை பீடிகை? அதைக் கொண்டு வா. குழந்தைக்கு ஆசை தீரக் கொடுக்கலாம். எனக்கு எதற்கு! வேலைக்காரி பிள்ளையைவிட இவன் என்ன குறைந்து விட்டான்! சின்னஞ் சிறுவனை வஞ்சித்ததற்குத் தக்க பலன் கிடைத்து விட்டது. ஆமாம், நீ எதற்கு உப்புமாவைப் பண்ணிக் கொண்டு அழுகிறாய்? சற்றுச் சும்மாவிருக்க முடியவில்லையா உன்னால்!"

"எல்லாரும் சாப்பிடத்தான் பண்ணினேன். பசங்களும் பசித்து வருவார்கள், பள்ளிக்கூடத்திலிருந்து. நீயும் நடந்து போய் நடந்துதான் வருவாய் என்பதும் தெரியும். அதனால்தான் செய்தேன். நீ பேசாமல் படு. நான் பார்த்துக் கொள்கிறேன் எல்லாம்."

பலவந்தமாகப் படுக்க வைத்து விட்டுத்தான் நகர்ந்தாள் மகள். சரசுவதியின் நெஞ்சு விம்மியது பெருமையால்.

"என்ன இருந்தாலும் பெற்ற பெண்ணுக்குள்ள பாசம் தனிப்பட்டதுதான். களைத்து வந்தவளை உட்காரச் சொல்லக் கூட முடியவில்லை கமலியால். அப்படி இருக்க முடிந்ததா இவளால்? ஆயிரம்தான் அரவணைத்து ஊட்டி வளர்த்தாலும் கூட அசலாகுமோ நகல்! அசல், அசல்தான், நகல், நகல்தான். இரண்டும் ஒருகாலும் சமமாகாது."

சின்னவளின் அன்பு, பெரியவளின் திரஸ்காரத்தை அமுக்கிக் கொண்டு எழுந்து நின்றது கம்பீரமாக. சரசுவதியின் மனம் சாந்தியுற்றது.

பாலர் மலர்

# குமரி முத்து



## 16. சக்கரவர்த்தி

மூன்றாவது நாள் கபாடபுரம் ஒரே கோலாகலமாகக் காணப்பட்டது. மாளிகைகளும் கோபுரங்களும் கண்ணைக் கவரும் வண்ண மலர்களாலும் பனையோலைக் குருத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. தெருவெல்லாம் ஒரே தீப அலங்காரமாக இருந்தது. பெண்களும், ஆண்களும், சிறுவர்களும், சிறுமிகளும் புதிய ஆடைகளை உடுத்தி முத்தாலும் பவளத்தாலுமான நகைகளை அணிந்து கொண்டு வெகு ஜோராக இருந்தனர்.

பெரியவர்களில் சிலர் மாறுவேஷம் போட்டுக்கொண்டு பலவித வேடிக்கைகள் செய்தார்கள். சிறுவர்கள் ஓடிப்பிடித்தும் தாண்டியும் விளையாடினார்கள். சிறுமிகள் கோலாட்டமும் பூப்பந்தும் விளையாடினர்.

திமரென்று பலவித இன்னிசைக் கருவிகளின் இனிய நாதம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அலங்காரம் செய்யப்பட்ட யானைகளும், குதிரைகளும், தீபங்களின் ஒளியில் மின்னிய பொன் ரதங்களும் வரிசை வரிசையாகவந்துகொண்டிருந்தன.

முதலில் வந்த பெரிய யானை ஒன்றின்மேல் விலையுயர்ந்த தங்கப் பேழை இருந்தது. அதில் பிரசித்தி பெற்ற குமரிமுத்து பட்டுத்துணியின் மேல் வைக்கப்பட்டிருந்தது. இந்த யானைக்குப் பின்னால் வந்த இரண்டு பெரிய யானைகளில் வலது பக்கத்தில் வந்து கொண்டிருந்த யானையின்மேல் ஒரு சிறுவன் கம்பீரமாக அமர்ந்திருந்தான். அவன் யார்? அவன் முகம் பார்த்த முகம் போல் இருக்கிறதே.

ஆம்! அவன் நமது பழைய நண்பன் வீராங்கன்தான். இப்பொழுது அவன் புதிய

வீராங்கன். உருவத்தால் மட்டும் அப்படியே தவிர உள்ளத்தால் பழைய வீராங்கன்தான். இளவரசனுக்குரிய ஆடை ஆபரணங்களும், சின்னஞ்சிறிய கிரீடமும், உடைவாளும் அவனைப் புதிய வீராங்கனாகத் தோன்றும்படி செய்தன.

அவனுக்குப் பக்கத்தில் வந்து கொண்டிருந்த யானையில் கபாடபுரத்தின் ஏக சக்கரவர்த்தி கம்பீரத்தோடு உட்கார்ந்திருந்தார். விஷ அம்பு பாய்ந்ததால் ஏற்பட்ட வியாதி நீங்கி அவர் பூரண சுகத்தோடு காணப்பட்டார். அவர் முகத்தில் அளவற்ற மகிழ்ச்சி நிறைந்திருந்தது.

இந்த இரண்டு யானைகளுக்கும் பின்னால் வந்து கொண்டிருந்த ஒரு யானையில் வீராங்கனின் தாய் மலர்ந்த முகத்தோடு உட்கார்ந்திருந்தாள். அந்த யானைக்குப் பக்கத்தில் வந்த மற்றொரு யானையில் வீராங்கனின் தாத்தா குதூகலம் பொங்க அமர்ந்திருந்தார். இதற்குப் பின்னால் மந்திரிகள், தந்திரிகள், சேனாபதி இன்னும் பலரும் வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தப் பெரிய ஊர்வலம் மக்கள் கூட்டமாக நிறைந்திருந்த ஒரு இடத்தில் போய் நின்றது. உடனே ''சக்கரவர்த்தி வாழ்க! சக்கரவர்த்தி வாழ்க!'' என்ற முழக்கம் சமுத்திரம் பொங்குவதுபோல் கேட்டது. அரசர் உட்கார்ந்தபடியே மக்களைப் பார்த்துக் கையமர்த்திவிட்டு மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார் :

''என் அருமை குடிமக்களே! உலகமே வியக்கக்கூடிய செய்தி ஒன்றை உங்களுக்கு அறிவிக்கவே இந்த மாபெரும் விழாவுக்கு ஏற்பாடு செய்யச் சொன்னேன். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக எத்தனையோ பேர்கள் முயற்சி செய்தும் கொண்டுவர முடியாத குமரிமுத்தை நமது நாட்டைச் சேர்ந்த வீரச் சிறுவன் ஒருவன் கொண்டு வந்து சேர்த்து விட்டான். இதோ பக்கத்தில் இருக்கிறானே, இவன்தான் அந்த வீராதி வீரன். உயிரைப் பொருட்படுத்தாது பயங்கரமான கடல் பிராணிகளிடம் போரிட்டு, புயலிலும் சுழலிலும் தப்பிக் குமரிமுத்தை எடுத்து வந்து விட்டான். அந்த முத்தைக் கண்ட மாத்திரத்திலேயே என் தீராத வியாதி தீர்ந்துவிட்டது. இந்தச் சிறுவனின் வீரத்தையும் நெஞ்சுத்துணிவையும் அறிவையும் கண்ட நான் எதிர்காலக் கபாடபுரத்தின் செங்கோலை இவனிடமே கொடுக்க முடிவுசெய்து விட்டேன். இவனை விட வேறு, ஒரு சிறந்த தலைவனை நீங்கள் தேடுவதென்பது முடியாத காரியம். உங்களுடைய கருத்து என்ன? சீக்கிரம் சிந்தித்துச் சொல்லுங்கள்......''

அரசர் இவ்வாறு எதிர்பாராத செய்தியை வெளியிட்டதும் மக்கள் ஒரு கணம் வாயடைத்து விட்டனர்.

பிறகு, ''சக்கரவர்த்தி வாழ்க! எதிர்காலச் சக்கரவர்த்தி வீராங்கன் வாழ்க! அரசரின் ஆணைக்குக் கீழ்ப்படிகிறோம்!...'' என்பன போன்ற மகிழ்ச்சி ஆரவாரத்தை எழுப்பி வீராங்கனுக்குப் பட்டம் சூட்டத் தங்களுக்குச் சம்மதம் எனத் தெரிவித்தனர்.

சக்கரவர்த்தி மகிழ்ச்சி அடைந்தவராகக் கையைத் தூக்கிக் குடிமக்களை ஆசிர்வதித்தார். வீராங்கன் புன்னகை பூத்தான். அன்று ஒருநாள் 'நானும் இப்படி யானையின்மேல் ஊர்வலம் வரமுடியாதா?' என்று கேட்டதும் அதற்குத் தாத்தா கூறிய பதிலும் அவன் நினைவுக்கு வந்தன. தாத்தாவை ஒருமுறை திரும்பிப் பார்த்தான். அவர் ''என் பேரன் இளவரசன் வாழ்க!'' என்று உரக்கக் கூவிக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சி பொங்கி வழிந்தது.

வீராங்கனின் தாய் அவனைப் பெற்றெடுத்த நாளைக் காட்டிலும் பெருமகிழ்ச்சி கொண்டிருந்தாள். சொல்ல முடியாத பூரிப்பில் தத்தளித்தாள். ஆனந்தக் கண்ணீரை அருவி போல் பெருக்கினாள்.

அந்தப் பெருமகிழ்ச்சியில் நாமும் பங்கு கொண்டு ஆசை தீரக் குமரிமுத்தை ஒரு தடவை பார்த்துவிட்டு, இளவரசர் வீராங்கன் அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்வோமாக. (முற்றும்)





# பூர்வ கதை

## ஒரு புறம்

சென்னை மாநகரில் ஒரு பெரிய நர்ஸிங் ஹோமை நடத்தி வருகிறார் டாக்டர் ராமலிங்கம். டாக்டர் பட்டம் பெற்ற அவருடைய ஒரே மகன் நடராஜன் எப். ஆர். ஸி. எஸ். பட்டத்தையும் பெற விரும்பி லண்டனுக்குப் பயணமாகிறான். அவனுடைய அத்தை மகள் விமலா கண்களில் தேங்கி நின்ற இரு கண்ணீர்த் துளிகளுடன் அவனை வழியனுப்பி வைக்கிறாள். அவர்களுக்குத் திருமணம் செய்து வைப்பது என்று சிறு பிராயத்திலிருந்தே இருவரது பெற்றோர்களும் தீர்மானித்திருந்தார்கள்.

அவனை வழியனுப்பி விட்டுத் திருச்சி திரும்பிய விமலாவின் தகப்பனார் இறந்து போகிறார். கடைசி மூச்சை விடுவதற்கு முன்னால் விமலாவை நடராஜனுக்குத் திருமணம் செய்து வைத்து ஜாக்கிரதையாகக் காப்பாற்றுங்கள் என்று ராமலிங்கத்திடம் உறுதிமொழி பெற்றுக் கொள்கிறார்.

விமலாவையும் அவள் தாயார் மரகதம்மாளையும் அழைத்துக் கொண்டு சென்னைக்கு வந்து விடுகிறார்கள் டாக்டர் ராமலிங்கமும் அவர் மனைவி பொன்னம்மாளும்.




மணிசேகரன் என்ற அனாதைச் சிறுவனை ராமலிங்கமும் பொன்னம்மாளும் நடராஜனைப் போலவே தங்கள் மகனாகப் பாவித்து வளர்த்து வந்தார்கள். ஒரு நாள் சொந்த மகன் மீது இருந்த பாசத்தால் வளர்ப்பு மகனை அடித்துவிட்டார் ராமலிங்கம். பதினைந்து வயதுச் சிறுவன் மணி கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினான். பத்து வருஷங்கள் எங்கெங்கெல்லாமோ சுற்றி அலைந்து விட்டு, கடைசியில் ஏக்கத்தைத் தாங்க முடியாமல் சென்னைக்குத் திரும்பி வருகிறான்.

விமலாவைக் கண்டு காதல் கொள்கிறான் மணி. ஆனால் அவளுக்கும் நடராஜனுக்கும் இடையே கல்யாணம் நிச்சயமாகிப் போன விஷயம் என்று அறிந்தபடியால் தயங்கித் தயங்கி, இனி தாள முடியாது என்ற நிலை ஏற்பட்டதும் காதலை வெளியிடுகிறான்.

தன்னை இருவர் காதலிக்கச் செய்த உடலழகை எண்ணிப் பெருமைப் படுகிறாள் விமலா. சில மணி நேரங்கள் அவள் உள்ளம் தட்டுத் தடுமாறிப் போய் விடுகிறது. பின்னர் அத்தான் எழுதியிருந்த ஒரு கடிதத்தைப் படித்து விட்டுத் தன் மீதே வெறுப்படைகிறாள். அது விரைவில் மணியின்மீது கோபமாக மாறுகிறது. அவள் மனநிலையைப் புரிந்து கொண்டு அவளிடம் கொண்டிருந்த காதலைத் தூய நட்பாக மாற்றிக் கொண்டு அவள் நல்வாழ்வுக்குப் பாடுபடுவதிலேயே இன்பம் காணுவதற்கு முயல்கிறான் மணி. டைரக்டர் குமாரவிடம் மணியை வேலையில் அமர்த்துகிறார் ராமலிங்கம்.

லண்டனில் பயிற்சி முடிந்து சென்னை திரும்புகிறான் நடராஜன். அதன் பொருட்டு, ராமலிங்கம் ஏற்பாடு செய்திருந்த விருந்தில் கலந்து கொண்டவர்கள் நடராஜனின் திருமணத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். அப்போது தற்செயலாக மணியைப் பார்த்த நடராஜன் ஏக்கமும் துயரமும் நிறைந்த கண்களால் அவன் விமலாவையே உற்றுப் பார்ப்பதைக் கவனிக்கிறான். அதைப் பேச்சுவாக்கில் விமலாவிடம் தெரியப்படுத்திய போது அவளுடைய வெகுளித் தன்மை அவன் கால்களில் விழுந்து மன்னிப்பு கேட்கச் செய்கிறது. தன் மனம் சில மணி நேரங்கள் மணிசேகரனின் காதலை ஏற்றுக் கொள்ளலாமா என்ற யோசனையில் ஈடுபட்டது உண்மைதான் என்று ஒப்புக் கொள்கிறாள். அதனால் கோபமடைந்து அவளைத் துன்புறுத்திக் கீழே தள்ளி விட்டுப் போகிறான் நடராஜன்.

இதைக் கவனித்த மணி 'இந்த இதயமற்ற அரக்கனுடன் உனக்கு வாழ்வு வேண்டாம். என்னுடன் வந்து விடு' என்கிறான். 'நீங்கள் மார்தட்டியபடி என்

நல்வாழ்வில் உங்களுக்கு அக்கறை இருக்குமானால் அத்தானுக்கும் எனக்கும் இடையே வராதீர்கள்!' என்று கண்டிப்புடன் கூறுகிறாள் விமலா.

மறைந்திருந்து இதைக் கேட்டுக் கொண்டிருந்த நடராஜன் உண்மையை உணர்ந்து மனம் திருந்துகிறான். ஆனால் அதே சமயத்தில் அவன் லண்டனில் இருந்தபோது நர்ஸிங்ஹோமுக்குப் புதிதாக வந்திருந்த நர்ஸ் நிர்மலாவைச் சுற்றி அவன் மனம் வட்டமிடுகிறது. அதனால் அவன் உடலில் ஏற்பட்ட வெப்பத்தை நிலவின் தண்மையால்கூடக் குறைக்க முடியவில்லை.

ஒரு நாள் இரவு நோயாளியைக் கவனிக்கச் சென்ற நடராஜன் நிர்மலாவிடம் தன் காதலை வெளிப்படுத்துகிறான். அத்தானைத் தேடி வந்த விமலா மறைந்திருந்து அதைக் கேட்டு விட்டுக் கண்ணீரும் கம்பலையுமாகத் திரும்புகிறாள். அவள் திரும்பிய பிறகுதான் நிர்மலா தான் ஒரு விதவை என்பதைச் சொல்லி நடராஜனின் மனத்தைத் தெளிவுபடுத்துகிறாள்.

விமலா — நடராஜன் திருமணத்துக்கு நாள் பார்த்து ஏற்பாடுகள் நடக்கின்றன. மணத்தை வரவேற்ற போதிலும் அத்தானையும் நர்ஸ் நிர்மலாவையும் சேர்த்துப் பார்த்ததால் குழம்பிய மனத்துடன் மணியிடம் யோசனை கேட்கிறாள் விமலா. நடராஜனை ஏசுகிறான் மணி. பின்னர் ராமலிங்கத்தினிடம் அன்று தோட்டத்தில் நடராஜன் விமலாவைத் துன்புறுத்தியதையும் நர்ஸ் நிர்மலாவிடம் அவன் நடந்து கொண்ட விதத்தையும் சொல்லுகிறான்.

ராமலிங்கம் நடராஜனைக் கேட்டு விடுகிறார். தன்னைப் பற்றித் தகப்பனாரிடம் அவதூறு சொன்ன மணியின்மீது கோபம் கொண்டு பாய்கிறான் நடராஜன். குறுக்கே வந்த தகப்பனாரைக் கோபத்தில் தள்ளி விடுகிறான். ஏற்கனவே இருதய நோயால் பாதிக்கப்பட்ட ராமலிங்கத்தால் இதைத் தாங்க முடியவில்லை. அவர் மாரடைப்பால் இறந்து போகிறார். திருமணம் நின்று போய் விடுகிறது.




## மற்றொருபுறம்

செண்பகபுரம் கிராமத்தில் கண்ணப்பனுக்கும் கமலத்துக்கும் மல்லிகா பிறந்த எட்டு வருஷங்களுக்குப் பிறகு இரண்டாவது குழந்தை பிறக்கிறது. இந்தக் குழந்தை ஆணாக இருக்கும் என்று ஆவலுடன் எதிர்பார்த்த கண்ணப்பன், சரஸ்வதி பிறந்த பிறகு ஏமாற்றம் அடைகிறான். அந்த நிலையில் பெரியண்ணனுடைய சிநேகமும் அவன் மூலம் குடியைக் கெடுக்கும் மதுப் பழக்கமும் அவனுக்கு ஏற்படுகின்றன.

கமலம் இதை ஆட்சேபிக்கிறாள். கணவன் மனைவியிடையே சண்டை மூள்கிறது. கமலத்தை நன்றாக அடித்து விட்டுப் போய் விடுகிறான் கண்ணப்பன். அன்று போனவன்தான். திரும்பி வரவேயில்லை. பெரியண்ணனுடைய ஆசைநாயகியிடம் குடி போதையில் தகாத முறையில் நடந்து கொண்டான் என்றும், அதனால் கோபம் கொண்டு பெரியண்ணன் அவனைக் கொன்று புதைத்து விட்டான் என்றும் ஊரில் சொன்னார்கள். வேறு சிலர் பெரியண்ணனைத்தான் கண்ணப்பன் கொன்று புதைத்து விட்டுப் போய் விட்டான் என்று சொன்னார்கள். உண்மை என்ன என்பது சரியாக ஒருவருக்கும் தெரியவில்லை.

ஏழு வருஷங்கள் செல்கின்றன. செண்பகபுரத்துக்கு ஒரு படப் பிடிப்புக்காக வந்திருந்த திரைப் படக் கோஷ்டியின் காமிராமேனாக இருந்த சேகர் மல்லிகாவைக் கண்டு அவளை அடைய ஆசை கொள்கிறான். பருவத் துடிப்பில் தாயாரின் புத்திமதிகளைக்கூடக் கேட்காமல் ஆற்றங்கரையில் அவனை அடிக்கடி சந்திக்கிறாள் மல்லிகா. வீட்டுக்கும் அழைத்து வருகிறாள். அங்கே பெரியண்ணனும் கண்ணப்பனும் சேர்ந்து எடுத்துக்கொண்ட ஒரு புகைப்படத்தைப் பார்த்து, 'இவரை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறது' என்கிறான் சேகர்.



டைரக்டர் சுகுமாரன்



சேகர்



சரஸ்வதி



கதிர்வேலன்

'இவரை' என்று யாரைக் குறிப்பிடுகிறான் என்று மல்லிகாவுக்கு விளங்கவில்லை. அந்தப் புகைப் படத்தைச் சேகர் தன்னிடமே வைத்துக் கொள்கிறான்.

இதற்குள் கமலம் ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்த விபரீதம் உருவாகி விடுகிறது. கிராமத் தலையாரி வீரப்பன் மல்லிகாவையும் சேகரையும் ஆற்றங்கரையில் பார்த்து விட்டுக் கணக்கையா சச்சிதானந்தத்திடம் சொல்கிறான். அவரும் மல்லிகாவுக்கு அறிவுரை கூறுகிறார். 'எங்கள் தூய்மையான காதலில் உங்களுக்கு ஏன் அவ்வளவு சந்தேகம்?' என்கிறாள் மல்லிகா. 'நாளைக்குத் திரைப்படக் குழுவினர் கடையைக் கட்டுகிறார்களே?' என்கிறார் சச்சிதானந்தம்.

மல்லிகா ஓடிச் சென்று, 'என்னை விட்டு விட்டுப் போய் விடாதீர்கள். பெண்ணைக் கொன்ற பாவத்தைத் தேடிக் கொள்ளாதீர்கள்' என்கிறாள். அவளைச் சமாதானப் படுத்தித் தான் சென்னைக்குச் சென்று நிச்சயம் பெற்றோர்களின் சம்மதத்துடன் திரும்பி வந்து அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாக வாக்களிக்கிறான் சேகர்.

தான் கண்ட காட்சியைத் தன் மனைவியிடம் சொல்கிறான் வீரப்பன். அவள் மூலம் கிராமம் முழுவதும் பரவி விடுகிறது. வீரப்பனைக் கோழை என்று அவள் ஏச அதனால் ரோசம் அடைந்து ஊருக்குக் கிளம்பிய சேகரைச் சண்டைக்கு இழுத்து நன்றாக அடித்து விடுகிறான். கணக்குப்பிள்ளை குறுக்கே வந்து சண்டையை நிறுத்துகிறார். விம்மிக் கொண்டு தன்னை வந்து அன்புடன் அணைத்த மல்லிகாவைக் கோபத்துடன் வேகமாகத் தள்ளி விட்டுப் போய் விடுகிறான் சேகர்.

கடிதம்மேல் கடிதம் எழுதுகிறாள் மல்லிகா. ஒன்றுக்கும் பதில் இல்லை. அவள் தாயார் அவமானத்தைத் தாள முடியாமல் நோயுற்று இறந்து போகிறாள். கணக்கையாவிடம் தாயாரின் வைத்தியத்துக்கு உதவியதுபோல் தான் சென்னைக்குச் சென்று தன் காதலனை அடையவும் பணம் கொடுத்து உதவும்படி கேட்கிறாள் மல்லிகா. அவர் கையை விரிக்கிறார். வீரப்பனுடைய மனம் மாறி, அவன் அவளுக்கு உதவி புரிகிறான். தங்கை சரஸ்வதியுடன் சென்னைக்கு வருகிறாள் மல்லிகா. சேகரின் வீட்டை அடைந்ததும் அவன் அவளைத் தன் வீட்டுக்குள் நுழையவிடாமல் ஒரு ஹோட்டலில் தங்கச் செய்கிறான். திருமணப் பேச்செடுத்தால் தட்டிக் கழிக்கிறான்.

நாதன் நாட்டிய நாடக நிலையத்தில் மல்லிகாவைச் சேர்க்கிறான் சேகர். நடிப்புப் பயிற்சியும் நடனப் பயிற்சியும் பெறுகிறாள் மல்லிகா. நிலையத்தின் அதிபர் நாதன் அவளிடம் தம் காதலையும் 'சேகருக்கு ஏற்கனவே கல்யாணமாகி இரு குழந்தைகளும் இருக்கின்றன' என்ற உண்மையையும் வெளிப்படுத்துகிறார்.

கோபத்துடன் அவன் வீட்டுக்குச் செல்ல முயன்ற அவளைத் தடுத்து நிறுத்தி, "சேகரின் மனைவியும் உன்னைப்போலவே ஒரு பெண் தான். அவள் வாழ்வையும் பாழடித்து விடாதே!" என்கிறார் நாதன்.

மல்லிகா நடித்த முதல் நாடகம் அரங்கேறி, பெரிய தோல்வியாகவே முடிகிறது. 'சோகமான பாகம் வேண்டாம். குதூகலமாக ஆடிப் பாடி மகிழும் பாத்திரத்தை எனக்குக் கொடுங்கள்' என்கிறாள் மல்லிகா. அப்படியே செய்கிறார் நாதன். இந்த இரண்டாவது நாடகம் மல்லிகா எதிர்பார்த்த படியே பிரமாதமான வெற்றி அடைகிறது.

அதைக் காண வந்த மணிசேகரன் தனது அதிபர் டைரக்டர் சுகுமாரனிடம் மல்லிகாவைப் புகழ்ந்து அவள் புகைப்படத்தையும் காட்டுகிறான். மல்லிகாவைக் காண வருகிறார் சுகுமாரன். அவள் கதையைக் கேட்டறிந்ததும் அவளிடம் அக்கறை கொண்டு தமது திரைப்படத்திலும் நடிக்கச் சந்தர்ப்பம் அளிக்கிறார். அவருக்கும் தனக்கும் இடையே ஏதோ ஒரு பிணைப்பு இருப்பதை உணர்கிறாள் மல்லிகா. 'என்னை உன் தந்தையாகப் பாவித்துக் கொள். எனக்கு ஆட்சேபணை இல்லை' என்று அவர் சொன்னதும் அளவு கடந்த மகிழ்ச்சி அடைகிறாள்.

நாதன் மல்லிகாவை விட்டுப் பிரியத் தயாராக இல்லை. அவருக்கு ஒப்பந்தப்படி ஐம்பதினாயிரம் ரூபாய் கொடுத்து விடுதலை பெறுகிறாள் மல்லிகா.

அவள் நடித்த முதல் படம் அமோகமான வெற்றி அடைகிறது. புதிய நட்சத்திரமான மல்லிகாவின் அழகை வியந்து பாராட்டாதவர்களே கிடையாது.

### முதல் அத்தியாயம்

## கல் சொல்லும் கதை

மகாபலிபுரம் என்று இப்போது அழைக்கப்படும் மாமல்லபுரத்துக்குச் செல்லும் புதிதாக அமைக்கப்பட்ட வழுவழுப்பான தார் ரோட்டிலே ஒரு மோட்டார் கார் மணிக்கு அறுபது மைல் வேகத்தில் சென்று கொண்டிருந்தது. அதை ஓட்டிக் கொண்டு சென்றவர் டைரக்டர் சுகுமாரன். அவர் அருகே பிரபல திரைப்பட நட்சத்திரம் மல்லிகா அமர்ந்திருந்தாள்.

வேகமாகச் செல்லும்போது அடித்த குளுமையான காற்றினால் அவளுடைய கூந்தல் அலைக்கப்பட்டு, பால் போன்ற வெண்மையான நெற்றியில் நெளிந்து அழகுபடுத்தியது. அவள் அணிந்திருந்த மெல்லிய புடவை படபடவென்று காற்றில் அடித்துக் கொண்டு பறந்து பின்னால் உட்கார்ந்திருந்த தங்கை சரஸ்வதியின் முகத்தில் விளையாடியது.



நர்ஸ் நிர்மலா



விமலா



மணிசேகரன்



பொன்னம்மாள்



தம்முடைய புதல்வர்கள் புகழுடன் இருப்பதைக் கண்டு மகிழும் தந்தையைப் பாக்கியம் பெற்றவர் என்றுதான் சொல்ல வேண்டும். நெய்வேலி நிலக்கரிச் சுரங்க நிர்வாக அதிகாரி திரு டி. எம். எஸ். மணி, சார்ட்டர்டு இன்ஜினியர் திரு டி. எம். எஸ். கிரி, மேஜர் டி. எம். சீதாபதி இவர்களின் தந்தையும் பிரபல வக்கீலுமான திரு டி. வி. முத்துகிருஷ்ண ஐயர் அவர்களின் சதாபிஷேக வைபவம் ஜூலை முதல் தேதி சென்னையில் சிறப்பாக நடந்தேறியது. இந்த வைபவத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து சதாபிஷேகம் செய்து கொண்ட பெரியவருக்கு வாழ்த்துக் கூறி ஆசிகளைப் பெற்றனர். வாழ்க, திரு டி. வி. முத்துகிருஷ்ணய்யர்!

"இதற்கு முன்னால் நீ மஹாபலிபுரத்தைப் பார்த்ததில்லையா, மல்லிகா? இதுதான் முதல் முறையா?" என்று கேட்டார் டைரக்டர் சுகுமாரன்.

"ஆமாம்! இங்கே என்ன இருக்கிறது என்றுகூட எனக்குத் தெரியாது."

இதற்குள்ளாகப் பேசும் கல் சித்திரங்களைக் கொண்ட அந்தச் சொப்பன புரியை அவர்கள் நெருங்கிவிட்டார்கள். சற்றுத் தூரத்தில் முற்றுப் பெறாத சில கோபுரங்கள் தென்பட்டன.

"நன்றாகச் சொன்னாய், மல்லிகா! வெட்கக்கேடுதான். வேறு யாரிடமாவது இப்படிச் சொல்லி வைக்காதே! அவமானம். அதோ பார்!" என்று சற்றுத் தூரத்தில் தெரிந்த கற்கோயிலைச் சுட்டிக் காண்பித்தார் சுகுமாரன்.

"ஆஹா!" என்று வாய் விட்டுச் சொல்லி வியந்தாள் மல்லிகா.

"இன்றைக்குச் சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பல்லவ நரசிம்ம சக்கரவர்த்தி காலத்தில் குடைந்தெடுக்கப்பட்ட கற்கோயில்களும் சிற்பங்களும் இவை. ஆயிரம் வருஷங்களுக்கு மேலாகத் தமிழனது கலைத் திறனுக்கு எடுத்துக்காட்டாக இருந்து வந்திருக்கின்றன. இன்னும் ஆயிரமாயிரம் ஆண்டுகள் நிலைத்து நின்று தமிழ் நாட்டின் சிறப்பை உலகுக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கும்."

"தமிழர்கள் எப்போதுமே பண்டைப் பெருமை பேசுவதில் சமர்த்தர்கள்தான்" என்றாள் மல்லிகா.

"இன்றைய உலகுக்கு ஏற்றவாறு நாம் முன்னேற வேண்டியதுதான். முன்னேறிக் கொண்டும் இருக்கிறோம். ஆனால் அதற்காக, பழைமையை மறந்துவிடக் கூடாது மல்லிகா! மகேந்திர பல்லவர், நரசிம்ம பல்லவர் ஆகியோரது கலைத் திறனை எண்ணிப் பெருமைப் படாமல் இருக்கவே முடியாது."

"அல்லது அவர்களது கொடுங்கோன்மையை நினைத்து வருந்தாமலும் இருக்க முடியாது."

"என்ன சொன்னாய்? எது கொடுங்கோன்மை?"

"இவ்வளவு சிற்பங்களையும் கோபுரங்களையும் படைப்பது என்பது சுலபமான காரியமா? எத்தனை பேர்கள் இதில் உழன்றிருக்க வேண்டும்? நூற்றுக்கணக்கான சிற்பிகளை இதில் ஏவி விட்டுத் துன்புறுத்தி யிருப்பார்கள்."

"சாமான்யமான விஷயம் இல்லை, மல்லிகா! ரொம்பக் கடினம்தான். ஆனால் பலாத்காரத்தினால் இவற்றைச் செய்திருக்கவே முடியாது! அன்பினால்தான் சாதித்திருக்க முடியும்! அடடா! இங்கு இருக்கும் ஒவ்வொரு பாறையும் அந்த மகாசிற்பிகளின் கைத்திறனினால் நம்முடன் பேசுகிறதே! ஒவ்வொரு கல்லும் கதை சொல்லுகிறதே! கொடுங்கோன்மையினால் கலை வளராது, மல்லிகா!" என்று சொல்லிக் கொண்டே காரை விட்டு இறங்கினார் சுகுமாரன்.

அந்த மகேந்திர ஜால புரத்தில் நடந்து சென்று ஒவ்வொரு சிற்பமாகப் பார்த்து மகிழ்ந்தார்கள். கடற்கரைக் கோவிலையும், கலங்கரை விளக்கத்தையும், பகீரதன் தவத்தையும், பஞ்ச ரதங்களையும் இன்னும் பார்க்க வேண்டிய எல்லாவற்றையும் பார்த்தார்கள்.

மாலைப் பொழுது மறைந்து வானம் இருள ஆரம்பித்தது. "இனி ஒன்றை

# ஸ்டாக் கார் என்ட்யூரன்ஸ் ரிகார்டுகள்




## இந்த டயர் அபாயமின்றி செல்லக்கூடியதென நிரூபித்துள்ளது




அமெரிக்காவின் அற்புதமான ஸ்டாக் கார் என்ட்யூரன்ஸ் ரிகார்டு - சராசரி மணிக்கு 108 மைல்கள் விதம் 50,000 மைல்கள் செல்லுதல், ஒரு டயர் கூட சேதமடையாமல் பயர்ஸ்டோன் டயர்கள் உபயோகித்து ஏற்பட்டுள்ளது. அந்த டயர்களை இணையற்ற உறுதியுடன் வைப்பதற்கேற்ற அதே உற்பத்தித் திறனும், உன்னத தரக் கண்காணிப்புமே, உங்கள் காரில் பொருத்தப்பட்டுள்ள பயர்ஸ்டோன் டயர்களின் நிச்சயமான பாதுகாப்புத் தன்மைக்கும், நம்பகத் தன்மைக்கும் உத்திரவாதம் அளிக்கின்றன.

# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலெக்ஸ் சாம்பியன் - டியூப்லெஸ் அல்லது டியூபுள்ளது

மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்கென்றே தயாரித்த டயர்


தென்னகமெங்கும்
இப்பொழுது
நடைபெறுகிறது....
அரசு
பிக்சர்ஸ்
தேடிவந்த
செல்வம்
தயாரிப்பு & டைரக்ஷன்
ப. நீலகண்டன்
ஜூலை 25 முதல் சென்னை : வெலிங்டன், அசோக் & மஹாராணி

யும் பார்க்க முடியாது போல் இருக்கிறதே!'' என்றாள் மல்லிகா.

''சரியாகப் போச்சு. இனிமேல்தான் முக்கியமாகப் பார்க்க வேண்டிய காட்சி இருக்கிறது. வா போகலாம்'' என்று சொல்லி மல்லிகாவைக் காரில் ஏற்றிக்கொண்டு கடற்கரைக் கோவிலை அடைந்தார் சுகுமாரன். அங்கே ஒரு பாறை மீது அமர்ந்து சுகமாக வீசிய கடற்காற்றில் நேரம்போவதே தெரியாமல் பேசிக் கொண் டிருந்தார்கள். அவர்களைச் சுற்றிலும் காரிருள் கவிந்துகொண்டது. அமாவாசை இரவில் நட்சத்திரங்கள் கூடத் தெரியாமல் கருமையான மேகங்கள் வந்து சூழ்ந்து கொண்டன. திடீரென்று கண்ணைப் பறிக்கும் பிரகாசத்துடன் இருளைக் கிழித்துக் கொண்டு ஒரு ஒளிக்கற்றை தோன்றியது. ஒரு கணம் பயந்துபோன மல்லிகா அந்த ஒளிக்கற்றை சுழன்று சுழன்று வருவதைக் கண்ட பிறகுதான் கலங்கரை விளக்கம் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது என்பதைப் புரிந்து கொண்டாள்.

''இங்கே பௌர்ணமி இரவில் வர வேண்டும். பால் போன்ற வெண்ணிலவு இந்தக் கல் ஓவியங்களைத் தழுவும்போது பார்க்க வேண்டும்.''

''இன்று ஏன் அழைத்து வந்தீர்கள்? இன்று அமாவாசை இரவு அல்லவா?''

''நான் சிற்பங்களைக் காண மட்டும் வரவில்லையே? வேறு காரணமாக அல்லவோ வந்தேன்.''

இந்தச் சமயத்தில் இலேசாக மழை தூற ஆரம்பித்தது. ''மல்லிகா! மழை தூறுகிறது. வா போகலாம்'' என்று கடற்கரைக் கோபுரத்திலிருந்து வடக்கு நோக்கிக் காரைச் செலுத்தினார்.

காரிருளில் விழுந்த தூற்றல் மீது பிரகாசமான மோட்டாரின் முன் விளக்குகளின் ஒளி பட்டு மின்னியதால் ஆகாயத்திலிருந்து தங்கத் துகள்கள் சொரிவது போல் காட்சி யளித்தன. சுமார் மூன்று மைல் தூரம் சாலையில் சென்ற பிறகு ஓரிடத்தில் நின்றார். ''நீ சரஸ்வதியுடன் காரிலேயே உட்கார்ந்து கொண்டிரு. நான் போய் ஒருவனை அழைத்து வருகிறேன். இங்கே வந்ததும் அவனைச் சென்னைக்கு வரும்படி நீ அழைக்க வேண்டும். நீ அழைத்தால் அவன் தட்டிப் பேசமாட்டான்!''

''உங்களுக்கு வேண்டியவர், நீங்கள் சொல்லிக் கேட்காமல் நான் சொல்லியா கேட்கப் போகிறார்?''

''நானும் ஒரு பெண்ணாக இருந்து உன்னைப் போலவே அழகு படைத்தவளாகவும் இருந்தால் என் வார்த்தையையும் தட்ட மாட்டான்'' என்றார் சுகுமாரன். மல்லிகாவின் குவிந்த சிவந்த அதரங்களில் புன்னகை தவழ்ந்தது.

**நி**தானமாக நடந்து கொண்டே போனார் சுகுமாரன். சுமார் ஐந்து நிமிஷங்கள் நடந்தபிறகு சிறிது விசாலமான இடத்தில் பதினொரு புலிகளால் காக்கப்பட்ட குகைக் கோயில் ஒன்று

## இந்திய விளம்பரதாரர்கள் சங்கத்தின் புதிய தலைவர்

விளம்பரம் ஒரு கலை. நுட்பங்கள் மிகுந்த ஆராய்ச்சிகள் அவசியமானது. தற்காலத் தொழில் அமைப்பில் விளம்பரம் முக்கிய இடம் பெறுகிறது. விளம்பரதாரர்களின் தொழிலே ஒரு தனித் தொழிலாக இப்போது மாறிவிட்டது. அவர்களின் நடவடிக்கைகளையும் நலனையும் கவனித்துக்கொள்ள விளம்பரதாரர்கள் சங்கம் பம்பாயிலிருந்து செயலாற்றி வருகிறது.



இந்தியாவில் விளம்பரத்துக்காகச் செலவு செய்யப்படும் தொகையில் 70 சதவிகிதத்துக்கு மேல் இச்சங்கத்தின் அங்கத்தினர்களால் செலவிடப்படுகிறது. சமீபத்தில் நடந்த வருஷாந்தரக் கூட்டத்தில் இந்தச் சங்கத்தின் தலைவராகத் திரு சினுபாய் கிலாசந்த் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தலைமைப் பதவியைச் சிறப்பாக வகித்து விலகிக் கொள்ளும் திரு தரம்ஸே கடாவ் அவர்களைப்போல், தொழிலனுபவமும் அறிவும் உள்ளவர் திரு சினுபாய். 'பிரீமியர் ஆடோமோபைல்' ஸ்தாபனத்தின் நிர்வாக டைரக்டர். அவருடைய தலைமையில் விளம்பரதாரர்களின் சங்கம் மேன்மேலும் அபிவிருத்தியடைந்து தேசத்துக்குச் சிறந்த பணியாற்றும் என்று எதிர்பார்க்கலாம்.



கம்பம் டாக்டர் ஸ்ரீ வி. ஸ்ரீனிவாச அய்யர் அவர்களின் புதல்வி சௌ. சியாமளாவுக்கும் காரைக்குருச்சி மிராசுதார் ஸ்ரீ கே. ஒய். குளத்து அய்யர் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி கே. வெங்கடாசலத்துக்கும் திருமணம் மதுரை சொக்கி குளத்தில் ஜூன் 27-ந் தேதி வெகு விமரிசையாக நடைபெற்றது. இத் திருமண வைபவத்தில் பத்மபூஷன் அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களின் இன்னிசைக் கச்சேரியும் நடந்தது. வாழ்க, மணமக்கள்!



காட்சி யளித்தது. இருளில் தட்டுத் தடுமாறாமல் நன்கு பழக்கப் பட்டவர் போல் போய்க்கொண்டிருந்தார். அவர் கையில் ஒரு டார்ச் லைட் இருந்தது. ஆனால் அவர் அதை உபயோகிக்கவில்லை. அந்த இடத்தில் நின்றார் சுகுமாரன். அவருக்கு முன்னால் சற்றுத் தூரத்தில் செங்குத்தாக நெடிதுயர்ந்து நின்ற ஒரு பாறையின் மறைவில் இரண்டு நபர்கள் மெல்லிய குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்களில் பட்டுவிடாமல் புலிக் குகையின் மறைவில் சுகுமாரன் நின்று கொண்டார்.

'ஹோ' வென்ற அலைகளின் பேரிரைச்சலுக்கும் மேலே வேறு ஏதோ ஒரு ஒலியைக் கேட்க விரும்புகிறவர் காது கொடுத்துக் கூர்ந்து கவனித்தார். அவர் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. காரிருள் சூழ்ந்த நிர்மானுஷ்யமான அந்த இடத்தில் சற்று நேரத்தில் தூரத்தில் 'சக், சக், சக், சக்' என்ற ஒலி கேட்டது. வர வர அந்த ஒலி பெரிதாகிக் கொண்டே வந்தது. சுகுமாரனுக்கு முன்னால் இருந்த இருவரும் திடுதிப்பென்று விழித்துக் கொண்டவர்கள் போல் ஒருவருக்கொருவர் அந்த ஒலியைப்பற்றிச் சொல்லிக்கொண்டார்கள்.

அப்படிப்பட்ட ஒலியை எழுப்பிக் கரையில் இருந்த அவர்களது கவனத்தைக் கவர்ந்தது, மோட்டார் பொருத்தப்பட்ட ஒரு படகுதான். கரையை அணுகுவதற்குச் சற்று முன்னாலேயே அந்த மோட்டார் நிறுத்தப்பட்டு விட்டது. சத்தம் போடாமல் படகு இப்போது முன்னேறியது. கரகர வென்ற ஒலியுடன் மணல் பரப்பில் நின்றது.

படகிலிருந்து ஆஜானுபாகுவான ஒருவன் இறங்கினான். லாகவமாகப் படகை இழுத்து அருகே மண்டிக் கிடந்த புதர்களுக்கு இடையில் மறைவாக வைத்தான். பின்னர் கடற்கரை மணற்பரப்பில் நடந்து வந்தான். புலிக் குகையை அவன் நெருங்கிய சமயம் 'பளீர்' என்று அடித்த ஒரு ஒளிக்கற்றை அவன் மீது விழுந்து அவன் கண்களைக் கூசச் செய்தது. சடாரென்று அப்பால் நகர்ந்து கொண்டான் அவன். ஆனால் அந்த ஒரு கணத்தில் அவனை நன்றாகப் பார்த்துக் கொண்டார் சுகுமாரன். அவனுடைய அகன்ற மார்போடு ஒட்டினாற் போல் அணிந்திருந்த வரி வரியாகக் கோடு போட்ட பனியனும், சுருள் சுருளாக நெற்றியில் விழுந்து புரண்ட கேசமும் அழகாக வெட்டிவிடப்பட்ட அரும்பு மீசையும் கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த கைக்குட்டையும் அவனுக்குத் தனி சோபையை அளித்தன. அவன்

கதிர்வேலன்தான் என்பதில் குமாரனுக்குச் சந்தேகமேயில்லை.

'கதிர்வேலு' என்று கூப்பிட்டுக் கொண்டே அவனை நெருங்க எண்ணினார் குமாரன். ஆனால் வார்த்தை தொண்டையிலேயே நின்று விட்டது.

கதிர்வேலன் வருவதையே கவனித்துக் கொண்டிருந்து விட்ட அவர் சிறிது நேரத்துக்கு முன்னால் அங்கே நின்று கொண்டிருந்த இருவரும் படகு வரும் ஓசையைக் கேட்டதுமே இரு மரங்களின் பின்னால் ஒளிந்து கொண்டதைக் கவனிக்கவில்லை. அவர்கள் கையில் பிடித்திருந்த டார்ச்லைட்டின் வெளிச்சம்தான் அவன்மீது சற்று முன்னால் விழுந்தது என்று புரிந்துகொண்டார் குமாரன். இப்போது திடீரென்று மறைவிலிருந்து அந்த இருவரும் பாய்ந்து சென்று கதிர்வேலனின் இரு கரங்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விட்டார்கள்.

'அவன் உதவிக்குப் போகலாமா?' என்று யோசிக்க ஆரம்பித்தார் குமாரன். அவர் யோசிக்கக்கூட இடம் வைக்காமல் தன்னைப் பிடித்திருந்தவர்களைப் பலம் கொண்ட மட்டும் ஒரு தள்ளுத் தள்ளினான் கதிர்வேலன்.

கீழே விழுந்தவர்கள் ஆடையிலிருந்து புழுதியைத் தட்டிக் கொண்டே எழுந்தனர். "டேய்! மரியாதையாகக் கொண்டு வந்ததை எடு!" என்றான் ஒருவன்.

"நீ மரியாதையாகக் கேட்டால் நானும் மரியாதையாகக் கொடுக்கிறேன். வீம்பு பண்ணினால் அடி விழும். ஜாக்கிரதை!" என்றான் கதிர்வேலன். பின்னர் சற்றுத் தூரத்திலிருந்த படகிலிருந்து ஒரு பெரிய பொட்டலத்தை எடுத்து வந்தான். அதைப் பெற்றுக் கொள்ள இருவரும் கைகளை நீட்டினார்கள். சட்டென்று அந்தப் பெரிய பொட்டலத்தைப் பின்னுக்கு இழுத்து வலது கையால் அதைப் பிடித்துக் கொண்டு இடது கையை நீட்டினான்.

நீட்டிய அந்தக் கரத்தில் ஒரு நோட்டுக் கட்டை வைத்தான் ஒருவன். இலேசாகத் தூக்கிப்போட்டுப் பிடித்து அதை எடை பார்த்தான் கதிர்வேலன்.

"எவ்வளவு?" என்று கேட்டான்.

"ஐந்நூறு- ஐந்து ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்று" என்று பதில் வந்தது. கால் சட்டைப் பையில் அதைத் திணித்துக் கொண்டே பொட்டலத்தை நீட்டினான் கதிர்வேலன். அதைப் பெற்றுக் கொண்டு மரங்களுக்கிடையே ஒளிந்து மறைந்தார்கள். (தொடரும்)

---

**இந்தக் கதையில் பின்னால் வரப் போகும் ஒரு காட்சியை இவ்வார அட்டைச் சித்திரமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் லதா.**



சென்ற 27-6-58ல் கும்பகோணம் 'ஆர்ய பவன்' உரிமையாளர் ஸ்ரீ எம். ஆர். சேதுராமய்யர் குமாரன் சிரஞ்சீவி **கணேசனுக்கு** உபநயனம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

அதே முகூர்த்தத்தில் மேற்படியார் அபிமான புத்திரி சௌபாக்கியவதி **அலமேலுவுக்கும்** நீடாமங்கலம் ஸ்ரீ கே. வி. ராஜகோபால அய்யர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி **ஆர். வைத்தியநாதன், பி.** எஸ்ஸிக்கும் சிறப்புடன் விவாகம் நடந்தேறியது. அன்று மாலை ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை, மைலாட்டூர் ஸ்ரீ ராமச்சந்திரன் பக்க வாத்தியத்துடன் மாயவரம் ஸ்ரீ ராஜம் அவர்களின் இன்னிசை சிறப்பாக இருந்தது. இரவு ஏ. கே. சி. நடராஜன் அண்டு பார்ட்டி கிளாரிநட்டு வாத்திய இசையுடன் ஊர்வலமும் நடந்தது. உபநயனத்துக்கும், திருமணத்துக்கும் அன்று மாலை நடைபெற்ற வரவேற்பை யொட்டி நிகழ்ந்த இன்னிசை விருந்துகளுக்கும் ஏராளமான உறவினர்களும் நண்பர்களும் பிரமுகர்களும் விஜயம் செய்து மணமக்களையும் வடுவையும் வாழ்த்தி ஆசி கூறினார்கள். வாழ்க கணேசன்! வாழ்க அலமேலு-வைத்தியநாதன்! வாழ்க, பல்லாண்டு!



# செங்கோட்டைச் சிங்கம்

யானை, புலி, கரடி, சிங்கம், குதிரை சவாரி, மல் யுத்தம், வாள் யுத்தம், வேட்டையாடும் கூட்டத்தினர், அவர்கள் தலைவன் மகள் சரஸாவுக்கும், மலைவாசிகள் தலைவன் மகன் சிங்கத்துக்கும் காதல், அதற்கு வேண்டும் அளவுக்குத் தடைகள், கடைசியில் சதிகாரர்கள் ஒழிய, நல்லவர்கள் வாழ்கின்றனர். செங்கோட்டைச் சிங்கத்தின் பூர்வ கதையில் அவனைப் பெற்ற தாயும் தந்தையும் வருகின்றனர். பணக்காரன், ஏழை என்ற பாகுபாட்டினால் செங்கோட்டைச் சிங்கம் சிறு குழந்தையிலேயே தாயுடன் வெளியேற நேர்கிறது. கடைசியில் பெற்ற தாய் தந்தையர்கள் சிங்கத்தின் வளர்ப்புப் பெற்றோர்களுடன் ஒன்று சேர்ந்து விடுகின்றனர்.

எஸ். வி. சஹஸ்ரநாமம் செங்கோட்டை எஸ்டேட்டின் அதிபர் தர்மலிங்கமாக வருகிறார். கூலிக்காரி லட்சுமியாகப் பண்டரிபாய் வருகிறார். தர்மலிங்கமும் லக்ஷ்மியும் நடத்திய இன்ப வாழ்வின் பலனாகப் பிறந்த குழந்தைதான் பிற்காலத்தில் கொம்பன் மேல் சவாரி செய்து, கொல்லும் புலியையும் வெல்லும் சிங்கமாகிறான்.

செங்கோட்டைச் சிங்கமாக உதயகுமார் வருகிறார்; யானையின் மேல் போகிறார்; குதிரையின் மேல் பறக்கிறார்! வேட்டைக்காரர் சுந்தரம் பிள்ளையின் மகள் சரஸாவைக் காதலிக்கிறார்; கல்யாணம் செய்து கொள்ளுகிறார். நடிப்பைப் பற்றி அவரிடம் பேசப்படாது. டி. எஸ். பாலையா சுந்தரம் பிள்ளையாக வருகிறார். அவருக்குத் துணையாக வரும் பி. எஸ். வீரப்பா பின்னால் வில்லனாக மாறி அவரையே துன்புறுத்துகிறார்.

சரஸாவாகத் தோன்றும் பி. சரோஜா தேவி பொங்கும் இளமை எழிலுடன் எங்கும் சுற்றித் திரிகிறார். நல்ல நடிப்பை அவர் பயின்று முன்னுக்கு வர முயல வேண்டும். அகன்ற விழிகளும் அழகிய உடற்கட்டும் உள்ள அவர் வெள்ளித் திரையில் வெற்றி காண்பது சிரமமல்ல.

தேவர் பிலிம்ஸின் தயாரிப்பான "செங்கோட்டைச் சிங்கம்" காடு, மலை, பொங்கி வரும் அருவி முதலிய இயற்கைக் காட்சிகளை ஏராளமாகக் கொண்டிருக்கிறது.

சிங்கத்தின் வளர்ப்புத்தந்தை மலையாண்டி பேசும் போது அதிர்கிறது. ஒலிப்பதிவாளர்களின் கவனக் குறைவை நினைக்கிறேன்.

சஹஸ்ரநாமம், பண்டரிபாய் இருவரும் படத்தின் ஆரம்பத்தில் பிரிந்து கடைசியில் சேர்ந்து விடுகின்றனர்.

இந்தப் படத்தில் காணாத காட்சிகளையெல்லாம் காண முடிகிறது. வேலுவும் மீனுவும் செல்லும் சின்னக் கார், வைக்கோல் ஏற்றிய லாரியின் மேல் மோதி விடுவதையும், பாதாளச் சாக்கடையில் இறங்கி மீண்டும் மேலே வருவதையும் பார்க்கும் போது வேடிக்கையாய்த் தான் இருக்கிறது! அந்த இடத்தில் சிலர் காமேராவும் கூடச் செய்கின்றனர்! என்னத்தைச் செய்ய! வி. ஆர். ராஜகோபாலும் மைனாவதியும் இந்தப் படத்தில் மனம் போனபடி நடித்திருக்கின்றனர்.



பாடல்கள் ஒன்பது பாடப்படுகின்றன. ஆனால் அவை எல்லோராலும் கேட்கப்படுகின்றனவா என்பதை நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை!

தமிழில் டார்ஜான் படம் காண விரும்புகிறவர்களுக்கு ஏமாற்றத்தையும், ஆங்கில டார்ஜான் படத்தைப் பார்த்தவர்களுக்கு வேதனையையும் தரக் கூடிய சக்தி வாய்ந்த படம் செங்கோட்டைச் சிங்கம். இந்தப் படத்தின் மூலக் கதை, திரைக் கதைகளைப் பற்றிய கவலையே யாருக்கும் வேண்டாம். அவற்றில் ஏதாவது இருந்தால்தானே நாம் கவலைப்பட வேண்டும்?

—காந்தன்

# நாட்டு வைத்தியம்




## 67. பூயமேஹம்

**நீ**ர்க்கடுப்பு என்ற கட்டுரையில் இரண்டாவது இனமாகச் சொன்ன பூயமேஹம் என்ற சிம்ப்பிரமேஹத்தைப் பற்றி, இந் நோயின் காரணம், இதன் குறிகள், சாதாரண நீர்க்கருக்கு இதற்குள்ள வித்தியாசம் ஆகியவை பற்றி ஏற்கனவே விளக்கியாயிற்று. இனி சிகிச்சையைக் கவனிப்போம்.

1. வால்மிளகு சூர்ணம், ஏலரிசிச் சூர்ணம், துத்தி விதையின் சூர்ணம் ஆகியவற்றில் வகைக்கு 1-2 சிட்டிகை அளவாக எடுத்துக் கொண்டு அதைச் சிறிது ஜலத்துடனே—ஸப்ஜா விதையின் ஊறல் நீருடனே குடித்தல் நல்லது. இவ்விதமாகத் தினம் ஒன்றுக்கு 4 முதல் 6 வேளை சாப்பிடலாம். சிறு நீரிலுள்ள எரிச்சல், கடுப்பு உடனே நீங்கி விடும்.

2. அத்தி மரத்தின் பாலை வெண்ணெய், சீனி கற்கண்டுடன் சேர்த்துக் குழைத்துக் கொடுக்கச் சிம்ப்பிரமேஹமும், இரத்த மூத்திர கிருச்ரமும் தீரும் என்று அகத்தியனார் குண பாடத்தில் தெரிவிக்கிறார்.

3. ஆலின் வேர்ப்பட்டையைக் கஷாயம் செய்து பாலும் கற்கண்டும் கலந்து கொடுத்தால் சிம்ப்பிரமேஹம் தீர்ந்து விடும்.

4. ஆவாரையின் இலை, பூ, காய், பட்டை, வேர் என்னும் பஞ்ச அங்கத்தின் கஷாயமும் மேற்சொன்ன விதம் பயன் அளிக்கும்.

5. ஆவாரம் பூவை மணப்பாகு செய்து கொடுத்து வந்தால் எரிச்சலுடன்கூடிய சிம்ப்பிரமேஹம் சமிக்கும். சொப்பனத்தில் விளையும் இன்னல்களும் தீர்ந்து விடும்.

6. ஆவாரைப்பிசினியில் 1—2½ வராகன் எடையைத் தண்ணீரில் கலந்து குடிக்க, பூயமேகமும் கொடிய சிறுநீர் எரிச்சலும் தீரும்.

7. இலவம் பிசினைப் பொடி செய்து கால் முதல் அரை வராகன் எடை வரையில் இளநீரில் கலந்து தினம் மூன்று வேளை சாப்பிட்டுவர, நாட்பட்ட பூயமேஹம், சிறுநீர்க் கொதிப்பு ஆகியவை நீங்கிவிடும்.

8. இலவம் வித்து ஒரு பங்கு, சீரகம் அரைப் பங்கு, வால் மிளகு கால் பங்கு இவற்றைச் சேர்த்து அரைத்து 2 முதல் 2½ வராகன் எடை வரையில்கொடுக்கப் பூயமேகம்—நீர் எரிச்சல், நீர்க்கருக்கு—ஆகியவை குணமாகும்.

கலியாண ‘சாம்பல்) பூசனிக் யைக் குடைந்து அதன் உள்ளே கொள்ளும் அளவு செம்பருத்திப் பூவைப் போட்டு ஊற வைத்து அதன் ரஸத்தை எடுத்து அத்துடன் சீனி கற்கண்டின் பொடியும் சேர்த்துச் சாப்பிட்டால் சிறுநீர்வழி ஒழுகும் சீழும், கடுமையான எரிச்சலும் தீரும்.

.0. காசா என்று ஒரு குத்துச் செடி அல்லது சிறு மரம் உண்டு. திருமாலை இதன் பூவின் நிறமுள்ளவனாய்ச் சொல்வர். இதைக் காயாச் செடி, காயாம் பூச் செடி, காசரிச் செடி, காசை என்றெல்லாம் அழைப்பர்.

இதன் இலை ஒரு பங்கு, 20 பங்கு நீர் விட்டு எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி மருந்தைக் கசக்கிப் பிழிந்து வடிகட்டி எடுத்த கஷாயத்தில் ¼ ஆழாக்குவீதம் கொடுத்து வந்தால் சிம்ப்பிரமேஹம் தீரும். மேலும் இது சீதபேதியையும் கண்டிக்கும்.

11. முள்ளிக் கீரை என்று ஒரு பூண்டுச் செடி. இதை முள்ளுக் கீரை என்றும் குப்பைக் கீரை என்றும் சொல்வர். அருகம்புல்லைப் போலவே எங்கும் முளைப்பது.

இதன் வேரில் 2 பலம் எடுத்துக் கஷாயம் செய்து காலை மாலை கொடுத்து வரச் சிம்ப்பிரமேஹம் குணமாகும். நீர் அடைப்பு நீங்கும்.

12. பிரம்மதண்டி என்று ஒரு ...ச் செ.. குட்டைமேடுகளில் முளைக்கும்.

இதன் இலையை இடித்துப் பிழிந்த சாறு, பிரமி அல்லது நீர்ப் பிரமியை இடித்துப் பிழிந்த சாறு...கீழா நெல்லி, சோற்றுக் கற்றாழை ஆகியவற்றின் சாறு—இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி வடித்த ஆமணக்கு எண்ணெயை உள்ளுக்குக் கொடுப்பதால்—மூத்திர மார்க்கத்திலுள்ள அழற்சி போகும்.

13. சரக்கொன்றையின் பூவைத் தனித்தாவது. அதன் கொழுந்துடன் சேர்த்தாவது அரைத்துப் பாலில் கலக்கியுண்டால் சிம்மேஹம் போகும். ரத்தம் ஊறும். காமாலையும் தீரும்.

14. குடுசீஸத்வம் என்னும் சீந்திற் சர்க்கரையை வேளைக்கு 2-3 சிட்டிகை அளவாகத் தினம் இரண்டு முதல் நான்கு வேளை சாப்பிட்டு வர நெடுநாளையச் சீழ்ப் பிரமேஹம் — சிறுநீர் வழியாக ஒழுகும் ரத்தம் ஆகியவை நிற்கும்.

15. சதாவரீ ரஸாயனம் என்று ஒரு மருந்து. மேல் தோலையும் உள் நரம்பையும் நீக்கி எடுக்கப்பட்ட [சதாவரீ] தண்ணீர் விட்டான் கிழங்கை இடித்துப் பிழிந்த சாறு 1 படி [64 அவுன்ஸ்] அதே அளவு கருப்பஞ்சாறு. இரண்டையும் சேர்த்துக் காய்ச்சிக் கம்பிப் பாகு பதத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும். கருப்பஞ்சாறுக்குப் பதில் சிலர் சீனு கற்கண்டைச் சேர்க்கலாம் என்றும் வேறு சிலர் வெல்லத்தைச் சேர்க்கலாம் என்றும் சொல்வர். இவ்விரண்டில் எதுவானாலும் ¾ விசை [90 தோலா எடை] சேர்த்துக் கரைத்து வடிகட்டிய பிறகு, பாகு காய்ச்சிக் கொள்ளவும். இதில், தனித்தனி இடித்துச் சலித்த அதிமதுரம் வெட்டிவேர் [இதைத் தென்னாட்டில் விளாமிச்சன் வேர் என்பர்] சந்தனம் [சந்தனக் கல்லில் அரைத்தெடுத்து வெய்யிலில் உலர்த்தியதான்], இலுப்பைப் பூ, துத்தி விதை, லவங்கப் பட்டை, ஏலரிசி, பச்சிலை — ஜீரகம், தனியா, திப்பிலி, நெல்லிக்காய், ஜாதிக் கோஷ்டம், செம்மரம் இவை வகைக்கு 1½ தோலா. தேவைக்குத் தக்கபடி நெய்யும் சேர்த்து யாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கிளறி வைத்துக் கொள்ளவும். இதில், மற்றையச் சரக்குகளைச் சேர்க்கும்போது 1½ தோலா கோமூத்ரசிலாஜதுவும் சேர்த்துக் கொள்ளவும். இதுதான் கோமூத்ர சிலாஜது கூட்டிய சதாவரீ ரஸாயனம். இதில் காலை மாலை ½ தோலா முதல் 1 தோலா வரை சாப்பிட்டு வந்தால், நீர்க்கடுப்பு-நாள்பட்ட சீழ்ப்பிரமேஹம் ஆகியவை தீரும்.

மூத்திரத்தில் ரத்தம் கலந்து போகும் நிலையிலும், மூத்திரத்துக்கு முன்போ — மூத்திரத்துக்குப் பிறகோ ரத்தம் போகும் நிலையிலும், நீர்க்கடுப்பும் அதிகமிருப்பின் — மூத்திர மார்க்கத்தில் 'கல்' இருப்பதாகச் சந்தேகிக்க இடமுண்டு. எக்ஸ்ரேயினால் இதை நிச்சயிக்கலாம். ஆனால் சிகிச்சை செய்வதற்கு எக்ஸ்ரேயினால் நிச்சயிக்கும் முன் ஒரு வகை என்றும், நிச்சயமானபிறகுவேறுவகை என்றுமில்லை. சந்தேக நிலையில் இம்மருந்துகளைச் சாப்பிடுவதால் வியாதி சமனமாகும். 'அச்மரீ' என்னும் 'கல்' இருப்பினும் சிறுகச் சிறுக அது கரைந்து ஒரு நாள் தானே வெளிப்பட்டும் விடும்.

16. நெருஞ்சில் முள், தண்ணீர் விட்டான் கிழங்கு, ஓரிலை, மூவிலை, காட்டு உளுந்து [நாய் வேளை] காட்டுப் பயறு [நல்ல வேளை] இவற்றைச் சேர்த்துக் கஷாயம் வைத்துப் பாலும் சேர்த்துக் குடித்து வந்தால் மூத்திர மார்க்கத்தில் ரத்தம் வருவதையும் நிறுத்தும்; அச்மரீயையும் சிறுகச் சிறுகக் கரைக்கும்.

17. சிறுபீளையின் வேர்—சிலர் ஸமூலமும் எடுக்க வேணும் என்பர்—சதாவரீ [தண்ணீர் விட்டான் கிழங்கு] ஊருமுள், இவற்றைக் கொண்டு தயாரித்த கஷாயத்தையும் வேளைக்கு 2 அவுன்ஸ் விதம் தினம் 2—3 வேளை சாப்பிட்டு வருவது சிறந்தது.

18. அச்மரீ என்னும் கல்லடைப்பில் சிறுபீளை மிகவும் பயன்படுகிறது. இது அனுபவ சித்தம். இதன் இலைச் சாற்றில் ½ அவுன்ஸ் முதல் 2 அவுன்ஸ் வரையில் குடித்துவரக் கல்லடைப்பு நீங்கும் என்பதோடு மட்டுமல்ல, பெரும்பாடு தீரும்.

19. கஞ்சிகள் வைத்துக் குடிக்குங்கால் சிறுபீளையின் வேரைக் கழுவிச் சுத்தமாக்கி நசுக்கிக் காய்ச்சிய நீரில் கஞ்சி காய்ச்சிக் குடிப்பதும் கல்லடைப்பில் கைகண்ட பலனை அளிப்பதாகும்.

20. சிறுபீளை வேரின் பட்டையும் பனை வெல்லமும் வகைக்கு ஒரு பலமாக எடுத்து மை போல் அரைத்ததில் வேளைக்கு 1 தோலா விதம் தினம் 2 வேளை சாப்பிட்டு, மேலே பசுவின் பாலைக் குடித்து வந்தால் கல்லடைப்பு—மூத்திரத்தில் ரத்தம் ஆகியவை தீரும்.

> "நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்குலை
> போரடசீ ரத்தகணம் போக்குங்காண்—

என்றும்,

> கக்கும் சிறுபீளை காய்நெருஞ்சி மாவிலிங்கை
> விக்கும் பேராமுட்டி வேருடனே—
> போக்கவே
> கூட்டிக் கியாழமிட்டுக் கொள்ளவே
> கல்லடைப்பு
> காட்டிக் கழன்றோடுங் காண்.

என்றும் அகத்தியர் கூறுகிறார்.

சிறு பீளை சமூலம், சிறு நெருஞ்சி, மாவிலிங்கை வேர், பேரா முட்டி வேர் [இதைத் துத்திவேர் என்று சிலரும்—துத்தியின் விதை, அதிலும் சிறந்தது என்று சிலரும் அனுபவத்தால் தெளிந்து தெரிவிக்கின்றனர்] இவற்றை ஓர் எடையாக எடுத்துக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 2 அவுன்ஸ் விதம் சாப்பிட்டு வரவும். நீரடைப்பு, கல்லடைப்பு ஆகியவை தீர்ந்து விடும்.

22. இக்கஷாயத்தை, வெண்காரம், சீனக்காரம், வெடியுப்பு, சிலாசத்து, கலிநார், நண்டுக்கல், விராலமீன் தலைக்கல் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றின் பஸ்மத்துக்குத் துணை மருந்தாய்க் குடித்து வந்தால் விரைவில் வியக்கத்தக்க பலன் கிடைக்குமென்று அனுபவம் மிக்க சித்த வைத்தியர்கள் தெரிவிக்கின்றனர். (தொடரும்)



மழுமழுப்பான
சுகமான
க்ஷவரத்திற்கு...
வாழ்வில் வெற்றி கண்டவர்கள் வேறெந்த தயாரிப்பையும்
நாடாமல்
பாமாலிவ்
ஷேவிங் கிரீமைத்தான் உபயோகிக்கிறார்கள்
PALMOLIVE
BRUSHLESS shaving cream
PALMOLIVE
LATHER shaving cream
துரையுடனோ அல்லது ப்ரஷ் இல்லாமலேயோ க்ஷவரம் செய்ய
பாமாலிவ் என்றாலே உயர்ந்த ரகம்!




ஒன்றல்ல 17
மயக்கும் மணங்கள்
உங்களுக்கு கிறுகிறுப்பும்
புளகாங்கிதமும் தரும்!
PALMOLIVE
Talcum Powder
DE LUXE
வெறியூட்டும் 17 ஸெண்டுகளின்
அற்புதக் கலவை சேர்ந்த பாமாலிவ்
டால்கம் டீ லக்ஸின் நறுமணம்
உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம்
அடையச் செய்யும்...
மணிக்கணக்காக
உங்களுக்கு குளுமையும்
புத்துணர்ச்சியும்
அளிக்கும்!
பாமாலிவ்
டால்கம் டீ லக்ஸ்
உண்மையில் உயர்ந்த டால்க்...
வீட்டிலுள்ள அனைவருடைய சுகத்திற்கும்
சுகாதாரத்திற்கும்... குழந்தைக்குங்கூட!

# நார்ப்பட்டும், கைத்தறி நெசவாளர்களும்

டாக்டர் கே. எஸ். கோபாலசாமி

(பொதுக்காரியதரிசி, தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் காங்கிரஸ்)

ஜூலை ஆறும் தேதி கல்கியில் 'தாமதம் கூடாது' என்ற தலையங்கத்தைப் பார்த்துக் கைத்தறி நெசவாளிகள் அத்தனை பேரும் மகிழ்ந்தனர். நமது கைத்தறி நெசவாளிகளுக்கு ஓர் நிரந்தர வழி உண்டானால் அது இடைக்கால உதவியாகிய ரிபேட் செஸ் நிதியால் தீராது. அதற்கு நிரந்தரப் பரிகாரம் நமது மாபெரும் தலைவர் ராஜாஜி அவர்கள் கூறியது போல் வேஷ்டியையும், புடைவையையும், கைத்தறிக்கு ஒதுக்கி ஆலைப் போட்டிகளிலிருந்து நிரந்தரமாகக் கைத்தறியைக் காப்பதுதான். ஆலைத் துணிகளின் பேரில் விதிக்கப்பட்ட வரியும் தினந்தோறும் குறைந்து கொண்டு வருகிறது. இதனால் கைத்தறிக்குத் தீங்குதான்.

இது தவிர, சென்ற சில மாதங்களாக நார்ப்பட்டு நெய்யும் நெசவாளிகளுக்கு ஒரு கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இறக்குமதிக் கட்டுப்பாட்டினால் அவர்களுக்குப் போதுமான நார்ப்பட்டு கிடைக்கவில்லை. சுமார் பத்து கோடி ரூபாய் பெறுமானமுள்ள நார்ப்பட்டு இறக்குமதி குறைக்கப் பட்டிருக்கிறது. நமது இந்தியாவில் திருவாங்கூர் ரெயான்ஸ், ஸர்ஸில்க், செஞ்சுரி, நேஷனல் ரெயான்ஸ் என்று நார்ப்பட்டு உற்பத்தி செய்யும் நாலு ஆலைகள் இருக்கின்றன. அவைகள் தினசரி சராசரி ஒரு லக்ஷத்து இருபத்தையாயிரம் பவுண்டு நார்ப்பட்டு நூல்கள் உற்பத்தி செய்கின்றன.

இந்தியாவில் 478 நெசவு ஆலைகள் சுமார் 18,488 தறிகளுடன் வேலை செய்கின்றன. இத்துடன் ஓரிரண்டு விசைத் தறிகள் உள்ள தொழிற்சாலைகளும் இருக்கின்றன. இதில் சுமார் 2000 விசைத் தறிகள் வரை வேலை செய்யலாம். நார்ப்பட்டு விசைத் தறிக்கு மட்டுமல்லாமல் நாடா, ரிப்பன், பெட்ரோமாக்ஸ், காஸ்லைட் மாண்டில்களுக்கும், பனியன், மேஜோடுகள் கழுத்துப் பட்டைகள் பின்னுவதற்கும் உபயோகப் படுகின்றன. ஆனால் இவைகளுக்குத் தேவைப்படும் நார்ப்பட்டு வெகு சொற்பமே. நார்ப்பட்டில் நெசவு செய்யும் கைத்தறிகளோ நம்முடைய சென்னை மாகாணத்தில் மட்டும் சுமார் 52,000 இருக்கின்றன.

இவை தவிர கோடம்பாக்கம் சேலை உற்பத்தி செய்வதற்கு ஜவுளிடைக்கு நார்ப்பட்டு தேவையாய் இருக்கிறது. இதில் பல ஆயிரக்கணக்கான தறிகள் இருக்கின்றன. இது தவிர, நூல் புடவைகளுக்குக் கரைக்கும், தலைப்புக்கும், மதுரால் கைக்குட்டைகளுக்குப் பூ வேலை செய்வதற்கும் நார்ப்பட்டு உபயோகப் படுகிறது. இந்தியா முழுவதிலும் சுமார் 80,000 கைத்தறிகள் நார்ப்பட்டை உபயோகப்படுத்துகின்றனர். இறக்குமதிக் கட்டுப்பாட்டினால் தற்போது எப்போதும் இறக்குமதி செய்து கொண்டிருக்கும் நிரந்தர இறக்குமதியாளர்களுக்கு நார்ப்பட்டு இறக்குமதி அனுமதி நிறுத்தப்பட்டிருக்கிறது. ஆனாலும் விசைத் தறிகளும் இதர நார்ப்பட்டு உபயோகிப்பவர்களும் உற்பத்தியாளர் என்ற சலுகையின் பெயரிலேயே நார்ப்பட்டை இறக்குமதி செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள்.

உள் நாட்டு மில்லிலிருந்து 95 சதவீதம் உற்பத்தியாகும் நார்ப்பட்டுகள் விசைத்தறி உபயோகிப்பவர்களுக்கும், அவர்களின் ஏஜண்டுகளுக்கும் வழங்கப்பட்டு விடுகின்றன. மீதமிருப்பவை தான் கைத்தறி நெசவுக்குக் கிடைக்கும்.

தற்போது உள்ள நிலையில் கைத்தறி நெசவாளிகளுக்கு நார்ப்பட்டு கிடைப்பது அரிதாகி விட்டது. உள்நாட்டு மில்கள் தாங்கள் வினியோக முறையில் தங்கள் ஏஜண்டுகளிடம் சில வருஷங்களுக்கு முன்னால், யார் யார் நூல் வாங்கியிருக்கிறார்களோ, அந்த மில்களின் பேரில் நார்ப்பட்டு கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள். நெசவாளிகள் தங்கள் தினசரித் தேவைக்கு எப்போதுமே ஏஜண்டுகளிடமிருந்து நார்ப்பட்டை வாங்குவதில்லை. தங்கள் கிராமங்களில் உள்ள சிறு வியாபாரிகளிடமிருந்தும் மாஸ்டர் வீவர்களிடமிருந்தும், தங்களுக்கு வேண்டிய நார்ப்பட்டை வாங்கி நெய்து வந்தார்கள்.

தற்போது உள்ள நார்ப்பட்டு அதிக விலையின் காரணமாகச் சிறு வியாபாரிகளோ, மாஸ்டர்வீவர்களோ தாங்கள் மில் ஏஜண்டிடமிருந்து வாங்கும் நார்ப்பட்டைத் தாங்கள் வாங்கும் இடத்திலேயே அதிக விலைக்கு விற்று விடுகிறார்கள். நார்ப்பட்டு ஏழைக் கைத்தறி நெசவாளிகளுக்குக் கிடைப்பதில்லை. பல ஊர்களில் நெசவுக்கு வேண்டிய நார்ப்பட்டு கிடைக்காமல் எண்ணற்ற நெசவாளிகள் தாங்கள் தொழில் செய்து ஊதியம் பெற முடியாமல் திண்டாடு

இருர்கள். பல ஊர்களில் சென்ற சில வாரங்களாக நெசவே கிடையாது.

இந்த நிலைமை இன்னும் நீடித்துக் கொண்டே போனால் சென்ற சில ஆண்டுகளுக்கு முன் கைத்தறி நெசவாளிகளுக்கு ஏற்பட்ட கஷ்ட நிலைமை போல் ஊர் ஊராய்க் குடும்பத்துடன் புறப்படும் நிலைமை ஏற்படுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. இந்த நிலைமையைச் சமாளிக்க, அரசாங்கமும், மில்களும், பொதுஜனங்களும், பத்திரிகைகளும், நார்ப்பட்டை நேரிடையாகக் கைத்தறியாளர்களுக்குக் கிடைக்கும் வகையில் உதவி செய்ய வேண்டியது அவசியம். அரசாங்கம் ஆங்காங்கே டிப்போக்கள் ஏற்படுத்தி நேரிடையாக நெசவாளிகளுக்கு நார்ப்பட்டைக் கொள்முதல் செய்து வினியோகம் செய்யலாம். அல்லது நெசவாளர் சங்கங்கள் மூலம் வினியோகம் செய்து, 'அது சரிவர நடக்கிறதா?' என்று அரசாங்கம் மேற்பார்வை பார்க்கலாம். இது மாதிரி ஒரு திட்டம் வகுக்காத வரையில் கைத்தறி நெசவாளிகளுக்கு நார்ப்பட்டு கிடைப்பது துர்லபம்.

தமிழ்நாட்டில் நார்ப்பட்டு நூல் வியாபாரத்தில் ஈடுபட்டோர் யாவரும் ஒரு சிலரைத் தவிர வட நாட்டினரே. அவர்களுக்குத் தங்கள் வருவாயும், லாபமும் குறியே தவிர, ஏழைத் தமிழ் நாட்டுக் கைத்தறி நெசவாளிகளின் கஷ்டங்களைத் தெரிந்தவர்கள் அல்ல.

# படித்துப் பாருங்கள்

## புதுப் புனல்

இந்த நாவல் ஒரு நூற்றாண்டின் வரலாற்றைக் கூறுவது. கதையின் ஆரம்பத்தில் முதியவராகக் காணப்பட்ட பலரும் கடைசியில் இறந்து விடுகின்றனர். இளைஞர்கள் வாலிபப் பருவத்தைக் கடந்து வாழ்க்கைச் சுழலிலே சிக்கித் திணறியவர்களாக நடுத்தர வயதை அடைகின்றனர். கதை ஆரம்பமாகும்போது எலினா பதினொரு வயதுச் சிறுமியாகத் தோன்றுகிறாள். கடைசியிலே யௌவனப் பூரிப்பில் பொலிவுடன் விளங்கும் இருபது வயது நங்கையாக வளர்ந்து விடுகிறாள். பாத்திரங்களின் இளமைப் பருவத்திலிருந்து கதையை முழுவதும் கூறுவதற்காகவேதான் ஆசிரியர் வாசகர்களைப் பின்னோக்கி அழைத்துச் செல்லுகிறார்.

"இளைஞர் உலகமே! நீ வாழ்வாயாக. உலகம் உன்னுடையது. நாங்கள் இருளிலே உறங்கச் சென்றோம். கண் விழித்துப் பார்த்த போதும் காரிருளே எங்களைக் கவிந்து கொண்டிருந்தது. எங்கள் நூற்றாண்டினர்க்கு உறுதியாகப் பற்றிக் கொண்டு முன்னேறுவதற்கான குறிக்கோள் எதுவும் தெளிவாகத் தென்படவில்லை. ஆனால் உங்கள் நூற்றாண்டினர்க்கு அவ்வாறில்லை!" என்று இந்தக் கதையின் பிரதான பாத்திரமான லாவ்ரெநட்ஸ்கி கடைசியில் கூறும் வார்த்தைகள் தீர்க்க தரிசனம் பொருந்தியவை. வறண்டு பாலையாய்க் கிடந்த நிலத்தில் பாய்ந்த "புதுப்புனல்" (ருஷ்யப் புரட்சிக்கான அறிகுறிகள்) ஆசிரியர் துர்கனேவ் கருத்திலும் பாய்ந்து எழுத்திலும் வடிக்கப்பட்டு விட்டது.

இந்நூல் ருஷ்ய மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, அதிலிருந்து தமிழாக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் மிகவும் சுலபமாகப் படிக்க முடிகிறது.

ஆசிரியர்: இவான் துர்கனேவ்; மொழிபெயர்ப்பு ஆசிரியர்: வித்யா; கிடைக்குமிடம்: திரு. செஞ்சுரி புக்ஹவுஸ், 199, மவுண்ட்ரோடு, சென்னை-2 விலை: ரூ. 3.

## ஒரே குடும்பம்

அந்தஸ்திலே உயர்ந்த மீனாட்சிபுரம் பண்ணை ஜானகியம்மாவுக்கு, அந்தஸ்திலே தாழ்ந்த சண்முகம் மாப்பிள்ளையாகிறான். தன் மாப்பிள்ளையை வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாம் என்று எண்ணியிருந்த ஜானகியம்மாளின் ஆசை நிறைவேறவில்லை.

எனவே, கரம் பிடித்த கணவனுடன் வாழ்க்கை நடத்தத் திருநெல்வேலிக்குப் போகிறாள் மங்களம். ராமு அவளது கணவன் சண்முகத்தின் தம்பி. அவனுக்கு அதிக இடம் கொடுத்துக் கேட்பதெல்லாம் வாங்கிக் கொடுக்கிறாள் மங்களம். அவள் கணவனுக்கு அதெல்லாம் பிடிக்கவில்லை.

படிப்பிலே மனம் செல்லாத தம்பி உத்தியோகத்துக்குப் போகிறேன் என்கிறான். உத்தியோகத்துக்குப் போனவன், அது பிடிக்காமல் போகவே, மீண்டும் படிக்கிறேன் என்கிறான்.

தமையனுக்கும் தம்பிக்கும் இவை சம்பந்தமாக நடந்த வாக்குவாதம், தம்பியை வீட்டை விட்டு ஓடச் செய்கிறது. அன்புத் தமையன் அவனைத் தேடி அபத்தில் சிக்கி உயிர் துறக்கிறான்.

மங்களத்தை மையமாகக் கொண்டு, எழுதப்பட்டிருக்கும் இச்சிறு நவீனம், ராமுவின் கல்யாணம், அவனது கோபதாபம், மங்களத்தினால் நிறுவப்பட்ட 'ஏழைகள் இல்லம்' ஆகியவற்றை வர்ணித்தவாறே முன்னேறி, ராமுவும் அவன் மனைவியும் ஒன்று சேர்ந்து, மங்களத்துடன் 'ஒரே குடும்ப'மாக வாழ்வது வரை சித்திரித்து விட்டு, 'மங்கள'கரமாக முடிகிறது.

'சுற்றிச் சுற்றி ஓடும் பந்தயக் குதிரை, புறப்பட்ட புள்ளியிலே வந்து நிற்பதுபோல', - ஸ்ரீமதி கோமதி சுப்பிரமணியம் எழுதியிருக்கும் இந்த நவீனம், நாம் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்ட முறையிலேயே தொடங்கி மங்களகரமாக முடிந்திருக்கிறது.

கிடைக்குமிடம்:—பழனி பிரசுரம், மணிக்கூண்டு, புதுக்கோட்டை: விலை ரூ. 1-75.



# மேனகாவின் பரிசு

ரா.வி

ஏன், சார்! ரிஷிகேசம் போயிருக்கிறீர்களா? அங்கே கங்கை நதி ஓடுகிறதே, தெரியுமா? அதன் கரையிலே தர்மசாலை ஒன்று இருக்கிறதே, அதைப் பார்த்திருக்கிறீர்களா? அதற்கு எதிர்த்தாற்போல் ஒரு கட்டடம் இருக்கிறது. அதை நீங்கள் எங்கே பார்த்திருக்கப் போகிறீர்கள்? அங்குதான் நாங்கள் ஒரு அறை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தங்கியிருந்தோம். நாங்கள்என்றால் யார்என்று தானே கேட்கிறீர்கள்? நான், என்னுடைய மாமா பிள்ளை அதாவது என் அம்மாஞ்சி அனந்தன், அவனது மகன் மணவாளன் ஆகியவர்கள்தான். மணவாளனுக்குப் பத்து வயது இருக்கும். அடாடா! மறந்தே விட்டேனே! கூடமாடச் சொன்ன சொல் கேட்பதற்கு வேலைக்காரன் வேலாயுதத்தையும் அழைத்துப் போயிருந்தோம். ஆக மொத்தம் நாலு பேர்கள். என்ன சொன்னேன்? நாலு பேரா? இல்லை, இல்லை. எட்டுப் பேர்கள். வேலைக்கார வேலாயுதம் கொண்டு வந்திருந்த வெள்ளை எலிகள் நாலையும் கணக்கில் சேர்த்துக் கொள்ள மறந்து விட்டேன். இப்பொழுது கணக்கு சரிதானே?

ஆனால் உண்மையைக் கேட்கப் போனால்,—நான் என்ன பொய்யா சொல்லப் போகிறேன்?—இந்த எலிகளை எடுத்துச் செல்வது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. எனவே, போர்க்கொடி தூக்கினேன். ஆனால் வெற்றி வாகை சூடிக்கொண்டது யார் என்று கேட்கிறீர்களா? குறுக்கே குறுக்கே கேட்டுத் தொந்தரவு செய்யாதீர்கள்! அதுதான் நானாகவே சொல்லிக் கொண்டு வருகிறேனே!

நான் ஆட்சேபிக்கவே மணவாளன் முரண்டு பிடித்தான். "பேஷ், பேஷ்! நன்றாயிருக்கிறதே நீங்கள் சொல்வது? இவற்றை இங்கே விட்டுவிட்டு நான் வந்துவிட்டால், இவற்றுக்கு உணவு யார் போடுவார்கள்? தண்ணீர் யார் வைப்பார்கள்? அதோடு நம் வீட்டில் இருக்கும் ஆறு பூனைகளும் ஆசாமி எப்பொழுது ஏமாறப் போகிறான் என்று பார்த்துக் கொண்டிருக்கின்றன. நம் கண் மறைந்ததும் கபளீகரம் செய்து விடாதா? அவற்றின் கையில் சிக்காமல் இவற்றின் உயிரைக் காப்பது யார்?" என்று கேட்டான். எலிகள் வேலைக்கார வேலாயுதத்தினுடையவைதான் என்றாலும், அவற்றை அன்புடன் பராமரிப்பவன் மணவாளன்தான்.

அவன் தர்க்கத்துக்கெதிரே எனக்குப் பதில் சொல்லத் தோன்றினால்தானே? போர்க்கொடியை இறக்கி என் மனத்துள்ளேயே சமாதான உடன்படிக்கையும் செய்து கொண்டேன். எலிகளுக்கென்று தனியாக டிக்கட் எடுக்க வேண்டிய அவசியம் இல்லையல்லவா? காசு செலவில்லாமல் அவை கங்கா ஸ்நானத்துக்கு வந்தால், நமக்கு என்ன ஆட்சேபனை? அவற்றுக்குக் கிட்டக் கூடிய புண்ணியத்துக்கு எதிராக இருந்து நாம் பாவமூட்டையைக் கட்டிக் கொள்வானேன்? இப்படியாகச் சமாதானம் செய்துகொண்டு, அவற்றையும் ரிஷிகேசத்துக்கு இட்டுச் செல்வதற்குச் சம்மதித்தேன். எனவே, அவற்றுக்கும் ரிஷிகேசப் பிரயாணம் கிட்டி விட்டது.

அவை தங்குவதற்கென்று ரிஷிகேசத்தில் தனி அறை அதிகப்படியாக வாடகைக்கு எடுக்க வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை. அவை இரவு வேளைகளில் வலைப்பெட்டியில் வாசம் செய்தன. பகல் வேளைகளில் மணவாளனின் சட்டைப் பைகளில் வசித்தன. அல்லது அவன் உடலில் ஓடியாடி ஒளிந்து விளையாடி மகிழ்ந்தன.

காலை நேரம் முழுவதும் நாங்கள் அலைந்து திரிந்தோம்; காணாத காட்சிகளெல்லாம் கண்டு மகிழ்ந்தோம். மணி பதினொன்று அடித்தது. இந்தப் பொல்லாத வயிற்றுக்கு எப்படித்தான் தெரிந்ததோ, தெரியவில்லை! பசி வயிற்றைக் கிள்ள ஆரம்பித்து விட்டது. தேநீர் தயாரிப்பதற்கான பாத்திரம் பண்டங்களை மட்டுமே நாங்கள் கூடக்கொண்டு போயிருந்தோம். ஆனால் உணவுக்கான மூட்டை முடிச்சுக்களை நாங்கள் எடுத்துச் செல்லவில்லை. அடிக்கொரு உணவுச்சாலை இருக்கும் இந்த நாளில், உணவு தயாரிக்கும் சன்னை பிடித்த வேலையில், ஜாலியாகப் பொழுது போக்குவதற்கென்று வந்திருக்கும் நாங்கள் மாட்டிக் கொள்ளத் தயாராயில்லை. எனவே, உணவு விடுதியிலிருந்து வேண்டிய ஆகாரங்களைத் தருவித்துக் கொண்டோம். ஒரு கூடை பூரி, கிழங்கு, கறி, கீரை, இன்ன இன்ன, இன்னதென்று சொல்ல முடியாத தூத்பேடா. உணவை வர்ணித்து உங்கள் வாயில் நீர் ஊறச் செய்வானேன்?

நாங்கள் மடியிலே தையல் இலையை எடுத்து வைத்துக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்தோம். வேலாயுதம் பகிர்ந்து பரிமாறும் பணியில் ஈடுபட்டான். இதே சமயம் வாசற் கதவு தாதாங்கியைக் குலுக்கும் சத்தம் கேட்டது. கூடவே, கரகரத்த குரலில், "நாராயண, நாராயண" என்று நாராயணன் நாமத்தை உச்சரிப்பதும் கேட்டது.

நாராயணனுடைய நாமம், நாம் கேட்டுக் கேட்டுப் பழகியதுதானே? கதவைத் திறந்துகொண்டு வாசலில் போய்ப் பார்த்தேன். பிராயம் முதிர்ந்த துறவி ஒருவர் நின்று கொண்டிருந்தார்; ஒருகாலத்தில் அவர்



பொன்னார் மேனியனாக இருந்திருக்க வேண்டும். இப்பொழுதோ சிறிது செம்பொன் நிறம் அவர் மேனியில் ஏறியிருந்தது. ஆள் நல்ல உயரம்; ஆனால் உயரத்துக்கேற்ற பருமன்தான் இல்லை. ஏகமாக உடல் இளைத்திருந்தது. தலைக் கேசங்களும் கொட்டிக் குறைந்து விட்டன. ஆனால் அவை அந்தப் பொய் உடம்பில் நாங்கள் மெய்யாகவே இருக்கிறோம் என்று கட்டியம் கூறிக்கொண்டிருந்தன. மீசையும் கன்னத்தில் வளர்ந்திருக்கும் தாடியும் ஆடு மேய்ந்தாற்போல, கரப்பு கோதினாற் போல, எலி குதறினாற்போலக் குறைந்தும் நீண்டும் காட்சி அளித்தன. ஆனால் தாடைக்குக் கீழ் தொங்கும் தாடி மட்டும் நல்ல அடர்த்தியாகவும், நீளமாகவும் மார்பு முட்டத் தொங்கிக் கொண்டிருந்தது.

''என்ன வேணும், சுவாமிக்கு?'' என்று நான் கேட்டேன்.

துறவி பதில் ஒன்றும் சொல்லவில்லை. நேரே அறைக்குள் வந்து எங்கள் கட்டிலில் உட்கார்ந்து விட்டார். வேலாயுதம் சுயமரியாதைக் கட்சியின் பிரசங்கத்தைக் கேட்டு, அவர்களது சகவாசத்தில் இறங்கிச் சிறிது நாஸ்திகனாக மாறியிருந்தான். முன்பின் தெரியாத துறவிகள்மீது அவனுக்குச் சிரத்தை ஏற்படுவதில்லை. துறவி கட்டிலில் உட்கார்ந்ததைக் கண்டதும் அவனுக்குக் கோபம் கொதித்துக்கொண்டு வந்தது.

''இவன் யாரடா இவன்? கொஞ்சம்கூட மூளையில்லாமல் கட்டிலில் வந்து உட்கார்ந்து விட்டானே? சட், எழுந்திரு ஐயா!'' என்று கடிந்து கொண்டான்.

துறவியார் புருவத்தை நெரித்துக்கொண்டு வாயில் வந்தபடியெல்லாம் வையத்தொடங்கி விட்டார். அவர் வாயில் புகுந்து புறப்பட்ட சொற்களைச் செவிகொண்டு கேட்க முடியாது; வாய்கொண்டு வர்ணிக்க முடியாது. அனந்தனுக்கு அளவற்ற ஆத்திரம் ஏற்பட்டுவிடவே, துறவியாரைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளத் தயாராகிவிட்டான். நான் குறுக்கே விழுந்து மிகுந்த பிரயாசைப்பட்டு அவனைத் தடுத்தேன்; துறவியாரைத் தடுத்தாட் கொண்டேன். ''அட! நீயும் ஒரு மனுஷ்யனா? துறவியார் வந்திருக்கிறார். போகிற இடத்துக்குப் புண்ணியமாகக் கொஞ்சம் பேசலாம் என்றால், இப்படிப் பிடித்துத் தள்ளுகிறாயே! மரியாதை வேண்டாம்?'' என்று அவனைக் கடிந்து கொண்டேன்.

வங்கப் பெரியார் — பிரமோத் சட்டர்ஜி என்பவர் பல முறைகள் பல துறவிகளுடன் நெருங்கித் தொடர்பு கொண்டிருக்கிறார்; துறவிகளோடு துறவியாக இணைந்துவாசம்செய்திருக்கிறார். துறவி, யோகி, சாக்தன், சைவன், வாமாசாரி, மாந்திரிகன், தாந்திரிகன், கடலை யாண்டியின் வழி வந்தோன்—இவ்வாறு பலப்பல வகையாகப் பிரிந்திருக்கும் துறவிகளைப் பற்றிப் பெரும் பெரும் ஆராய்ச்சிகள் நிகழ்த்தியிருக்கிறார்; அவருடைய கட்டுரைகளிலிருந்து தெரிய வருகிறது என்னவென்றால், பசுக்களுக்குக் கொம்பு இருப்பது போல, முள்ளம் பன்றிகளுக்கு முள் இருப்பதுபோல, சிங்கங்களுக்கு முகரும் சக்தி இருப்பதுபோல, துறவறத்தை மேற்கொண்ட சித்த புருஷர்களுக்குத் தற்காப்பு ஆயுதமாகக் காது கொண்டு கேட்க முடியாத வசவுகளும் திட்டுகளும் விளங்கி வருகின்றன என்பதே. அவர்களது கொடுஞ்சொற்களுக்கிடையே உரிமையின்றி வீணில் பிரவேசிக்கும் பக்தர்கள் பயந்து ஓடி விடுகிறார்கள். பிடிவாதமாக முக்தியை விரும்பும் பக்தர்கள் மட்டுமே எஞ்சி நிற்கிறார்கள் என்பதும் அவர் ஆராய்ந்து கண்ட முடிவு.

இதையெல்லாம் படித்து அசை போட்டு வைத்திருந்த நான், துறவியாரின் வாய் வீச்சைப் பார்த்ததுமே புரிந்து கொண்டு விட்டேன். துறவியார் இலேசுப்பட்டவர் அல்ல; அவருள்ளே அறிவொளி குடத்துள் விளக்காகக் குன்றுமேல் பிரகாசிக்கிறது என்று. எனவே, மிகவும் பவ்யமாக, ''சுவாமி! தங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டேன்.

துறவியார் கடுகடுப்புடன், ''எனக்கு என்ன வேண்டும்? உணவு வேண்டும்; வேறு என்ன வேண்டும்?'' என்றார்.

''இந்தப் பூரி, கிழங்கு, பேடா முதலியவை உணவுசாலையிலிருந்து வந்தவை; தங்கள் உபயோகத்துக்கு அருகதை உள்ளவை தானே?'' என்று கேட்டேன்.

''உணவு எங்கிருந்து வந்தால் என்ன? அருந்துவதற்கு அருகதையானதுதான்; ஆனால் இங்கு இருக்கும் உணவு பற்றாதே; நான் ஒருவன், நீங்கள் மூவர், அதோடு இந்த வயிறு வீங்கி வேலைக்காரன் வேறு இருக்கிறான். அதனால் இன்னும் இத்தனை பூரி, கிழங்கை வரவழைத்தால் போதும் போதாதாயிருக்கும்!'' என்றார் துறவி.

வேலாயுதத்தைத் திரும்பவும் உணவுவாங்கி வர அனுப்பினோம். அனந்தனுக்குத் தொழில் என்ன தெரியுமோ? வக்கீல் தொழில். ஆனால் அவனைத் தேடிக் கட்சிக்காரர்கள்தான் யாரும் வருவதில்லை. அதனால் தருணம் வாய்த்தால் போதும், யார் கிடைத்தாலும் வாதம் செய்யும் திறனை வளர்த்துக் கொள்ளப் பாடுபடு

றேன்: பணம் பண்ணப் போய்ப் பேச்சிலேயே தனது ஆசையைத் தீர்த்துக் கொள்கிறான்.

எனவே, துறவியைப் பார்த்து, "தாங்கள் யார்?" என்று கேட்டான்.

"நான் யாராயிருந்தால் என்ன? எனக்குப் பெண் கொடுக்கப் போகிறாயா, என்ன?" என்று கேட்டார் துறவி.

"பேஷாகத் தருகிறேன், பிறந்தால்! தங்கள் தாய்மொழி என்னவோ?" என்றான்.

"என் தாய்மொழி வடமொழி. ஆனால் உனக்குப் புரியாதே. அதனால்தான் நான் தென் மொழியில் பேசுகிறேன்!"

"பேஷ்! இந்த மொழித் தகராறு சமயத்தில் வடமொழி பேசும் தாங்கள், தென் மொழி கற்றுப் பிறருக்கு வழிகாட்டியாக அமைந்தது குறித்து சந்தோஷம். அது போலவே, எனக்குப் பிறக்கப் போகும் பெண்ணுக்கு வடமொழி பயிற்றி வைக்கிறேன். ஏனெனில் உங்களோடு குடித்தனம் நடத்திக் குப்பை கொட்ட வேண்டும் அல்லவா?— ஆமாம், நீங்கள் எந்தச் சம்பிரதாயத்தைச் சேர்ந்த துறவி?" என்று கேட்டான் அனந்தன்.



"நான் எந்தச் சம்பிரதாயத்தையும் சேர்ந்தவன் அல்ல. என் ஆசிரமம் பிரும்ம லோகத்தில் இருக்கிறது. நான் ஒரு பிரும்ம ரிஷி!"

"அப்படியா? மெத்த சந்தோஷம். நான் தங்கள் பெயரை அறியலாமோ?"

"தாராளமாக. மேள தாளத்துடன் வேண்டுமானாலும் தெரிந்துகொள். நான் தான் மகா முனிவரான துர்வாஸர்!" என்றார் பிராயம் முதிர்ந்த அந்தத் துறவி.

சிறிது நேரம் என்ன செய்வது, என்ன பேசுவது என்றே தெரியாமல், அவரையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு, "தங்கள் தரிசனம் கிட்டியது எங்கள் பாக்கியம்தான். தங்கள் முகத் தோற்றத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த விஷயம் முற்றிலும் உண்மையாகவே தோன்றுகிறது. ஆனால் மக்கள் தங்களைப் பெரும் கோபக்காரர் என்று கூறுகிறார்களே, அது உண்மையாக இருக்கும் என்று தோன்றவில்லையே! தாங்கள் தான் எங்களிடம் மிகுந்த மகிழ்ச்சியோடு பேசிக் கொண்டிருக்கிறீர்களே!" என்றேன்.

"நான் எதற்காகக் கோபக்காரனாகப் போகிறேன்? ஆனால், ஆமாம், ஒரு காலத்தில் நான் கொஞ்சம் சிடுசிடு வென்று தான் இருந்தேன். அந்தப் பொல்லாத பெண்மணி என் தேஜஸ் முழுவதையும் அழித்து ஒழித்து விட்டாள்!" என்றார் துர்வாசர்.

நான் கைகூப்பி வினயத்துடன், "தவச் சிரேஷ்டரே! அப்படியொன்றும் அது மூடி மறைக்க வேண்டிய விஷயம் இல்லையென்றால், தயவு செய்து கூறி, ஆவலுடன் கேட்கத் துடிக்கும் அடியேனது ஆசையைத் தீருங்கள். தாங்களோ திரேதா, துவாபரயுகத்து மனிதர். இந்தப் பயங்கரக் கலியுகத்தில் பாவிகளான எங்கள் மத்தியில் எதற்காக வந்தீர்கள்? தாங்கள் அறியலாமோ?" என்று கேட்டேன்.

"என் தந்தை அத்ரி மகரிஷி என் கனவில் தோன்றி, 'குழந்தாய்! நீ ரிஷிகேச க்ஷேத்திரத்துக்குப் போ. அங்கே கங்கைக் கரையிலே உள்ள தர்மசாலைக்குப் போவாயானால், உனது சங்கடங்கள் எல்லாம் தீரும்; வினைகள் எல்லாம் அறும்!' என்று சொன்னார். அதனால்தான்..."

"தங்களுக்குச் சங்கடமா? என்ன வேடிக்கை, மகரிஷே? தாங்கள் அல்லவா மக்களைச் சங்கடத்தில் ஆழ்த்துகிறீர்கள்! அது போக..."

"எல்லாவற்றையும் விவரமாகச் சொல்கிறேன். முதலில் உணவு அருந்தி முடிப்போம். நீங்களும் சாப்பிடுங்கள்!" என்றார் துர்வாசர்.

உணவு அருந்தி முடிந்ததும், மகரிஷி துர்வாஸர் தமது கதையைச் சொல்லலானார்:

"சகுந்தலையின் பெயரைக் கேள்விப்பட்டிருப்பீர்களே! காளிதாசர் அவளது பெயரில் ஒரு நாடகமே இயற்றியிருக்கிறார். ஒருமுறை அந்தப் பெண் என் கூப்பாட்டுக்குப் பதிலே அளிக்காமல் இருந்து விட்டாள். அதனால் நான் திடீரென்று கோபமுற்று அவளுக்குச் சாபம் கொடுத்து விட்டேன். அந்தச் சாபம் தான் உங்களுக்குத் தெரியுமே! 'நீ யாரைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறாயோ, அவன் உன்னைப் பார்த்ததும் புரிந்து கொள்ள மாட்டான், மறந்து விடுவான்!' என்றேன். அப்பொழுது சகுந்தலை தன்னை மறந்த நிலையில் இருந்தாள். என் சாபம் அவள் காதுகளிலேயே ஏறவில்லை. ஆனால் என் சொற்களை அவளது தோழி ஒருத்தி கேட்டு விட்டாள். அவள் ஓடோடி வந்து என் கால்களில் விழுந்து, கெஞ்சி வேண்டினாள். அவள் பெயர் அநுசூயை. என் தாயாரின் பெயரும் அநுசூயை. அதனால் மகிழ்ந்து நான் சாபத்தின் கடுமையைச் சிறிது இலேசாக்கி விட்டேன். ஆனால் அந்தப் பெண்ணும் மிகப் பொல்லாதவள் என்பது எனக்கு அப்பொழுது தெரியாது. அவள் சகுந்தலையின் அன்னை மேனகாவிடம் சென்று சரியாக எனக்கு வத்தி வைத்து விட்டாள்; அவள் காதைக் கடித்துக் கோள் சொல்லி விட்டாள்.

இந்தச் சம்பவம் நடந்து ஏறக்குறைய பத்து மாதங்கள் ஓடி விட்டன. ஒரு நாள் பாகீரதி நதியின் கரையிலே உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு சிஷ்யன் என்னிடம் வந்து, இணையற்ற அழகி ஒருத்தி என்னைக் காணக் காத்திருப்பதாகச் சொன்னான்.

'சரி, வரச் சொல்!' என்று நான் அனுமதி அளித்து விட்டேன்.

அருகில் வந்தவளைப் பார்த்ததுமே, புரிந்து கொண்டு விட்டேன், அப்ஸர ஸ்திரீயான மேனகாதான் என்று. அச்சம், நாணம்,

மடம், பயிர்ப்பு எதுவும் மருந்துக்குக் கூட அவனிடம் காணக் கிடைக்கவில்லை. சரிந்து கலைந்த சேலையைப் பார்த்த பொழுது, இப்பொழுதுதான் தூங்கி விழித்துப் பல் துலக்கப் போய்க் கொண்டிருக்கிறளோ என்று எண்ணும்படியாக இருந்தது. இந்த வேஷத்தில் சென்ருல், பிறர் மனத்தைக் கொள்ளை கொள்ள முடியும் என்று எண்ணினுளோ, என்னவோ! நான் கோபத்தில் கொதித்தெழுந்து கூச்சலிட்டேன். 'எதற்காக இங்கே வந்தாய்? என்னையும் விசுவாமித்திரனைப் போல் நெஞ்சுறுதி அற்றவன் என்று எண்ணதே. உன் சிரிப்பு - நெளிப்பு, பசப்பு-பேச்சு நடை-உடையைக் கண்டு மயங்கி மதி இறங்கிப் போக. உன் ஜபம் என்னிடம் சாயாது!' என்றேன் ஜபம் செய்து கொண்டே.

மேனகை கேலி கலந்த குரலில், 'ஐயா! உன்னிடம் அன்பு செய்ய ஒருத்தி வருவாள் என்று நினைக்காதே. அப்படி ஒருத்தி வந்தால் அவள் ஒரு விளக்குமாற்றுக் கட்டையாகத்தான் இருப்பாள்! உன்னிடம் மனத்தைப் பறி கொடுக்க இந்த உலகத்திலே ஒருத்தி கூடக் கிடையாது; இருக்கவும் முடியாது: போயும் போயும் உன் முகரக்கட்டைக்கு மயங்கியா நான் உன்னைக் காதலிப்பேன்! உன் நல்லதுக்காகத்தான் நான் உன்னிடம் வந்திருக்கிறேன். நீ உன் நன்மையை விரும்பவில்லையென்ருல், இதோ நான் போகிறேன்: அப்புறம் ஏதாவது கஷ்டத்தில் விபத்தில் சிக்கிய பின் என்னை வையாதே. இப்பொழுதே சொல்லி விட்டேன்!' என்ருள்.

மேனகை எழும்பி நின்ற ஒரு குதிகாலின் பலத்தில், தன் உடல் சுமையனைத்தையும் நிறுத்தி, 'விர்' என்று ஒரு சக்கரம் அடித்தாள். உடனே ஒரு கணமும் நில்லாமல் புறப்பட்டும் விட்டாள்.

இந்தக் கேடுகெட்ட பெண்ணுக்குத் தலைகனம் அதிகமாகி விட்டது: இல்லா விட்டாள் என்னை 'நீ' என்று சொல்லி அழைப்பாளா? எனவே, அந்தக் கணமே ஆத்திரத்துடன், 'இந்தக் கணமே நீ மண் புழுவாகப் போகக் கடவாய்' என்று சாபம் கொடுக்க வாயைக் கூடத் திறந்து விட்டேன்: ஆனால் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. முதலில் முழு வரலாற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும்: அப்புறமே சாபம் கொடுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். எனவே, அவளைப் பார்த்து, 'எதற்காக நீ இங்கே வந்தாய், முதலில் அதைச் சொல்?' என்றேன்.

'பரமசிவன் உன் பேரில் ஏகக் கோபமாயிருக்கிறர். ஒரு குற்றமும் செய்யாமல் இருக்கும்பொழுதே நீ சகுந்தலைக்குச் சாபம் கொடுத்தாய் அல்லவா? அதை எண்ணி அவர் நெற்றிக்கண்ணைத் திறக்க இருந்தார். நான் சற்றுத் தாமதித்திருந்தால் கூட நீ அவர் கோபாக்கினிக்கு ஆளாகிச் சாம்பராகி இருப்பாய்: ஆனால் நல்ல வேளையாக நான் சரியான சமயத்தில் அவரிடம் போய் விட்டேன்: காலில் விழுந்து உனக்காக மன்னிப்பு கோரலானேன்!' என்ருள் மேனகை.

எனக்குத் தேவர்களிடமோ, மனிதர்களிடமோ யாரிடமுமே பயம் கிடையாது: யாரிடமாவது ஒருவரிடம் பயம் உண்டென்ருல், அது பரமசிவன் ஒருவரிடம் மட்டுமே தான். மேனகை அப்படிச் சொன்னதுமே நான் பயந்து போய் விட்டேன். 'நீ பரமசிவனிடம் என்ன சொல்லி மன்னிப்புக் கேட்டாய்?' என்று அவளிடம் கேட்டேன்.

'என்ன சொல்லிக் கேட்டேனு? துர்வாசன் ஒரு அசட்டுப் பிராம்மணன். அதோடு அவனுக்கு மூளையும் பிறழ்ந்து விட்டது. முன்பின் யோசியாமல் பைத்தியக்காரனைப் போல் சாபம் கொடுத்து விடுகிறன். அதனால், இந்தத் தடவை துர்வாச முனிவனைத் தாங்கள் மன்னித்து விடுங்கள், எனக்காகவாவது' என்றேன். இயல்பாகவே பரமசிவன் என்னிடம் அன்பு கொண்டவர். ஏனென்ருல் அவர் மாமியார் மேனவின் பெயரும் என் பெயரும் கிட்டத்தட்ட ஒன்று போலவே தோன்றுகிறதல்லவா? அந்த நினைப்பில், மாமியாருக்கு அடங்கிய மாப்பிள்ளையென என் பேச்சுக்குப் பணிந்தார். ஆயினும், 'நீ செய்த தவறுக்குப் பிராயச் சித்தம்...'

'பிராயச்சித்தமா?'

'பயந்து சாகாதே. இலேசான பிராயச் சித்தம்தான். சகுந்தலை இப்பொழுது



ஹேமகூட பர்வதத்தில் பிரஜாபதி கச்யபர் ஆசிரமத்தில் இருக்கிறள். அவளுக்கு ஒரு பிள்ளை பிறந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். கச்யப முனி, இந்தப் பையன் பரதன் என்ற பெயருடன் அகிலப்புகழ் பெறுவான், புவி முழுவதையும் ஆள்வான் என்று ஆசீர்வதித்திருக்கிறர். ஒரு தடவையாவது போய்ப் பேரன் பரதனைப் பார்த்து வரவேண்டுமென்று ஆசைப் பட்டேன். ஆனால் இதுவரை போக முடியவில்லை; இனியும் போக முடியாது போலிருக்கிறது. இந்திரன் எல்லா அப்ஸர ஸ்திரீகளையும் உடனே வருமாறு ஆணையிட்டிருக்கிறன்: அவர் மகன் ஜயந்தன் ஒரே முட்டாகப் பிடிவாதம் பிடிக்கிறனும். ஏன் பிடிக்கமாட்டான்? அப்பனுக்குப் பிள்ளைதானே? அப்பாவின் வரிசை அப்படியே ஒவ்வொரு குணத்திலும் ஏற்றுக் கொண்டு விட்டான். அதனால், அவனுக்கு விரைவிலேயே விவாகம் செய்யப் போகிறர்களாம். இரண்டு மாதங்களுக்கு, எட்டு யாமங்களும் இடைவிடாமல் நடனம், கீதம், விருந்து-மருந்து என்று நடக்கப் போகிறதாம்; அதனால் இன்றைக்கே

தேவலோகத்துக்குத் திரும்பியாக வேண்டும். தேவதைகளின் அறுபது நாட்கள் மானிடர்களின் அறுபது ஆண்டுகளுக்குச் சமம் என்பது உனக்குத் தெரியாததல்ல. நான் என் பேரனைப் பார்க்க இரண்டு மாதங்கள் கழித்துத் திரும்பி வருவதென்றால், அதற்குள் என் சகுந்தலையின் மகன் மூப்பு அடைந்துதொண்டு கிழவனாகியிருப்பான். அதனால்தான் உன்னை அனுப்ப விரும்புகிறேன்!' என்றாள்.

நான் மனத்துள் எண்ணிப் பார்த்தேன். இது ஒன்றும் அப்படிச் சிரமமான காரியம் இல்லை என்றே தோன்றியது. நான் சகுந்தலையிடம் போய், அவளது மகனுக்கு வாழ்த்துரை வழங்கி வந்தால் நல்லதுதானே? கொடுத்த சாபத்துக்கு மாற்றுச் செய்ததாக ஆகாதா? எனவே, மேனகையைப் பார்த்து, 'எனக்குப் போகச் சம்மதம். ஆனால் அங்கே போய் நான் எத்தகைய பிராயச்சித்தம் செய்ய வேண்டும்? அதைச் சொல்லு!' என்று கேட்டேன்.

'ஒரே ஒரு காரியப் பொறுப்பை ஏற்று நீ சென்று வந்தால் போதுமானது. நான் ஒரு சின்னக் கிலுகிலுப்பை தருகிறேன். அதைப் பரதனின் குஞ்சுக் கரங்களில் கொடுக்க வேண்டும். கொடுத்து என் அன்பை, அதாவது அவனுடைய பாட்டியின் அன்பைத் தெரிவிக்க வேண்டும்' என்றவள் ஒரு சிறு கிலுகிலுப்பையை என்னிடம் நீட்டி, 'இந்தா, கிலுகிலுப்பை! அஜாக்கிரதையாக எங்கேயாவது தொலைத்து விடாதே. ஜாக்கிரதை! தொலைத்து விட்டால், நினைவு வைத்துக்கொள், அப்புறம் ரொம்ப ரொம்பக் கஷ்டத்துக்குள்ளாக நேரிடும்!' என்றாள்.

கிலு கிலுப்பையை வாங்கிக் கொண்ட நான், 'நான் என்ன பச்சைக் குழந்தையா, தொலைத்து விட்டுத் தொல்லைப்படுவதற்கு? கவலைப்படாதே, மேனகா! கிலுகிலுப்பையைச் சொன்னபடி சேர்த்து விடுகிறேன். உனக்கு ஏதாவது வரம் வேண்டுமானாலும் கேள், தருகிறேன்!' என்றேன்.

'எனக்கு வரமும் வேண்டாம், சிரமும் வேண்டாம்.'

'என்ன! வரம் வேண்டாமா? ஏன் வேண்டாம்? சொல்லு. பிள்ளை வேண்டுமா? ஒன்றல்ல, நூறு பிறக்க வேண்டுமென்று விரும்பினாலும் ஆசீர்வதித்து வரம் அளிக்கிறேன். எல்லாப் பிள்ளைகளும் என்னைப் போல் பிரசித்தமாயிருப்பார்கள்!' என்றேன்.

மூக்கைச் சிணுங்கிக்கொண்டாள் மேனகை. 'நீ என்ன, உன்னை முருகன் அல்லது மன்மதன் என்று எண்ணிக் கொண்டாயா? நீ இருக்கும் அழகுக்கு உன்னைப்போல் குழந்தைகள் பிறந்து விட்டால், அப்புறம் கேட்க வேண்டாம் கஷ்டத்துக்கு!' என்றவள் புறப்பட்டாள்.''

அதற்குள் அனந்தனுக்கு ஒரு ஆசை. ''ஏன் துர்வாச முனிவரே! மேனகைக்கு வயது என்ன இருக்கும்?'' என்று கேட்டு வைத்தான்.

''அட! நீ முழு முட்டாளாயிருப்பாய் போலிருக்கிறதே! அப்ஸரஸ்திரீகளுக்கு ஒரு வயது உண்டா? நிலவு, மின்னல், வானவில் இவற்றுக்கு வயதுக் கணக்கு உண்டா? அசட்டுக் கேள்விகள் எல்லாம் கேட்கிறாயே!— ஆமாம், நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்? கேள், மேனகை போய் விட்டாள் என்றுதானே? அவள் போன மூன்று நாட்களுக்கெல்லாம் நானும் புறப்பட்டேன்.

குறித்த காலத்தில் நான் ஹேமகூட பர்வதத்தை அடைந்தேன். மரீசியின் மகனான பகவான் கச்யபரையும் அவர் மனைவி அதிதி தேவியையும் வணங்கி வழிபட்டு, சகுந்தலையைப் பார்க்கச் சென்றேன். நான் சாபம் கொடுத்தது அவளுக்குத் தெரியாதோ என்னவோ? என்னைப் பார்த்ததும் மிக்க மகிழ்ச்சி கொண்டாள், வரவேற்று உபசரித்தாள். மேனகையின் கட்டளைப்படி குழந்தைக்கு அன்பையும் ஆசியையும் தெரிவித்தேன். 'சகுந்தலா! உனது குஞ்சு மகன் ஸ்ரீமான் சர்வதமனன் பரதன் என்று புகழ் பெற்று, ஏழு கடல்களையும் மலையரசன் ஹிமவானையும் வெற்றி கொண்டு சக்கரவர்த்தியாக ஆட்சி புரிவான். இவனது குடிமக்கள் வசிக்கும் பூமி 'பாரதம்' எனப் போற்றப்படும். நீயும் சீக்கிரமே உன் கணவனை அடைவாய்!' என்று கூறினேன். அப்புறம் எனது இடுப்பைத் தடவினேன், கிலு கிலுப்பையை எடுப்பதற்காக. ஆனால் கிடைத்தது கிலுகிலுப்பை யல்ல; பெரும் பூகம்ப அதிர்ச்சி!'' என்றார் துர்வாசர்.

''என்ன, கிலுகிலுப்பை கிடைக்க வில்லையா?'' என்று வியப்புடன் கேட்டேன் நான்.

''ஆமாம்! கிடைக்கவில்லை. நான் எனது துணிமணிகள், கம்பளி, காவிப் பை, ஜடை, கமண்டலம் எல்லாவற்றையும் தேடிப் பார்த்தேன். கிலுகிலுப்பையைக் காணவில்லை. சகுந்தலைக்கு அழுகையே வந்து விட்டது; பாவம்! அவளது அன்புக்கு அன்பான அன்னை ஆசையுடன் அனுப்பிய பரிசுப் பொருள் அல்லவா? அது தொலைந்து விடவே, அவளுக்கு உண்டான அதிர்ச்சியையும் ஆயாசத்தையும் என்னவென்று சொல்வது?

'வருத்தப்படாதே, சகுந்தலா! நான் அதைக்காட்டிலும் நல்ல கிலுகிலுப்பையாக வேறு ஒன்று வாங்கி வந்து தருகிறேன்!' என்று ஆறுதல் சொன்னேன்.

இரண்டு கிழட்டுத் தபஸ்வினிகள் சகுந்தலையின் அருகில் நின்றிருந்தார்கள். அவர்களில் ஒருத்தி, 'பைத்தியம்போல், வாயில் வந்ததை உளறுகிறீர், முனிவரே! குழந்தைக்குப் பாட்டி கொடுத்த பொருளும் நீர் கொடுக்கும் பொருளும் சமானமாக முடியுமா? என்ன தான் வைரக்கல் இழைத்த கிலு கிலுப்பையை நீர் கொண்டுவந்து கொடுத்தாலும், பாட்டி கொடுத்தது பாட்டி கொடுத்ததுதான்; நீர் கொடுத்தது நீர் கொடுத்ததுதான்! நீர்தான் மறதிப் பேர்வழியாயிற்றே! குளிக்கும் பொழுது அது உமது இடுப்பிலிருந்து எங்கேயாவது நழுவி நீரில் விழுந்திருக்கும். மீன்கள் அதைக் கொத்தித் தின்றிருக்கும். போய்த் தேடிப் பாருங்கள், வாளை, வரால், கெண்டை, கணுத்தி என்று பிடித்து வயிற்றைக் கிழித்துப் பாருங்கள், கிலுகிலுப்பை கிடைக்கிறதாவென்று!' என்றாள் கேலியாக.''

அனந்தன் குறும்பாக, ''ஏன் ஆமையின் வயிற்றுக்குள்ளும் போயிருக்கலாம் அல்லவா?'' என்று கேட்டான்.

''கரு மீன், முதலை, திமிங்கிலம் முதலியவற்றின் வயிற்றுக்குள்ளும்கூட அது வாசம் செய்யலாம்!'' என்றேன் நான்.


குறைந்த செலவு...
அதிக வருமானம்!
85% வரை (சராசரி 52%) குறைந்த ஸிலிண்டர் தேய்மானம்... நாளடைவில் 30% லிருந்து 50% வரை குறைந்த ஆயில் செலவு...
பராமரிப்புச் செலவு 60% வரை குறைகிறது.
ஹை-ஸ்பீட் டீஸல் எஞ்சின்களை லூப்ரிகேட் செய்ய கால்டெக்ஸ் ஆர்.பி.எம். டெலோஸ் உபயோகித்து, இணையற்ற சேவையைப் பெறுங்கள். உங்கள் டீஸல், ஒரு ஓவர்ஹாலுக்கும் மற்றொன்றுக்குமிடையே நீடித்த காலம் இயங்குவதால், சேமிப்புகள் ஏற்பட்டு, வருமானம் அதிகரிக்கிறது. ஆர்.பி.எம். டெலோஸ், டீஸல் எஞ்சின்களை அதிக சுத்தமாக வைப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது. இதனால்தான் உங்கள் எஞ்சின் நீடித்து உழைப்பதுடன், சிறந்த சேவையும் அளிக்கிறது.
உங்கள் நண்பரான கால்டெக்ஸ் டீலரை சந்தியுங்கள். அவர் உங்கள் விலையுயர்ந்த டீஸலுக்கு சிறந்த பாதுகாப்பு அளிப்பதோடு ஆர்.பி.எம். டெலோ டீஸல் எஞ்சின் லூப்ரிகேடிங் ஆயில் மற்றும் ஹை-ஸ்பீடால் டீஸல் ப்யூவல் வழங்கிய பின்னர்
CALTEX
RPM DELO
AND
HI-SPEEDOL
DIESEL FUEL

துர்வாச முனிவர் எங்களைச் சுடும் விழிகளால் ஒரு முறை பார்த்து விட்டுக் கூறினார் : ''நான் அங்கே அதிகநேரம் தங்கவில்லை. எந்த வழியே வந்தேனோ, அதே வழியில் — போக முடிந்த, போகமுடியாத—எல்லா இடங்களுக்கும் சென்றேன். கிடைக்கக்கூடிய—கிடைக்கக் கூடாத இடங்களில் எல்லாம் தேடினேன். எல்லாம் வீண். கிலுகிலுப்பை மட்டும் கிடைக்கவே இல்லை. எங்கெல்லாம் இறங்கிக் குளித்தேனோ, அங்கெல்லாம்கூட இறங்கிக் கைகளால் அரித்துப் பார்த்தேன். ஆனால் கிலுகிலுப்பை எங்குமே கிடைக்கவில்லை. சகுந்தலையின் மோதிரத்தைப் போலவே, கிலு கிலுப்பையையும் மீனே தின்றிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

எனவே, செம்படவர்களையெல்லாம்அணுகி, 'உங்களில் யாராவது மீன் வயிற்றிலிருந்து கிலுகிலுப்பை எடுத்திருக்கிறீர்களா? எடுத்திருந்தால் என்னிடம் கொடுத்து விடுங்கள். துஷ்யந்த மன்னனைப் போலப் பரிசில்கள் வழங்க முடியாவிட்டாலும், நான் ஆசீர்வாதம் செய்கிறேன்; வாழ்த்துரைகள் வழங்குகிறேன்' என்றேன்.

'ஏன் கிழவனாரே! உங்களுக்கு மூளை கீளை பிறழ்ந்து விட்டதா, என்ன? எங்கேயாவது மீன் வயிற்றில் கிலுகிலுப்பை கிடைக்குமா?' என்று கேட்டார்கள். பல்லைக் காட்டி, கையைக் கொட்டிக் கலகலவென்று சிரிக்கவும் செய்தார்கள். ஆபத்துக் காலத்தில் இப்படி என்னிடம் குரூரமான கேலி செய்து விளையாடும் அந்தத் துஷ்டர்கள்மேல் எனக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. 'எல்லோரும் இப்பொழுதே அரம் போன்ற பல் உடைய முதலைகளாக மாறக்கடவீர்!' என்று சாபம் கொடுத்தேன்.

ஆனால், என் சாபம் பலித்தால்தானே? அவர்களது ஏளனச் சிரிப்புத்தான் இன்னும் அதிகமாகி விட்டது.

அப்பப்பா! மேனகையின் ஆணையை நிறைவேற்றும் விஷயத்தில் எத்தனை எத்தனை இடையூறுகள் ஏற்பட்டன என்று சொல்லி மாளாது. கிலுகிலுப்பை அற்பமான பொருள்தான். ஆனால் கொடுத்த வாக்கு பெரும் பொருள் அல்லவா? இதற்குள் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஓடி விட்டன. கணக்கற்ற முறை, கணக்கற்ற இடங்களைத் தேடினேன். ஆனால் கிலுகிலுப்பைதான் கிடைக்கவில்லை. இப்பொழுதெல்லாம் எனக்குப் பழைய நிம்மதி கிடையாது. பழைய பிரும்ம தேஜஸும் கிடையாது. இப்பொழுது நான் இடும் சாபங்களுக்கெல்லாம் பலனே ஏற்படுவதில்லை. நான் நச்சுப் பல் பிடுங்கப்பட்ட நாகத்தைப் போலாகி விட்டேன். சீடர்களும் என்னை ஒதுக்கி விட்டார்கள்!'' என்றார் தமது ஆற்றாமை முழுவதும் வெளித் தெரிய.

''முனி சிரேஷ்டரே! அமைதியை மேற்கொள்ளுங்கள். வீணில் எதற்காக வருந்துகிறீர்கள்? பரத சக்கரவர்த்தி எப்பொழுதோ சொர்க்கம் புகுந்துவிட்டார். இனி அவருக்குக் கிலு கிலுப்பை எதற்காகத் தேவை? நீங்கள் இனி கவலையை உதறிவிட்டுத் தவம் செய்யுங்கள். யோக சாதனையில் ஈடுபடுங்கள்; ஹரி நாமத்தைச் சொல்லுங்கள். இல்லாவிட்டால், உலகக் கல்வியை உத்தேசித்து வாழ்க்கை வரலாறுகள் எழுதுங்கள். ஜடையைப் பற்றி எழுதலாம், தாடி மீசை வளர்க்கும் கலையைப் பற்றி எழுதலாம். உக்கிர தவம் புரியும் துறவிகளைப் பற்றி எழுதலாம். கானக வாசிகளான ரிஷி முனிகளின் வாழ்க்கையை வர்ணிக்கலாம். இந்தக் காலத்திய சினிமா நட்சத்திரங்களைக் கணக்கிட்டாலும், கணக்கிடலாம்; அந்தக் காலத்திய ரிஷி முனிகளைக் கணக்கிட்டு முடியாது. எனவே, உங்கள் ஆயுளுக்கு விஷயப் பஞ்சம் இராது. அலுப்புத் தட்டும் நேரத்தில் 'கிளாமர் கர்ல்'களாக விளங்கும் அப்ஸர மாதர்களைப் பேட்டி கண்ட கதையைக் கன சுவாரசியமாக எழுதலாம். பத்திரிகை ஆசிரியர்கள் அவற்றைத் தங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்க, 'நான் முந்தி, நீ முந்தி' என்று அடித்துப் பிடித்துக் கொண்டு வருவார்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். மேற்சொன்ன விஷயங்களில் மனத்தைச்



செலுத்துங்கள். கிலுகிலுப்பை விஷயத்தை அடியோடு மறந்து விடுங்கள்!'' என்றேன்.

''ஐயையோ! நான் அந்த விஷயத்தை ஒருநாளும் மறக்க முடியாது. அந்தக் கிலு கிலுப்பைதான் எனக்கு மேனகை கொடுத்த சாபம். சகுந்தலைக்கு நான் கொடுத்த சாபத்துக்குப் பழிக்குப் பழி. அந்தக் கிலு கிலுப்பைதான் என் மூளையைக் கலக்கிவிட்டது. எப்பொழுது பார்த்தாலும் என் காதுகளில் கிலு கிலுப்பையின் 'கிலு, கிலு' நாதம் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது!'' என்றார் துர்வாசர்.

இப்படிச் சொல்லிக் கொண்டே வந்த துர்வாசர் திடீரென்று கூக்குரலிட்டுக் கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டு ஒரேயடியாகக் குதிக்கலானார்.

விஷயம் என்னவென்றால், மணவாளனும் கன கருத்துடன் கிலுகிலுப்பைக் கதையைக் கேட்டுக் கொண்டிருந்தான். இந்தச் சமயம் பார்த்து, அவன் பையிலிருந்து எலிகள் வெளிக் கிளம்பி மகரிஷி துர்வாசர் மீது படையெடுத்து

விட்டன; இரண்டு அவரது தோள்களில் ஏறிக் கொண்டன. இரண்டு அவரது ஆடைகளுக்குள் புகுந்து கொண்டன. முனிவர் குதித்த குதியில் மூன்று எலிகள் கீழே விழுந்து விட்டன. ஆனால் ஒன்று மட்டும் எங்கே ஒளிந்து கொண்டதோ, தெரியவில்லை! கண்டு பிடிக்கவும் முடியவில்லை. மணவாளன் மிகச் சிரமப்பட்டுக் கீழே விழுந்த மூன்று எலிகளையும் மகரிஷியின் கால் மிதிபட்டுச் சாகாமல் காப்பாற்றி விட்டான்.

"அடே பயலே! நீ பெரிய துஷ்டனடா!" என்றார் துர்வாசர், கடுகடுத்த குரலில்.

அனந்தனுக்கும் பயமாய்ப் போய்விட்டது, எங்கேயாவது தன் மகனுக்குத் துர்வாசர் சாபம் கொடுத்துவிடுவாரோ என்று. எனவே, கொதித்து எழுந்து, "ஜாக்கிரதை, முனிவரே! ஜாக்கிரதை! என் பையனுக்குச் சாபம் கீபம் கொடுத்தால், உன்னைத் தொலைத்துத் தலைமுழுகி விடுவேன்!" என்றான்.

துர்வாசர் மீண்டும் எழுந்து குதிக்கத் தொடங்கி விட்டார். அவனது அந்த ஆத்திரப்பேச்சை அவர் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. அந்தப் பொல்லாத நான்காவது எலி, மகாமுனிவரான துர்வாசரின் தாடிக்குள்ளே போய்ப் புகுந்து கொண்டு விட்டதுதான் அதற்குக் காரணம்.

மணவாளன் பாய்ந்து அவர் தாடிக்குள் அடைக்கலம் புகுந்த எலியை வெளியே எடுத்தான். எலியை எடுத்தவன், "ஏன் அப்பா! இவர் தாடிக்குள்ளிருந்து 'கிலு, கிலு'வென்று சப்தம் வருகிறது?" என்று கேட்டான்.

நானும் தாவி யெழுந்து, "'கிலு, கிலு' சப்தமா? என்னடா சொல்கிறாய்?" என்று கேட்டேன். பிறகு துர்வாசரைப் பார்த்து, "முனிசிரேஷ்டரே! ஒரு தடவை உங்கள் தாடியைப் பலமாக உதுக்குங்கள். பார்ப்போம்!" என்றேன்.

துர்வாச முனிவர் தமது தாடியை உலுக்கினார். அவரது அடர்ந்த தாடியைத் துளைத்துக் கொண்டு இலேசான சப்தம் வந்தது: 'கிலு, கிலு'. ஆடலழகி மேனகையின் சலங்கை ஒலி வெகு தூரத்திலிருந்து கேட்பதைப் போல் இருந்தது அந்தக் 'கிலு, கிலு' சப்தம்.

அனந்தன் அருகில் ஓடிச் சென்று முனிவரது தாடிக்குள் கைவிட்டுத் தேடலானான். முனிவர், "அடேடே! வலிக்கிறது, அப்பா!" என்று கூச்சலிட்டார்.

ஆனால் அவர் கூச்சலை யார் அங்கே கேட்டார்கள்? நான் அவரது தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டேன். அனந்தன் சிடுக்கேறிய அவரது தாடியை நீக்கி, உள்ளிருந்து கிலுகிலுப்பையை எடுத்தான். தங்கமா, வெள்ளியா, தகரமா பகவானுக்குத்தான் வெளிச்சம்; எதனால் ஆன கிலுகிலுப்பை என்று! அழுக்கேறி அது ஏகமாகக் கறுத்துப் போயிருந்தது. ஆனால் ஓசை மட்டும் சரியாக எழுப்பிக் கொண்டிருந்தது.

துர்வாசர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு, "இதைத்தான் கிரகங்களின் கோளாறு என்று கூறுகிறார்கள்!" என்றார். பிறகு மணவாளனின் தலையைக் கையினால் வருடியவாறு, "குழந்தாய்! நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன்; நீ அரசன் ஆவாய்!" என்றார் மகிழ்ச்சியுடன்.

"உங்களது இந்த ஆசீர்வாதம் ஒரு நாளும் நிறைவேறாது, சுவாமி! இந்தக் காலத்தில் அரசன், ஆண்டி எல்லோருமே அழிந்து விட்டார்கள். அதனால் உங்கள் ஆசீர்வாதத்தில் ஒரு மாறுதல் வேண்டுமானால் செய்யுங்கள். 'இந்த ஆண்டுகளுக்கு மந்திரியாகக் கடவது' என்று சபித்தீர்களானால், அது ஒரு வேளை பலிக்கலாம்!" என்றேன்.

"சரி, அப்படியே ஆசீர்வதிக்கிறேன். ஆனால் ஒரு சந்தேகம். அரசன் இல்லாமல் ஒரு அரசாங்கமா? அது எப்படி நடக்கும்?" என்று கேட்டார் துர்வாசர்.

"இந்தநாட்களில் என்னவெல்லாமோ நடக்கிறதே. இது நடக்காதா? நவீன விஞ்ஞானம் செயலாற்றுபவர் இல்லாமலே செயல்கள் நிறைவேறுவதை நிரூபிக்கின்றது! எத்தனை உதாரணங்கள் உங்களுக்கு வேண்டும்? கோழி அடை காக்காமல் முட்டைகள் குஞ்சு பொரிக்கின்றன ....." என்று ஆரம்பித்தேன்;

"சரி சரி! நான் வருகிறேன். இது யாருடைய பொருளோ, அவர்களிடம் ஒப்படைத்து விட்டுப் பொறுப்பிலிருந்து விடுபட்டுச் சீக்கிரம் பிரும்மலோகம்போகிறேன்!" என்று சொல்லி எழுந்தார் துர்வாசர்.

"ஆமாம். இந்தக் கிலு கிலுப்பையை யாரிடம் ஒப்படைப்பீர்கள்?"

"ஏன்? பரத சக்கரவர்த்தியின் வழி வந்தவர்கள் யாருமே இவ்வுலகில் இல்லையா?"

'யாரும் இல்லை. பரத வம்சம்-அதாவது யுதிஷ்டிரர்-பரீக்ஷித்து வம்சம் மறைந்து விட்டது. அவருக்கு வாரிசாக நந்தர்கள், அங்கர்கள், மௌரியர்கள், ஆந்திரர்கள், குப்தர்கள் ஆகியோரும் அப்புறம் பட்டாணியர்கள், முகலாயர்கள், ஆங்கிலேயர்கள் முதலியவர்களும் போய்விட்டார்கள். பாரத ராஜ்யம் இப்பொழுது இரண்டு பிரிவாகப் பிரிந்து விட்டது. பெரியது பாரதியக் குடியரசு. சிறியது இஸ்லாமியப் பாகிஸ்தான் என்று வழங்கி வருகிறது!" என்றேன்.

"அது சரி, யாராவது சக்கரவர்த்தி—அரசர் என்று இருக்க வேண்டும் அல்லவா?" என்று கேட்டார் துர்வாசர்.

"இப்பொழுது இல்லையே! இரண்டு அரசாங்கங்களுக்கும் இரண்டு ராஷ்டிரபதிகள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். ஒருவர் தில்லியில் இருக்கிறார். இன்னொருவர் கராச்சியில் வசிக்கிறார். சட்டப்படி இவர்கள்தாம் கிலுகிலுப்பைக்கு உண்மையான வாரிசுகளாகிறார்கள். ஆனால் உங்களிடம் இருப்பதோ ஒரே கிலு கிலுப்பை. அதை யாருக்கென்று கொடுப்பீர்கள்? ஒருவருக்குக் கொடுத்தால், இன்னொருவர் யு. என். ஓ.வுக்குப் புகார் செய்வார். அல்லது கத்தியைக் காட்டி, 'போரிட்டுப் பெறுவோம் கிலுகிலுப்பையை!' என்று கோஷமிடத் தொடங்கி விடுவார். என்ன செய்வது?" என்றேன்.

துர்வாசர் சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். பிறகு திடுதிப்பென்று எழுந்து பாய்ந்து அறைக்கு வெளியே சென்றார். அவர் வேகமாகக் கங்கையை நோக்கி நடந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் கண் பார்வையிலிருந்து ஒரே யடியாக மறைந்தும் விட்டார்

**[ஆதாரம்: ஸ்ரீபரசுராமின் வங்காளிக் கதை]**





# குருவே தெய்வம்

கு. பஞ்சாபகேசன்

ஓட்டுத் திண்ணையை ஒட்டியிருந்த ஜன்னல் வழியே பார்த்தான் சிறுவன். அவனுடைய ஆசிரியர் தமது வீட்டு மேஜைக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டு, புகையுடன் மினுக்கும் ஹரிக்கேன் விளக்கொளியில் மாணவர்களது வியாசப் புத்தகங்கள் யாவற்றையும் திருத்திக் கொண்டிருந்தார். திருத்தப் படவேண்டிய நோட்டுப் புத்தகங்கள் இன்னும் மலைபோல் ஆசிரியர் எதிரே குவிந்து கிடந்தன. வகுப்பின் நாலு பிரிவு மாணவர்கள் அத்தனை பேர்களுடைய நோட்டுப் புத்தகங்களையும் திருத்தியாக வேண்டுமே.

மாதவனுடைய வகுப்பு ஆசிரியர் தான் அவனுக்கு 'டியூஷன்' ஆசிரியரும் கூட. தினசரி இரவு எட்டு மணிக்கு அவர் வீட்டுக்குப் பாடம் சொல்லிக் கொள்ளப் போக வேண்டும் அவன். மாலை வேளை முழுவதும் நன்றாக ஓடி ஆடி விளையாடிவிட்டு, இரவில் மூக்குமுட்டச் சாப்பிட்ட பிறகு, ஆனந்தமான தூக்கம் வரும் வேளையில் இப்படிப் பாடம் சொல்லிக் கொள்ள வர வேண்டியிருக்கிறது. மாதவனுக்கு இந்த நித்திய கருமத்தில் கொஞ்சம் கூடப் பிடித்தம் கிடையாது. ஆனாலும் வாத்தியார் மிகவும் நல்லவர். அவர் கடிந்து அவனிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டார்.

"உனக்குத் தூக்கம் வருகிறதா, மாதவா? கொஞ்சம் தண்ணீர் கொண்டு வருகிறேன். கண்களையும் முகத்தையும் துடைத்துக் கொள். தூக்கம் கலைந்து விடும்..." என்று அன்போடு சொல்லுவார்.

மாதவன் ஜன்னல் வழியே ஆசிரியரைப் பார்த்தான். மூக்கின் நடுவில் வந்து இறங்கியிருந்த மூக்குக் கண்ணாடி; கோடுகள் நிறைந்திருந்த விசாலமான நெற்றியில் துளிர்த்திருந்த வியர்வை; மெலிந்த தேக அமைப்பு.—ஆனால் இவ்வளவிலும் எத்தனை உற்சாகமாக அவர் நோட்டுப் புத்தகங்களைத் திருத்திக் கொண்டிருந்தார்!

நேற்றே மாதவனுக்கு மெதுவாக ஞாபகப்படுத்தியிருந்தார், அந்த மாத 'பீஸை'ப் பற்றி. கொடுக்க வேண்டிய தேதி கழிந்து ஒரு வாரம் கூட ஆகி விட்டது. அவரும் அப்படி ஞாபகப் படுத்தக் கூடியவரல்ல. வறுமையில் செம்மையின் வடிவமாக இருந்தவர் அவர். ஆனாலும் நேற்று இரவு, மாதவன் படிக்க வந்திருந்த போது—பாடத்தின் நடுவில், "ஏன், மாதவா! உன் அப்பா ஊரில் இருக்கிறாரா?" என்று கேட்டார் ஆசிரியர்.

"இல்லையே, ஸார்! காரியாலய அலுவலாக வெளியூருக்குக் 'காம்ப்' போயிருக்கிறார்" என்றான் மாதவன்.

"அடிக்கடி அவர் வெளியூர் போவார் போலிருக்கிறது!"

"ஆமாம், ஸார்! மாசத்தில் நாலு நாட்கள் வீட்டில் தங்கினாலே அதிகம்."

"உன் அப்பா வந்ததும் உடனே என்னிடம் சொல்லு, மாதவா..!"

"சொல்கிறேன், ஸார்! ஏன் ஸார், ஏதாவது காரியம் ஆகவேணும்னு..."

"ஒன்றுமில்லை, மாதவா! இந்த மாத 'பீசை' வந்து வாங்கிக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். குழந்தை 'லொக் லொக்' என்று இருமுகிறது, பார்! அதற்கு மருந்து வாங்க வேண்டும்..."

"வீட்டுச் செலவுக்கெல்லாம் அம்மாவிடம் பணம் இருக்கும், ஸார்! நாளைக்கு வருகிறபோது கண்டிப்பாக வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்றான் மாதவன் தீர்மானமாக.

"அது கிடக்கட்டும், மாதவா! நீ பாடத்தைக் கவனி..." என்று சொல்லி விட்டார் ஆசிரியர். கடமை உணர்ச்சியின் மூலம் அவருக்கு அவரையே மறக்க வைப்பது சுலபமாகப் போய் விட்டது.

ஆனால் இன்று ஒட்டுத் திண்ணையருகில் தயக்கத்துடன் மாதவன் நின்றதற்குக் காரணம், அவன் 'பீஸ்' கொண்டு வரவில்லை. ஆசிரியர் ஒன்றும் சொல்ல மாட்டார். அது அவனுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனாலும் உள்ளேயிருந்து குழந்தை கக்குவான் இருமலால் கஷ்டப்படும் குரல் இந்தச் சிறுவன் காதில் விழுந்து இவன் மனத்தைக் கலக்குகிறது. ஆசிரியருக்கு அது ஒரே குழந்தை. அதிலும் வெகு நாட்கள் குழந்தைப் பேறு இல்லாமல் மனம் வருந்தி, நடுவயது தாண்டியிருக்கும் இந்தப் பருவத்தில் அவருக்குப் பிறந்திருக்கும் அருமைப் பெண் குழந்தை அது. மூன்று வயது ஆகிறது குழந்தைக்கு.

பன்னிரண்டு வயதான சிறுவன் மாதவனுக்கு, மூன்று வயதான அந்த மகவு, 'பாவம் குழந்தை!' என்ற பாவனையில் பரிதாபமாக இருந்தது.

வெறுங் கையோடு உள்ளே எப்படிப் போவது? அவர் ஆவலோடு அல்லவா தன்னை எதிர்பார்த்திருப்பார்? ஏழே ரூபாய்கள்தான். அம்மாவைக் கேட்டதற்கு, 'என்னிடம் இப்போது பணமில்லை; இரண்டு நாட்களில் அப்பா வந்து விடுவார். தந்து விடலாம்' என்றாள். மாதவன் முரண்டினான். 'அப்படியானால் அப்பா வருகிற வரையில் நீ 'டியூஷன்' சொல்லிக் கொள்ளப் போக வேண்டாம்' என்றாள் அம்மா.

மாதவனுக்கு அது மனசாக வில்லை. பாடம் சொல்லிக் கொள்ள அவன் வந்து விட்டான்.

அவனும் அவன் அப்பாவுக்கு ஒரே பிள்ளை. அவன் நன்றாகச் சாப்பிட வேண்டும், நன்றாகப் படிக்க வேண்டும், வருங்காலத்தில் பெரிய மனிதனாகச் சகலரும் புகழும்படியாக வர வேண்டும். நல்ல திடகாத்திரமாக இருக்க வேண்டும் என்றெல்லாம் அவனுடைய தந்தையின் ஆசைகளுக்கு அபிமானமான ஒரே புத்திரன் மாதவன்.

'பாவம், ஆசிரியருக்கும் அப்படித்தானே இருக்கும்' என்ற எண்ணத்துடன் திண்ணையின் அருகில் தயங்கித் தயங்கி நின்றான் அவன்.

திடீரென்று ஆசிரியரின் குரல் கேட்டது. "யாரது அங்கே? திண்ணைக்கு அருகில் நிற்கிறது?"

மாதவன் பதில் சொல்லவில்லை.

மூக்குக் கண்ணாடியை உயரத் தூக்கி உற்றுப் பார்த்தார்.

"நீயா, மாதவனா? ஏன் வெளியில் நிற்கிறாய்? உள்ளே வா.. உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!"

மாதவனுக்குத் 'திக்' கென்றது. அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்! அவன் பணம் தந்ததும் கடைக்கு விரைந்தோடுவார்! இருமலுக்கு மருந்து வாங்கிக் கொண்டு வருவார்!

'சுவாமி, அப்பனே! என் பையில் 'திடும்' என்று ஒரு ஏழு ரூபாய்ப் பணம்



வந்து விடக்கூடாதா?' என்று நெஞ்சில் பரிதவித்துக் கொண்டே வீட்டுக்குள்ளே மெதுவாகப் போனான்.

ஆசிரியர் எதிரே உட்கார்ந்தான்.

"இன்றைக்கு வியாசத்தை நீ நன்றாக எழுதியிருக்கிறாய், மாதவா! என்னையும் அறியாமல் இத்தனை பெரிய பொருளைக் கொடுத்துப் பிள்ளைகளை வியாசம் எழுதச் சொல்லி விட்டோமே என்று எனக்குக் கவலையாக இருந்தது. ஆனால் எல்லாப் பையன்களும் ஜமாய்த்துத் தள்ளி யிருக்கிறார்கள். நீயும் அழகாக எழுதி யிருக்கிறாய். இதைச் சொல்ல உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றார் ஆசிரியர்.

மாதவனுக்கு ஆசுவாச மூச்சு வந்தது. அன்றைக்கு வகுப்பில் அவர் கொடுத்திருந்த வியாசப் பொருள், அவனையும், ஏனைய மாணவர்களையும் பொறுத்த மட்டில் அவர்களுக்கு எழுத எளிதாகத் தான் இருந்தது. 'கடவுள்' என்ற பொருள் பற்றி வியாசம் எழுதச் சொல்லி யிருந்தார். கடவுளைப் பற்றியா எழுதத் தெரியாது?

ஆசிரியர் சில நோட்டுப் புத்தகங்களிலிருந்து தாம் குறித்திருந்த பகுதிகளை மாதவனுக்கு வாசித்துக் காட்டினார்.

"கடவுள் தூணிலும் இருப்பார்; துரும்பிலும் இருப்பார். ஏழை, பணக்காரன் ஆகிய இரண்டு பேர்களின் வீட்டிலும் கூட இருப்பார் என்று மகா பாரதத்தில் சொல்லியிருக்கிறது."

"கடவுள் இல்லையானால் நமக்குச் சூரிய ஒளிகிடைக்காது; காற்றும்கிடைக்காது. மனிதனுக்குத் தாகத்தை ஏற்படுத்தி விட்டு, குடிப்பதற்காக இலவசமாகத் தண்ணீரையும் வைத்திருக்கும் அருள் கடவுள் ஒருவருக்கேதான் உண்டு."

ஆசிரியர் இவற்றைப் படித்துக் காட்டி விட்டு, மாதவனுடைய நோட்டுப் புத்தகத்தை எடுத்தார்.

"மாதவா! நீ உன்னையும் அறியாமல் எழுதி விட்டாய். 'ஒருவனுக்கு நோய் வருகிறது. அந்த நோய் குணமாகி விடுகிறது. ஆனால் அவனுடைய நோயைக் குணப்படுத்தியது வெறும் மருந்து மட்டுமல்ல; கடவுளுடைய அருள்தான் காரணம்.' என்று எழுதியிருக்கிறாய். ஆகா! குழந்தைகளுக்குத்தான் எத்தனை அறிவு! எனக்குக் கூடச் சிறு வயதில் இப்படிப் 'பளிச் பளிச்' சென்று தோன்றியது உண்டு. ஆனால் இந்த வயதில் அதையெல்லாம் பற்றி எண்ணிப் பார்க்கக் கூடத் திடச் சித்தம் கிடையாது...."— சொல்லிக் கொண்டே வந்தபோது ஆசிரியருடைய கண்களில் நீர் நிறைந்து விட்டதைப் பார்த்தான் மாதவன். மெதுவாகச் சொன்னான்:

"ஸார்! முன்பு ஒரு முறை எனக்கு உடம்பு சரியில்லாமல் இருந்தபோது அப்பா நிறைய மருந்து வாங்கிக் கொடுத்தார். அம்மாவோ சதா என் அருகில் உட்கார்ந்தவண்ணம் முருகப் பெருமானை மனமுருக வேண்டிக் கொண்டிருந்தாள். அந்த ஞாபகத்தில் எழுதினேன் சார்!"

உள்ளே குழந்தை அசாத்தியமான வேகத்தில் இருமும் சத்தம் கேட்டது.

"இன்றைக்குப் பாப்பாவுக்கு இருமல் அதிகம். சரி, மாதவா! நாம் பாடத்தைப் பார்க்கலாம்."

"ஸார்!"

"என்ன மாதவா?"

"பணம் கொண்டுவரவில்லை ஸார்! அம்மாவிடம் இல்லை. அப்பா ஊரிலிருந்து வந்ததும்..."

"அதற்கென்ன? அப்புறம் வாங்கிக் கொள்கிறேன். பாடத்தைக் கவனி."

மறுநாள் இரவு மாதவன் படிக்க வந்தபோது முதல் காரியமாக ஆசிரியர் கையில் ஏழு ஒற்றை ரூபாய்களை வைத்






தான். பணத்துடன் அவனுடைய கையைத் தொட்ட ஆசிரியர் மாதவனுக்கு நல்ல ஜுரம் காய்ந்து கொண்டிருப்பதை உணர்ந்தார்.

''என்ன மாதவா ஜுரம் அடிக்கிறதா? ஏன் வரவேண்டும் இந்த ஜுரத்தில்?''

''சாதாரணக் காய்ச்சல்தான், சார்! என் அப்பா மாலையில்தான் ஊரிலிருந்து திரும்பி வந்தார். பணம் வாங்கிக் கொண்டு வந்தேன்.''

''நீ முதலில் உட்காரு. பணத்துக்கு என்ன அவசரம் இப்போது? உன்னைப் போல்அறிவும் உணர்ச்சியும் உள்ள: பையனிடத்தில் என், பண நெருக்கடியைப் பற்றி நான் சொல்லியிருக்கவே கூடாது! அடாடா! கண்ணெல்லாம் சிவந்திருக்கிறதே! உனக்கு இப்படி ஜுரம் அடிக்கிறபோது உன்னை எப்படி வீட்டிலிருந்து புறப்பட அனுமதி அளித்தார்கள்?''



இப்பொழுது மாதவனிடமிருந்துதடுமாறிப் பதில் வந்தது:

''வீட்டில் யாருக்கும் ஜுரம்னு தெரியாது, ஸார்! யாரிடமும் ஜுரம் என்று சொல்லவில்லை!''

ஆசிரியர் உள்ளே குரல் கொடுத்துத் தமது மனைவியை அழைத்தார். அவள் வந்து தொட்டுப் பார்த்தவள், 'உடனே அவனைக் கொண்டு போய் டாக்டரிடம் காட்டுங்கள். காமாலை ஜுரம் மாதிரி இருக்கிறதே! ஏண்டா, தம்பி, ஜுரத்தோடா எங்களுக்குப் பணம் கொண்டு வரவேண்டும்?' என்று பரிதவித்தாள்.

இதற்குள் மாதவன் கண்களை மூடி மேஜையின் மேல் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு விட்டான் ஜுர வேகத்தில்.

ஆசிரியர் பதறிக் கொண்டு எழுந்து, ''அவனைப் படுக்க வை. நான் ஓடிப் போய் ஒரு வண்டி கொண்டு வருகிறேன்'' என்று புறப்பட்டார். சட்டையை மாட்டிக் கொண்டு பையில் மாதவன் கொண்டு வந்திருந்த ஏழு ரூபாய்களையும் எடுத்துப் போட்டுக் கொண்டார்.

சற்று நேரத்தில் வண்டியில் மாதவனைக் கிடத்திக் கொண்டே டாக்டரின் இல்லத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டார் ஆசிரியர்.

அவர் மனைவியின் குரல் வீட்டு வாசலிலிருந்து கேட்டது. ''ஜாக்கிரதை! அவனை வீட்டில் சேர்ப்பித்த பிறகே வாருங்கள். அவர்களுக்கு அவன் ஒரே மகன்'' என்றாள்.

உள்ளே வீட்டின் ஓர் அறையிலிருந்து அவர்களின் ஒரே அருமை மகவு ஓயாமல் இருமிக் கொண்டே இருந்தது. சோதனை, அவர்களுக்கு இரு பக்கமும் விஷவாயுள்ள சர்ப்பம் மாதிரி வந்துற்றது: ஒரு பக்கம் அவர்கள் ஒரே குழந்தைக்கு இருமல்; இன்னொரு பக்கம் கடமையைச் செலுத்துமிடத்தில் மற்றவரின் ஒரே ஆசை ஜீவனுக்கு ஜுரம்.

டாக்டர் இரண்டு மூன்று இன்செக்ஷன்கள் செய்தார். உயர்தரமான மருந்து ஒன்று, மாத்திரைகள் எழுதித் தந்தார். அவ்வளவையும் வாங்கிக் கொண்டு ஆசிரியர் மாதவனுடன் வண்டியில் அவன் வீட்டுக்குப் புறப்பட்டார். பேசக்கூடச்சக்தி யில்லாமல் அவருடைய மாணவன் அவர் மடியில் துவண்டு கிடந்தான். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று கை நரம்புகள் வலிக்கக் கரும்பலகையில் எழுதி எழுதிக் கற்பித்திருந்த ஆசிரியருக்கு இப்போது தமது மாணாக்கனுக்கு நேர்ந்துள்ளதைக் கண்டு ஏற்பட்ட மன நோய் தாங்க முடியாதபடி இருந்தது. அவன் கொண்டு வந்த பணத்திலேயே கிட்டத்தட்ட ஆறு ரூபாய் வரையில் மருந்து வாங்கி விட்டார், ஊசியும் மாத்திரையுமாக.

ஆனால் மருந்தா பிரதானம்? மருந்துக்கும் வித்தான அவன் அல்லவா பிரதானம்? 'கடவுள்' பற்றிய வியாசத்தில் இந்தக் குழந்தை எழுதியது எத்தனை உண்மையான, மேன்மையான வாசகம்! ''ஆறுமுகா! வந்தது போனது தெரியாதபடி இந்தச் சிறுவனின் நோயைக் குணப்படுத்தி விடு'' என்று தமது இதயத்தில் எழுந்த பிரார்த்தனையைச் செலுத்திக் கொண்டார் அவர்.

வண்டி மாதவனின் வீட்டை அடைந்தது. தங்கள் மைந்தனை இந்த நிலையில் கண்ட பெற்றோர்கள் மிகவும் கலவரம் அடைந்து விட்டனர்.

கட்டில் மெத்தையில் மாதவனைக் கிடத்தினார்கள். அவன் தகப்பனாரின் குரல் ஆசிரியரை நோக்கிச் சீறியது.

''இரண்டு நாட்களாகப் பணத்துக்குத் தொந்தரவு பண்ணினீராமே? ஏழு

"ஒரு நூறு ரூபாய் பணம் இருந்தால் கொடுத்து உதவுங்கள். உங்களுக்கு ஆபத்து வரும்போது நான் உதவி பண்ணுகிறேன்!"



"வேண்டாம் சார்! உங்ககிட்டே பணம் கொடுத்துவிட்டு, ஆபத்தையே நான் எதிர் பார்த்து உட்கார்ந்திருக்க வேணும்!"

ரூபாய்க் காக எங்கே ஐயா போய் விடும்? தனக்கு ஜுரம் என்றுகூடப் பாராட்டாமல், ஜுரத்தைப் பற்றி எங்களுக்குக்கூடச் சொல்லாமல் குழந்தை உங்களிடம் ஓடோடியும் வந்திருக்கிறான். இது உமக்கே நன்றாயிருக்கிறதா?" என்றார்.

ஆசிரியருடைய கண்களில் கண்ணீர் திரையிட்டது. அவர் ஒன்றுமே பேசாமல் மருந்துபுட்டிகளையும், இஞ்செக்ஷன் டியூபுகளையும் மேஜையின் மேல் வைத்தார். தம்மிடம் மீதமிருந்த ஒரு ரூபாய் பணத்தையும் வைத்தார். புறப்பட்டு விட்டார். அறை வாசற்படிவரை போனவர் திரும்பிச் சொன்னார்:

'மாதவனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அவன் கொண்டு வந்த பணத்தில் மருந்துச் செலவு போக மீதத்தை மேஜையின் மேல் வைத்திருக்கிறேன்." — இவ்வாறு கூறி விட்டு மேலே நடந்து விட்டார்.

வேகமாக வீட்டை நோக்கித் திரும்ப நடந்து கொண்டிருந்தார். என்ன தோன்றியதோ, ஆலயத்துக்குச் சென்றார். 'உலகில் மருந்தெல்லாம் ஆறுமுகமான பொருள்தான்' என்று முருகப் பெருமான் சன்னிதியில் தொழுதுவிட்டு, தமது வீட்டை நோக்கி நடந்தார்.

மறு நாள் இரவு. மாதவன் பாடம் சொல்லிக் கொள்ள வரும் அதே நேரம். ஆனால் மாதவன் இன்று வரமாட்டான். அவனுக்கு உடம்பு எப்படி இருக்கிறதோ என்று நினைத்துக் கவலைப்பட்ட வண்ணம் இருந்தார் ஆசிரியர்.

அவர் குழந்தைக்கு அன்று இருமல் எத்தனையோ தேவலே. மாதவனுக்கு அவர் மருந்து வாங்கிக் கொடுத்த போது, தமது குழந்தைக்கும் கூட ஆத்மாவின் தூய பாஷையில் வாங்கிக் கொடுத்து விட்டார் அல்லவா?

வாசற் கதவு தட்டும் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தார் ஆசிரியர்.

மாதவனின் அப்பா வாசலில் நின்று கொண்டிருந்தார்.

"நீங்களா? வாருங்கள், வாருங்கள்! மாதவனுக்கு எப்படி இருக்கிறது உடம்பு?" என்று கேட்டார் ஆசிரியர்.

"எவ்வளவோ தேவலே. இப்போது நின்று பேச நேரமில்லே. உடனே புறப்படுங்கள். உங்களை உடனடியாகப் பார்க்க வேண்டும் என்று அவன் பிடிவாதம் செய்கிறான். நேற்று நான் அவசரத்தில் சொன்னதை மனத்தில் வைத்துக் கொள்ளாதீர்கள்!" என்றார் அவர் பதற்றத்துடன்.

ஆசிரியரும் உடனே புறப்பட்டார்.

மாதவன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்திருந்தான். ஒரு நாள் ஜுரத்தில் எப்படி வாடிப் போய் விட்டான்!

ஆசிரியர் அவன் அருகில் சென்று உட்கார்ந்தார்.

"பாப்பாவுக்கு மருந்து வாங்கிக் கொடுத்தீர்களா?"—முதல் கேள்வியாக மெதுவாகக் கேட்டான் மாதவன்.

"வாங்கிக் கொடுத்தேன்டா! நீ இப்பொழுது உடம்பை அலட்டிக் கொள்ளாமல் படுத்துக் கொள்."

"சும்மா சொல்கிறீர்கள், ஸார்! எனக்கு எல்லாம் தெரியும்" என்று புன்னகை செய்து கொண்டே படுத்துக் கொண்டான் மாதவன்.

சற்று நேரத்துக்கு முன்னால்தான் வந்து போயிருந்த டாக்டர், மாதவனுடைய தந்தையிடம், 'ஸார்! அந்த ஆசிரியர் ஒரு தெய்வம். நேற்றுப் பையனை அவர் உடனடியாக அப்படிக் கொண்டு வந்து காட்டியிருக்காவிட்டால், இன்று இவன் இப்படி எழுந்து உட்கார்ந்திருக்கவே மாட்டான்!' என்று சொன்னதை அவன் கேட்டுக் கொண்டுதானே இருந்தான்!

"ஸார்!"

"என்ன, மாதவா?"

"வியாசத்துக்கு என்ன மார்க்குக் கொடுத்தீர்கள் சார் எனக்கு?"

"எண்பது மார்க்கு போட்டிருக்கிறேன், மாதவா! போதுமா? இப்போது நீ பேசாமல் தூங்கு!" என்று கண்டித்த பாவனையில் கூறினார்.

மாதவனோ, ஸாருக்கு நூற்றுக்கு நூறு மார்க்கு கொடுத்து விட்டதாகத் தன் மனத்துள் கூறிக்கொண்டு தெளிந்த புன்னகை பூத்தான்.

**Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10**
**Managing Editor: T. Sadasivam**

# அடுத்தடுத்த வீட்டில் வசிப்பவர்கள்தாம்

# . . . ஆனாலும் ஆளுக்கு ஆள் தொலைதூரம் !

அடுத்தடுத்த வீட்டில் வசிக்கும் இவ்விருவர் தோற்றத்திலும் உடையிலும் ஒருவரையொருவர் ஒத்திருப்பதுபோலத் தோன்றலாம். எனினும், ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரசி, மனோநிலையில் அவர்கள் பெரிதும் மாறுபட்டவர்களாக இருக்கக்கூடும்.

அடுத்தடுத்து வாழும் மக்களின் ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்வது ஒரு ஸ்வாரஸ்யமான காரியம். ஹிந்துஸ்தான் லீவர் கம்பெனியிலுள்ள நாங்கள், நவீன விஞ்ஞான சாதனமாகிய விற்பனைத் துறை ஆராய்ச்சியின் மூலம், பொதுமக்களின் தேவைகள், இலட்சியங்கள், விருப்பு வெறுப்புக்கள் எல்லாவற்றையும் ஆராய்கிறோம். மேன்மேலும் உங்களை அறிந்துகொள்வதற்கும், உங்கள் ரசனைக்கும் வருவாய்க்கும் வாழ்க்கை முறைக்கும் ஏற்ற சாமான்களை தயாரிப்பதற்கும் அவை வழிகாட்டுகின்றன.

மேற்கூறிய வழிகளில் நீங்கள் எமக்கு இடைவிடாது ஆலோசனை வழங்கி வருகிறீர்கள், வழிகாட்டுகிறீர்கள்—என்ன இருந்தாலும் நாங்கள் உற்பத்தி நிகழ்த்திவருவதே உங்களுக்காகத்தானே !

**குடும்பந்தோறும் தழைத்தோங்க**
**ஊழியம் புரிவது ஹிந்துஸ்தான் லீவர்**



HLL. 10-50 TM

